அறிமுகக் களக்கையேடு

# இராமநாதபுரம் மாவட்டப் பறவைகள்



இராமநாதபுரம் வனஉயிரின கோட்டம்
தமிழ்நாடு வனத்துறை

Ramanathapuram Wildlife division
TamilNadu Forest Department

அறிமுகக் களக்கையேடு

# இராமநாதபுரம் மாவட்டப் பறவைகள்

இராமநாதபுரம் வனஉயிரின கோட்டம்

தமிழ்நாடு வனத்துறை

Ramanathapuram Wildlife division
Tamil Nadu Forest Department

அறிமுகக் களக்கையேடு

# இராமநாதபுரம் மாவட்டப் பறவைகள்

## ஆலோசகர்கள்

திரு. டின்கர் குமார், இ.வ.ப.
தலைமை வனப்பாதுகாவலர், விருதுநகர் மண்டலம்

திரு. அ.சோ.மாரிமுத்து, இ.வ.ப.
வன உயிரின காப்பாளர்
மன்னார் வளைகுடா கடல்வாழ் உயிரின தேசியப் பூங்கா, இராமநாதபுரம்

திரு. சு. சதீஷ்
வனச்சரக அலுவலர்
வனஉயிரின சரக அலுவலகம், இராமநாதபுரம்

## ஆசிரியர்கள்

க. செல்வகணேஷ்

தி. அருள்வேலன்

வெ. இராஜராஜன்

ப. ஜெகநாதன்

## தயாரிப்பில் உதவி

மி. அந்தோணி அனிஸ்டா

## புத்தக வடிவமைப்பு

வெ. பாலாஜி

## மெய்ப்புத்திருத்தம்

கி. ஆஷா

## பதிப்பு

இராமநாதபுரம் வனஉயிரின கோட்டம்
தமிழ்நாடு வனத்துறை

A field guide to

**Birds of Ramanathapuram District**

**Advisors and Project Coordinators**

Mr. Dinkar Kumar, I.F.S
Chief Conservator of Forests, Virudhunagar Circle

Mr. A.S. Marimuthu, I.F.S
Wildlife Warden, Gulf of Mannar Marine National Park,
Ramanathapuram

Mr. S. Sathish
Forest Range Officer, Ramanathapuram Wildlife Range

**Authors**

K. Selvaganesh

T. Arulvelan

V. Rajarajan

P. Jeganathan

**Volunteer**

Antony Anista M

**Layout & Design**

V. Balaji

**Text Proofing and editing**

K. Asha

**Published by:**

**Ramanathapuram Wildlife division**

**TamilNadu Forest Department**

**திரு. டின்கர் குமார், இ.வ.ப.**
*தலைமை வனப்பாதுகாவலர்*



# வாழ்த்துரை

பறவைகள் நமது சுற்றுச்சூழலில் மிகவும் முக்கியமானதொரு பங்கு வகிக்கின்றன. பறவைகளைப் பற்றிய நூல்கள் நடப்பு காலங்களில் மட்டுமில்லாமல் எதிர்கால சந்ததியினருக்கும் குறிப்பிட்ட பகுதியின் உயிர்ப்பன்மையத்தைப் பற்றி அறிந்துகொள்வதற்கு ஏதுவாக அமையும்.

இராமநாதபுர மாவட்டத்தில் மன்னார் வளைகுடா கடல்வாழ் உயிரின தேசியப் பூங்கா, பறவைகள் சரணாலயங்கள், அலையாத்திக் காடுகள், வறண்ட இலையுதிர்க் காடுகள், முட்புதர்க் காடுகள் போன்ற பன்முகத்தன்மை கொண்ட வாழ்விடங்கள் உள்ளன. இங்குள்ள பறவைகளைப் பற்றிய விவரங்களைப் பதிவுசெய்வது வரவேற்கத்தக்க முயற்சியாகும்.

இந்தக் களக்கையேட்டை உருவாக்க உற்சாகமாகப் பணியாற்றிய வனஉயிரின காப்பாளருக்கும், வனச்சரக அலுவலர்களுக்கும், பறவை ஆர்வலர்களுக்கும் என் பாராட்டுகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இதுபோன்ற பதிப்புகள் பறவைகளுக்கு மட்டுமில்லாது மற்ற அரியவகை கடல் வாழ் உயிரினங்களுக்கும் வரும் காலங்களில் உருவாக்க சீரிய முயற்சிகளை மேற்கொள்ள என் வாழ்த்துகளைக் கூறிக்கொள்கிறேன்.



**திரு. டின்கர் குமார், இ.வ.ப.**
தலைமை வனப்பாதுகாவலர்
வனப்பாதுகாவலர் அலுவலகம்
விருதுநகர் மண்டலம்

**திரு. அ. சோ. மாரிமுத்து.இ.வ.ப**

*வனஉயிரினக் காப்பாளர்*



# முன்னுரை

இராமநாதபுரம் மாவட்டம் பொதுவாக வானம் பார்த்த பூமியாக, வறட்சி மாவட்டமாகக் கருதப்படுகிறது. ஆனால், இந்த மாவட்டத்தில் பல பெரிய குளங்கள், கண்மாய்கள் அமைந்துள்ளன. ஆண்டுதோறும் வடகிழக்குப் பருவமழையின்போது இந்தக் கண்மாய்கள், குளங்கள் அனைத்தும் நீரால் நிரம்பிவிடுகின்றன.

நாட்டின் பல பகுதிகளிலிருந்து ஏராளமான பறவைகள், இங்கு அமைந்துள்ள பறவைகள் சரணாலயங்களுக்கும், மன்னார் வளைகுடா தீவுப் பகுதிகளுக்கும் ஆண்டுதோறும் வந்துசெல்கின்றன. பல்வேறு காலநிலைகளில் வனத்துறையினரால் பறவை ஆர்வலர்களின் உதவியுடன் கணக்கெடுப்புகள் நடத்தப்பட்டுள்ளன. அவ்வாறு பதிவுசெய்யப்பட்ட 160 வகை பறவைகளுக்கான சிறப்பு தகவல்கள் இக்கையேட்டில் தரப்பட்டுள்ளது.

வனப்பணியாளர்கள் இந்தக் களக்கையேட்டினைப் பயன்படுத்தி பறவைகளைக் கண்டறிவதோடு மட்டுமில்லாமல் பொதுமக்களுக்கும், மாணவர்களுக்கும் பறவைகளைப் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும்.

இந்தக் களக்கையேடு சிறப்பாக உருவாகிட உற்சாகத்தோடு பணியாற்றிய இராமநாதபுரம் வனச்சரக அலுவலருக்கும், ஒத்துழைப்பு நல்கிய ஏனைய வனச்சரக அலுவலர்களுக்கும், ஒருங்கிணைத்து உதவிய வனப் பாதுகாவலருக்கும், தகவல்களை தயார்செய்ய உதவிய பறவை ஆர்வலர்களுக்கும் என் பாராட்டுகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திரு. அ.சோ.மாரிமுத்து.இ.வ.ப

வனஉயிரினக் காப்பாளர்

மன்னார் வளைகுடா கடல்வாழ் உயிரின தேசியப் பூங்கா

இராமநாதபுரம்

**திரு. சு. சதீஷ்**

*வனச்சரக அலுவலர்*



# நன்றியுரை

*இராமநாதபுரம் மாவட்டத்தில் சித்திரங்குடி, காஞ்சிரங்குளம், மேல்செல்வனூர், கீழ்செல்வனூர் தேர்த்தங்கல் மற்றும் சக்கரகோட்டை ஆகிய ஐந்து பறவைகள் சரணாலயங்கள் உள்ளன. மழைக்கால வலசைபோகும் பறவைகளுக்குச் சிறந்த புகலிடமாக இந்தப் பறவைகள் சரணாலயங்கள் திகழ்கிறது. இந்தப் பறவைகள் சரணாலயங்களிலும் மாவட்டத்தின் ஏனைய பிற பகுதிகளிலும் பறவைகள் கணக்கெடுப்பில் பதிவுசெய்யப்பட்ட 160 பறவைகளுக்கான களக்கையேடு இது.*

*இந்தக் கையேட்டினைத் தனித்துவமாக உருவாக்க வழிகாட்டுதல் அளித்த விருதுநகர் மண்டல தலைமை வனப்பாதுகாவலர் அவர்களுக்கும், இராமநாதபுரம் வனஉயிரின கோட்ட வனஉயிரின காப்பாளர் அவர்களுக்கும், இராமநாதபுரம் மாவட்ட வன அலுவலர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*களப்பணியில் ஒத்துழைப்பு நல்கிய, உதவி வனப்பாதுகாவலர் அவர்களுக்கும், கீழக்கரை, தூத்துக்குடி மற்றும் மண்டபம் வனச்சரக அலுவலர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.*

*இந்தக் கையேடானது பறவைகள் குறித்த பல தகவல்களை உள்ளடக்கியும் எளிமையாகவும் சிறப்பாகவும் இருக்க வேண்டும் என்பதற்காக நீண்ட நாட்கள் சீரிய தகவல்களைத் திரட்டிய ஆசிரியர்கள் திரு. செல்வகணேஷ், திரு. தி. அருள்வேலன், திரு. வெ. இராஜராஜன், திரு. ப. ஜெகநாதன், அவர்களுக்கும் எனது நன்றியையும், வாழ்த்துகளையும் தெரிவித்துக்கொள்கிறேன்.*

*ஒவ்வொரு ஆண்டும் பறவைகள் கணக்கெடுப்பில் வனத்துறையோடு இணைந்து பணியாற்றுகின்ற முனைவர் S. பாலச்சந்திரன் திரு. சு. சந்திரசேகர், திரு. பைஜு, திரு. ரவீந்திரன், திரு. விஷ்ணுசங்கர், டாக்டர் சுனில், திரு. அபிஷேக் மிமானி, திரு. சு. ஜெய்ஷங்கர், திரு. ராமமூர்த்தி குழுவினர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.*

*இந்தக் களக்கையேடு வனப்பணியாளர்களுக்கும், பறவையியலாளர்களுக்கும், மாணவர்களுக்கும் பறவைகளைப் பற்றிய அறிவையும் ஆர்வத்தையும் அதிகரிக்கும் கருவியாக அமையும் என்று நம்புகிறேன்.*

**திரு. சு. சதீஷ்**
வனச்சரக அலுவலர்
வனஉயிரின சரக அலுவலகம்
இராமநாதபுரம்

# பறவைகளின் உடல் பாகங்கள்



# நன்றி

இந்தக் களக்கையேடு உருவாகக் காரணமாக இருந்த தமிழக வனத்துறைக்கு எங்கள் நன்றி. ஆலோசனைகளைத் தந்துதவிய முதன்மை தலைமை வனப்பாதுகாவலர் திரு. டின்கர் குமார், இ.வ.ப. அவர்களுக்கும், வனஉயிரின காப்பாளர் திரு. அ. சோ. மாரிமுத்து, இ.வ.ப, அவர்களுக்கும் எங்கள் நன்றி. இந்தத் திட்டத்தை ஒருங்கிணைத்து அனைத்து வகையிலும் உதவிபுரிந்த வனச்சரகர் திரு. சு. சதீஷ் அவர்களுக்கும் எங்கள் நன்றி. இந்தக் கையேட்டுக்கு முகவுரை எழுதித் தந்ததுடன், அவரது பறவைக் குறிப்புகளையும் தந்துதவிய தமிழ்நாட்டின் முன்னோடி பறவை ஆர்வல ரான முனைவர் திரு. க. ரத்னம் அவர்களுக்கு எங்களது நன்றி.

இந்தக் கையேட்டின் முக்கிய அம்சமான பறவைகளின் படங்களைத் தந்துதவிய அனைத்து பறவை ஆர்வலர்களுக்கும், நண்பர்களுக்கும் எங்கள் நன்றி. கையேட்டில் உள்ள பறவைகளின் படங்களைச் சரிபார்த்துத் தந்த முனைவர் அஸ்வின் விஸ்வநாதன் அவர்களுக்கும் எங்கள் நன்றி. இராம நாதபுரம் பகுதிகளில் வழங்கப்படும் பறவைகளின் பெயர்களை அறிந்து கொள்ள உதவிய திரு. மாரியப்பன், திரு. ஸ்ரீ, திரு. மாரித்தங்கம் அவர் களுக்கும் நன்றி.

இந்தக் களக்கையேட்டில் பறவைகளைப் பற்றி மேலதிக விவரங்களை அறிய eBird இணையதளத்தின் உரலியைப் பயன்படுத்த அனுமதி அளித்த eBird திட்டக் குழுவினர் பிரைன் எல். சுலைவன் (Brian L. Sullivan), இயன் டேவிஸ் (Ian Davis) அவர்களுக்கும் எங்கள் நன்றி.

ஆசிரியர்கள்

# இந்தக் கையேட்டைப் பற்றி...

இராமநாதபுரம் மாவட்டத்தில் சுமார் 260 வகையான பறவைகள் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றில் பரவலாகத் தென்படும் 160 பறவைகளை அடையாளம்காண உதவும் வகையில் இந்தக் களக்கையேடு உருவாக்கப் பட்டுள்ளது.

## பறவைகளின் படங்கள்

பறவைகளை அடையாளம்காண உதவியாக இருக்கும் 674 வண்ணப் படங்கள் தரப்பட்டுள்ளன. இந்தப் படங்களில் 95 விழுக்காடுகள் பறவை களைப் பற்றிய அவதானிப்புகளை சேகரிக்கும் இணையதளமான ebird Indiaவில் (https://ebird.org/india/home) இருந்தே பெறப்பட்டது. பறவை களைக் களத்தில் அடையாளம் காணும் வகையில் பல கோணங்களில் இருந்து எடுக்கப்பட்ட படங்களும் (எ-கா. பறக்கும் நிலையில், பக்கவாட்டு நிலையில்), பாலின வேறுபாட்டைக் காட்டும் படங்களும், பறவைகளின் அங்க அடையாளங்களைக் காட்டும் வகையிலும் (எ. கா. அலகின் நிறம், காலின் நிறம்), வெளித்தோற்றத்தில் (அதாவது இறகுப் போர்வையில்) ஏற்படும் நிற மாறுபாடுகளை காட்டும் வகையிலும் (எ. கா. இனப் பெருக்க கால தோற்றம், முதிர்ந்த ஆனால் இனப்பெருக்கம் செய்யாத வேளையில் உள்ள தோற்றம், இளம் பறவைகளின் பல்வேறு நிலைகள்), பறவைகளின் பண்புகளைக் காட்டும் வகையிலும் (எ-கா. இரையை உண்ணும் முறை, கூடமைக்கும் முறை) படங்கள் தேர்வுசெய்யப்பட்டு இந்தக் கையேட்டில் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் ஒரே மாதிரியான தோற்றத்தை உடைய இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பறவைகளை எளிதில் பிரித்தறிய அவற்றின் படங்களை அருகருகே வைத்து அவற்றின் வித்தியாசங்கள் காண்பிக்கப்பட்டுள்ளது.

பெரும்பாலும் தென்னிந்தியாவில் (தமிழ்நாடு, கேரளா) எடுக்கப்பட்ட பறவைகளின் படங்களே இங்கே கொடுக்கப்பட்டுள்ளன. சரியான படங்கள் கிடைக்காத பட்சத்தில்தான் இந்தியாவின் வேறு பகுதிகளிலிருந்து எடுக்கப் பட்ட படங்கள் தரப்பட்டுள்ளது. ஆகவே சில வலசைவரும் பறவைகளின் இனப்பெருக்கக் கால இறகுத் தொகுதிகள் முழுமையடையாமல் ஆரம்ப நிலையில்தான் இருக்கும் (எ-கா. பேதை உள்ளான்).

## பறவைகளின் தமிழ்ப் பெயர்கள்

பறவைகளின் தமிழ்ப் பெயர்கள் திரு. க. ரத்னம் அவர்களின் தமிழ் நாட்டுப் பறவைகள், பறவைகளின் தமிழ் பெயர்கள் நூல்களில் இருந்தும், ப. ஜெகநாதனின் பதிப்பிடப்படாத பட்டியலில் இருந்தும் எடுத்தாளப் பட்டுள்ளது. மேற்கொண்டு இராமநாதபுரம் மாவட்டத்தில் வழங்கப்படும் பெயர்கள்யாவும் செல்வகணேஷ் அம்மாவட்டத்தில் உள்ள (குறிப்பாக நரிப்பையூர் சுற்றுப் பகுதிகளில்) பறவைகளின் பெயர்களைஅறிந்த பொதுமக்களிடம் கேட்டறிந்து கொடுக்கப் பட்டுள்ளது.

## பறவைகளின் ஆங்கிலப் பெயர்களும், வகைப்பாட்டியலும்

*பறவைகளின் ஆங்கிலப் பெயர்களும், வகைப்பாட்டியலின் வரிசையும் Praveen J., Jayapal, R., & Pittie, A., 2020. Checklist of the birds of India (v4.1) ஐத் தழுவிக் கொடுக்கப்பட்டுள்ளது. எனினும் இரண்டு பறவைகளின் பெயர்கள் முற்றிலுமாக மாற்றப்பட்டுள்ளது. எல்லா ஆங்கிலக் கையேடுகளிலும் கொடுக்கப்பட்டுள்ள Brahminy Kite இங்கு Red-backed Kite எனவும், Brahminy Starling இங்கு Black-headed Starling எனவும் வழங்கப்பட்டுள்ளது. அண்மையில் பறவை ஆர்வலர்களிடையே நடத்தப்பட்ட கருத்துக்கணிப்பின் அடிப் படையில் இப்பெயர்கள் மாற்றிக் கொடுக்கப்பட்டுள்ளன.*

## பறவைகளைப் பற்றிய விவரங்கள்

*பறவைகளின் உருவ அளவு Richard Grimmett, Carol Inskipp, Tim Inskipp எழுதிய Birds of the Indian Subcontinent களக்கையேட்டைப் பின்பற்றி தரப்பட்டுள்ளது.*

*உட்கொள்ளும் பொதுவான உணவு குறித்தும் கொடுக்கப்பட்டுள்ளது. வலசைப் பறவைகள் (Migratory birds) தென்னிந்தியாவுக்கு வலசைவரும் பொதுவான மாதம், மீண்டும் அவை இங்கிருந்து திரும்ப வலசைபோகும் மாதம் யாவும் ebird இணையதளத்தின் அடிப்படையில் (ebird barchart) தரப்பட்டுள்ளது.*

## பறவை பரவல் நிலப்படங்கள்

*பறவைகளின் பரவலைக் காட்டும் நிலப்படங்கள் (distribution maps) யாவும் ebird இணையதளத்தில் இருந்து தரவிறக்கம் செய்யப்பட்ட தரவு களின் அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ளது. இவற்றில் இராமநாதபுரம் மாவட்டத்தில் ஆண்டு முழுவதும் தென்படும் (அதாவது இங்கேயே கூடமைத்து இனப்பெருக்கம் செய்யும்) பறவைகளின் பரவலைக் குறிக்கும் நிலப்படங்கள் பச்சை நிறத்திலும், இப்பகுதிகளுக்கு நீண்ட தூரத்தில் இருந்து வலசைவரும் பறவைகளின் (long distance migrants) நிலப்படங்கள் நீல நிறத்திலும் தரப்பட்டுள்ளது. இந்த நிறங்களை வைத்தே பறவைகளை, இங்குள்ளவையா அல்லது வலசை வருபவையா என்பதை எளிதில் அறிய முடியும்.*

*இந்த நிலப்படத்தில் ஒரு குறிப்பட்ட பறவை இராமநாதபும் மாவட்டத் தில் எந்தெந்தப் பகுதிகளில் பார்த்து பதிவுசெய்யப்பட்டுள்ளது என்பதை அறிந்துகொள்வதற்காக இம்மாவட்டத்தின் மேல் 11 சதுர கி.மீ.க்கு ஒரு*






அறிந்துகொள்வதற்காக இம்மாவட்டத்தின் மேல் 11 சதுர கி.மீ.க்கு ஒரு கட்டம் (grid) வரையப்பட்டது. அந்தப் பகுதிக்குள் எங்காவது அந்தப் பறவை பதிவுசெய்யப்பட்டிருந்தால் அந்தக் கட்டம் நீலம் அல்லது பச்சை நிறத்தில் நிரப்பப்பட்டுள்ளது. அந்தப் பறவை அப்பகுதிக்குள் பார்த்து பதிவு செய்யப்படவில்லை எனில் அந்தக் கட்டம் சாம்பல் நிறத்தில் நிரப்பப் பட்டுள்ளது.

இங்கு நாம் புரிந்துகொள்ள வேண்டியது என்னவெனில் சாம்பல் நிறத்தில் கட்டம் இருந்தால் அந்தப் பறவை அங்கே இருக்காது என்று அர்த்தம் இல்லை. மாறாக அது அங்கே பார்த்து பதிவுசெய்யப்படவில்லை என்பதை அறிய வேண்டும். அது போலவே ஒரு பறவையின் பரவல் வரைபடத்தில் நீலம் அல்லது பச்சை நிறத்தில் மாவட்டம் முழுவதும் இருப்பின் அது அவற்றின் அபரிமிதத்தையோ (abundance), அடர்வையோ (density) குறிக்காது என்பதையும் நினைவில்கொள்ள வேண்டும்.




ஒரு பறவையின் பரவல் விவரம் தெளிவாகத் தெரிவதற்காக இந்தக் கட்டத்தின் அளவு 11 சதுர கி.மீ. ஆக வைக்கப்பட்டுள்ளது. இதையே 5 கி.மீ அளவுக்குக் குறைத்தால் (மேலே உள்ள நிலப்படத்தைக் காண்க) பல கட்டங்களில் (அதாவது பல இடங்களில்) பறவைகள் பட்டியல்கள் ஏதும் இல்லாமலிருக்கும் (No data). இந்தக் காலி இடங்கள் யாவும் மேற்கண்ட நிலப்படத்தில் வலைபோல குறிக்கப் பட்டுள்ளன.

இந்த நிலப்படம் வாயிலாக இராமநாதபுரம் மாவட்டத்தில் எங்கெங் கெல்லாம் அதிகமாகப் பறவைகள் பார்க்கப்பட்டு பதிவுசெய்யப்பட் டுள்ளது என்பதையும், எங்கெங்கெல்லாம் பறவைகள் பார்த்து பதிவிடவோ, கணக்கெடுக்கப்படவோ இல்லை என்பதை அறியலாம். இந்த விடுபட்டப் பகுதிகளில் எல்லாம் ஆண்டு முழுவதும் அல்லது எல்லா பருவ நிலை களிலும் தொடர்ந்து பறவைகளைப் பார்த்து பதிவிடுவதன் மூலமாகவே ஒரு குறிப்பிட்ட பறவையின் பரவலைத் துல்லியமாக அறிய முடியும்.

## eBird இணைய பக்கத்துக்கான விரைவுக் குறியீடு (QR Code for eBird webpage)

*இந்தக் கையேட்டில் ஒவ்வொரு பக்கங்களிலும் பறவைகளின் விவ ரங்கள் ஒரு விரைவுக் குறியீடாக (Q R Code) தரப்பட்டுள்ளது. இதை திறன் பேசியில் (smartphone) உள்ள தகுந்த செயலியை (Q R Code Scanner, Google Lens முதலான) கொண்டு துழாவினால் (scan) அந்தப் பறவை குறித்த மேலதிக விவரங்களை (ஆங்கிலத்தில்) கொண்ட ebird இணையதளத்துக்கு இட்டுச்செல்லும். இப்பக்கத்தில் அந்தப் பறவையின் பல்வேறு படங் களையும், அண்மைய பரவல் வரைபடத்தையும், அவற்றின் பதிவு செய்யப் பட்ட குரலோலிகளையும் கேட்கலாம்.*

## பறவைகள் தேர்வு செய்யப்பட்ட முறை

*eBird இணையதளத்திலிருந்து 2020 ஆண்டு, செப்டம்பர் மாதம் இராம நாதபுரம் மாவட்டத்துக்கான பறவைப் பட்டியல்கள் (eBird checklist) அனைத்தும் தரவிறக்கம் செய்யப்பட்டது. இந்தத் தரவு (data) பகுப்பாய்வு செய்யப்பட்டது. சமர்ப்பிக்கப்பட்ட பறவைப் பட்டியல்களில் முழுமை யானவற்றை மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டன. அதாவது ஒரு பகுதியில் இருந்து அவதானிக்கப்பட்ட அனைத்துப் பறவைகளையும் முடிந்தவரையில் அடையாளம் கண்டு, பட்டியலிட்டு, பறவைகளை நோக்கும் போது பயணித்த தூரம், பறவை நோக்கலில் ஈடுபட்டிருந்த நேரம் முதலிய தகவல்கள் மட்டும் இந்தப் பட்டியலில் காணப்படும். இந்த eBird பட்டியல் களில் இருந்து எந்தெந்த பறவைகள் அடிக்கடி பதிவிடப்படுகிறது (frequency of reporting) என்பது கணக்கிடப்பட்டுள்ளது. இந்த அடிப்படையில் இராம நாதபுரம் மாவட்டத்தில் அடிக்கடி பதிவுசெய்யப்பட்ட பறவைகளில் முதல் 160 வகை பறவைகளும் தேர்வுசெய்யப்பட்டன.*

## கடல்வாழ் பறவைகள்

*இந்தக் கையேட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தின் நிலப்பகுதி, உள் நாட்டு நீர்நிலைகள், கடலோரப் பகுதி ஆகிய வாழிடங்களில் தென்படும் பறவைகள் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளன. கடற்கரையை விட்டு சில கிலோமீட்டர் தொலைவு, கடலுக்குள் சென்றால் கடல்வாழ் பறவைகளை (Pelagic birds) காணலாம். இவை வெகு அரிதாகவே கடற்கரைப் பகுதி களுக்கோ, உள்நாட்டு நிலைகளுக்கோ வரும். இராமநாதபுரம் மாவட்ட கடல் பகுதிகளில் தென்படும் பறவைகளைப் பற்றிய தகவல்கள் மிகக் குறைவே. ஆகவே இது போன்ற பறவைகளை நோக்கவும், கணக்கெடுப்பு நடத்தவும் ஊக்குவிக்க வேண்டும்.*

*இக்கையேடு இப்பகுதியில் உள்ள பறவைகளைப் பற்றி அறிந்துகொள் வதற்கும், அவற்றைக் கணக்கெடுக்கும் வேளையில் அடையாளங்காணவும், பறவைகளைப் பார்த்து மகிழவும் உதவும். இக்கையேடு மாவட்ட வனத் துறையினருக்கும், ஆர்வமுள்ள அனைவருக்கும் பயன்படும் என நம்புகி றோம்.*




இராமனாதபுரம் மாவட்ட நிலப்படம்

## இராமநாதபுரம் மாவட்டம்: ஒரு சிறு குறிப்பு

சங்க கால நிலவமைப்பின் படி இராமநாதபுரத்தில் அமைந் திருப்பது பாலையும் (வறண்ட நிலப்பகுதி) நெய்தலும் (கடலும் கடலைச் சார்ந்த பகுதி) ஆகும். இந்தியா சுதந்திரமடைவதற்கு முன்பு இராமநாதபுரம் மாவட்டம் 1910ல் தற்போது உள்ள மதுரை, திருநெல்வேலி மாவட்டங் களின் சிறிய பகுதிகளையும், விருதுநகர், சிவகங்கா மாவட்டங்களையும் உள்ளடக்கியதாக இருந்தது. அதன் பிறகு 1985ல் தான் இப்பகுதிகள் மூன்று தனித்தனி மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டது.

இராமநாதபுரம் மாவட்டத்தின் பரப்பளவு 4175 சதுர கி.மீ. தமிழ் நாட்டின் கடலோர மாவட்டங்களில் ஒன்றான இராமநாதபுரத்தின் தெற் கிலும், கிழக்கிலும் வங்காள வளைகுடாவும், பாக் நீர்ச்சந்தியும், நிலப் பகுதியைச் சுற்றி மேற்கில் விருதுநகர் மாவட்டமும், வடக்கில் சிவகங்கை, புதுக்கோட்டை மாவட்டங்களும், தென்மேற்கில் தூத்துக்குடி மாவட்டமும் அமைந்துள்ளன.

இம்மாவட்டத்தில் மொத்தம் 22 தீவுகள் உள்ளன. இவற்றில் ஒன்றான பாம்பன் தீவு அல்லது ராமேஸ்வரம் தீவுக்கு 1914ல் இரயில் பாலம் கட்டப்பட்டது. இதுவே புகழ்பெற்ற பாம்பன் பாலம். அதன் பிறகு இத் தீவுக்கு 1988ல் மேம்பாலம் அமைக்கப்பட்டது.

## இராமநாதபுர மாவட்ட நீர்வளங்கள்

தமிழ் நாட்டில் மழை குறைவாகப் பெரும் மாவட்டங்களில் இராமநாத புரமும் ஒன்று. இம்மாவட்டத்தில் வைகை ஆறு, குண்டாறு, சருகணி ஆறு ஆகிய மூன்று முக்கிய ஆறுகள் ஓடுகின்றன. இங்கு வந்து கடலில் கலக்கும் வைகை ஆறு தன் முகத்தைக் காட்டுவதால் இராமநாதபுரம் மாவட்டத்திற்கு முகவை எனும் பெயரும் உண்டு.

மழையளவு குறைவாக இருக்கும் காரணத்தால் இம்மாவட்டத்தில் சிறியதும் பெரியதுமாக பல உள்நாட்டு நன்னீர்நிலைகளைக் காணலாம். வடகிழக்கு பருவ மழைதான் இங்கு அதிக மழை பொழிவைத் தரும். இம்மாவட்டத்தில் நீர்நிலைகளின் பரப்பளவு 73808 ஹெக்டேர் என ஒரு அறிக்கை கூறுகிறது. ஆயிரக்கணக்கான குட்டைகள், குளங்கள், கண்மாய் கள், ஊரணிகள், ஏரிகள் யாவும் இவற்றில் அடங்கும்.

19ஆம் நூற்றாண்டில் மதுரை உள்ளிட்ட தென் தமிழகப் பகுதிகளில் பதினோரு முறை பஞ்சத்தால் பாதிப்படைந்திருக்கிறது. பஞ்சத்தில் இருந்து மக்களைக் காக்க ஒரு குழு அமைக்கப்பட்டது. கேரளாவில் இருந்து தோன்றும் பெரியாறு ஆற்றின் கடலில் கலக்கும் உபரி நீரை வைகையுடன் சேர்த்து இராமநாதபுரம் பகுதிகளுக்கு பாசன வசதி ஏற்படுத்தவே முல்லைப் பெரியாறு அணை கட்டப்பட்டது.

மேற்குதொடர்ச்சி மலையில் உருவாகும் பெரியாறு மேற்கு நோக்கி பாய்கிறது, வைகை கிழக்கு நோக்கி பாய்கிறது, பெரியாற்றின் நீரை தென் தமிழகத்தின் பயன்பாட்டிற்கு கொண்டுவருவதற்காக ஆங்கிலேயர்கள் காலத்தில் இந்த அணை கட்டப்பட்டது. அங்கிருந்து கால்வாய்கள் மூலம் நீர் வைகை ஆற்றை அடைகிறது. பின்னர் நீர் கால்வாய்கள், வாய்க்கால்கள் வழியே இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள ஒவ்வொரு குளங்களையும் கண்மாய்களையும் நிறைத்து பின் கடலில் கலக்கிறது. பெரும்பாலும் கடலில் கலப்பதற்கு முன்பே வைகையின் நீர் முழுவதும் ஊரணிகளிலும், குளங்களிலும் கண்மாய்களிலும் சேமிக்கப்பட்டுவிடுகின்றன. உதரணமாக இராச சிங்கமங்கலத்தில் உள்ள பெரிய கண்மாய் வைகையாற்று, சருகனி யாற்றின் ஏற்படும் வெள்ளங்களைத் தடுத்து அந்த நீரை அருகில் உள்ள 72 குளங்களுக்கு பாய்ச்சும் வகையில் அமைக் கப்பட்டுள்ளது. எனவே வைகை கடலைக் அடைவது மிகவும் அரிதாகிவிட்டது.

மழைப்பொழிவு மிகவும் குறைவான நிலப்பகுதி ஆதலால், கிடைக்கும் ஒவ்வொரு துளி நீரையும் சேமிக்கும் விதமாக குளங் களும் கண்மாய்களும் அமைக்கப்பட்டுள்ளன. இந்த நீர் நிலைகள் மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் பல காட்டுயிர்களுக்கும் குறிப்பாக இவை பல வகையான பறவைகளுக்கு மிகவும் பயனுள்ளதாகிறது.

## இராமனாதபுரம் மாவட்டப் பறவைகளைப் பற்றிய குறிப்புகளும் ஆராய்ச்சிகளும்

இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள பறவைகள் குறித்த விரிவான குறிப்புகளும் ஆராய்ச்சிகளும் குறைவே. அப்படியே இருந்தாலும் பெரும் பாலும் அவை பெரும்பாலும் கடற்கரையோரப் பறவைகள் குறித்துதான். இப்பகுதியிலிருந்து பறவைகள் குறித்த விரிவான கட்டுரை சி. ஹச். பித்துல்ப் (Biddulph) எனும் ஆங்கி லேயரால் 1938ல் பாம்பே இயற்கை வரலாறு கழகத்தின் ஆய்விதழில் வெளியானது. இதில் இவர் இரேமேஸ்வரம் தீவில் 109 வகையான பறவைகளை பட்டியலிட்டுள்ளார். எனினும் இவற்றில் உள்ள ஒரு சில பறவைகள், இங்கு தென்படுவதற்கான சாத்தியங் கள் மிகக் குறைவே. உதாரணமாக அவர் பதிவு செய்த Yellowbrowed Bulbul எனும் பறவை மலைப்பாங்கான அடர்ந்த காடுகளிலேயே தென்படும்.

இதனையடுத்து தமிழ்நாட்டுப் பறவைகள் நூலின் ஆசிரியரும், தமிழ் நாட்டின் பறவை நோக்குவோரில் முன்னோடியான முனைவர் க. ரத்னம் அவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்தில் இருந்த போது இங்குள்ள பல வகையான பறவைகளைப் பற்றிய குறிப்புகளை எழுதி பட்டியலிட்டுள்ளார். இவர் சேதுபதி அரசு கலைக் கல்லூரியில் பணிபுரிந்த காலங்களில் இராம நாதபுரம் மாவட்டத்தின் பல பகுதிகளுக்குச் சென்று பறவைகளை பார்த்து பதிவு செய்துள்ளார். இவர் இம்மாவட்டத்தில் இருந்தபோது எடுக்கப்பட்ட குறிப்புகளில் (டிசம்பர் 1970ல் இருந்து ஜூலை 1974 வரையில்) சுமார் 172 வகையான பறவைகளை பார்த்து பதிவு செய்துள்ளார். இவரது பறவைக் குறிப்புகளும் பட்டியல்களும் archive.orgல் பதிவேற்றப் பட்டுள்ளது

*(https://archive.org/details/@dr_k_ratnam). இந்த குறிப்புகளின் அடிப் படையில் eBirdIndiaவில் (பறவை பட்டியலின் மூலம் தரவுகளை சேகரிக் கும் இணைய தளம்) பறவை பட்டியல்கள் பதிவேற்றப்பட்டுள்ளன.*

*ஆசிய நீர்ப்பறவைகள் கணக்கெடுப்பை Asian Waterbird Count (AWC) 1987ல் இராமநாதபுரம் மாவட்ட காட்டுயிர் கூட்டமைப்பு (Wildlife Association of Ramnad District WARD) இராமநாதபுரம் மாவட்டப் பகுதி களில் உள்ள நீர்நிலைகளில் நடத்தியது. எனினும் பறவைகள் குறித்த முழுமையான ஆராய்ச்சி இம்மாவட்டத்தில் நடத்தப்பட்டது பாம்பாய் இயற்கை வரலாற்று கழகத்தின் (Bombay Natural History SocietyBNHS) பறவையியலாளர் முனைவர். S.பாலச்சந்திரன் அவர்களால் தான். இந்தியப் பறவையியலின் முன் னோடிகளில் ஒருவரான சாலிம் அலி 1982ல் இராமேஸ்வரத்திற்கு வந்து, இப்பகுதி வலசை வரும் பறவைகளுக்கு குறிப்பாக பூநாரை களுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த இடம் என அறிவித்தார். இதன் அடிப்படையில் முனைவர். S.பாலச்சந்திரன் 1985 முதல் 1988 வரை மன்னார் வளைகுடா தேசிய கடல்சார் உயிரியல் பூங்கா பகுகளில் குறிப்பாக இராமேசுவரம் பகுதிகளில் வலசை வரும் பறவைகள் குறித்த ஆராய்ச்சிகளை மேற்கொண்டார். இதில் இவர் 187 பறவை வகைகளை பதிவு செய்தார்.*

## இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள பறவை வாழிடங்களின் முக்கியத்துவம்

*ஆர்க்டிக் பகுதிகளிலும், யுரேசியா கண்டத்தின் வட பகுதியிலும் கடுங் குளிர் நிலவும் காலங்களில் அங்குள்ள பல வகையான பறவை கள் குறிப்பாக கரையோரப் பறவைகள் (Shorebirds), கடல்காகங்கள் (Gulls), ஆலாக்கள் (Terns), வாத்துகள் (ducks), பூநாரைகள் (Flami ngos) முதலியவை, மத்திய ஆசிய வான்வழித் தடத்தின் (Central Asian Flyway CAF) வழியாக தென்னிந் தியாவிற்கு வலசை வரு கின்றன.*

*தமிழ் நாட்டின் கிழக்குக் கடற்கரையோரத்தில் உள்ள குறிப்பாக கடற் கரையோர மணல் திட்டுக்கள், தீவுகள், உப்பங்கழிகள், முகத்துவாரங்கள், அலையாத்திக் காடுகள் போன்ற பல வகையான வாழிடங்கள் இப்பறவை களுக்கு மிகவும் முக்கியமானதாகும். இவ்வகையான வாழிடங்களைக் கொண்ட பழவேற்காடு, கழிவெளி, வேதாரண்யம், கோடியக்கரை, மன்னார் வளைகுடா ஆகிய பகுதி களில் உள்ள வாழிடங்கள் யாவும் வெகு தூரம் பயணித்து வரும் இப்பறவைகளுக்கு தங்கிச் செல்லும் தாப்பாவும் (stopover site), போதிய உணவளிக்கும் பகுதிகளாவும் (feeding ground) விளங் குகின்றன.*

*தென்மேற்கு கடலோர பகுதிகளில் உள்ள இயற்கையான வாழிடங்களில் குறிப்பாக தமிழ்நாட்டில், கோடியக்கரைக்கு அடுத் தபடியாக இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள மண்டபம் பகுதி தான் அதிக பறவையினங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளது. குறிப்பாக மணல்திட்டுப் பகுதிகளிலும், அதனை ஒட்டிய இடங்களில் மட்டுமே தென்படும் சில எளிதில் காணக்கிடைக்காத*




இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள பறவைகள் சரணாலயங்கள்

பறவைகளான நண்டு தின்னி (Crab Plover), வெள்ளை உள்ளன் (Sanderling), பெரிய உள்ளான் (Great Knot), பட்டைவால் மூக்கான் (Bartailed Godwit) போன்ற பறவைகளை கணிசமான எண்ணிக்கையில் இங்கு காணலாம்.

மண்டபம் பகுதி 1980களில் சுமார் 50000 கடற்கரையோரப் பறவை களுக்குப் புகலிடமாக விளங்கியதாக (இவற்றில் பூநாரைகள் மட்டும் 13,000) ஒரு ஆராய்ச்சி குறிப்பில் மதிப்பிடப்பட்டுள்ளது. எனினும் கால போக்கில் வாழிட சீரழிவு, திருட்டு வேட்டை, நிலத்தடி நீர் குறைதல், நன்னீரில் உப்பு நீர் கலப்பு போன்ற பல காரணங்களால் பறவைகளின் எண்ணிக்கை குறையத் தொடங்கியது. உதாரணமாக 80களில் மதிப்பிடப் பட்ட 13000 பூநாரைகளின் எண்ணிக்கை படிப்படியாகக் குறைந்து 90களில் சுமார் 7000 ஆகவும் 052000ல் சுமார் 4000 ஆகவும் குறைந்தது.

கடல் சார்ந்த வாழிடங்கள் பல்வகையான வளர்ச்சித் திட்டங்களால் மென்மேலும் சீரழியாமல் பாதுகாத்தல், இவ்வகையான வாழிடங்களின் முக்கியத்துவம் குறித்து அனைவருக்கும் விழிப்புணர்வை ஏற்படுத்துதல், பறவைகளையும், அவற்றின் வாழிடங்களையும் பொதுமக்களின் துணை கொண்டு பாதுகாத்தல், தகுந்த கால இடைவெளியில் இந்த வாழிடப் பகுதிகளில் பறவை கணக்கெடுப்பை நடத்துதல் போன்றவை பரிந்துரைக் கப்பட்டுள்ளது.

இராமநாதபுரம் மாவட்டத்தில் கடல் சார்ந்த பகுதிகளைத் தவிர பல உள்நாட்டு நீர் நிலைகள், வறண்ட புதர் காடுகள், வெட்ட வெளிகள் என பல வகையான வாழிடங்களைக் கொண்டுள்ளது. இம்மாவட்டத்தில் சுமார் 377 கண்மாய்களும், ஊருணிகளும் இருப்பதாக அறியப்படுகிறது. இது போன்ற வாழிடங்களில் பல உள்நாட்டுப் பறவைகள் இனப்பெருக்கம் செய்கின்றன. இது போன்ற பல பகுதிகளிலும் பறவை நோக்கலையும், கணக்கெடுப்புகளையும் நடத்தினால் இம்மாவட்டத்தில் உள்ள பல வகையான பறவைகளின் பரவலையும், நிலையையும் தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.

## இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள பறவைகள் சரணாலயங்கள்

தமிழகத்தில் உள்ள வேறெந்த மாவட்டங்களையும் விட அதிகமான பாதுகாக்கப்பட்ட வாழிடங்களைக் கொண்டது இராமநாதபுரம் மாவட்டம். இங்கு பறவைகளுக்கென்றே ஐந்து சரணாலயங்கள் உள்ளன. இவை தவிர, மன்னார் வளைகுடா தேசிய கடல்சார் உயிரியல் பூங்காவும், மன்னார் வளைகுடா உயிர்க்கோள காப்பகமும் இம்மாவட்டத்தில் தான் அமைந் துள்ளது.

1. சித்திரங்குடி பறவைகள் சரணாலயம்
2. கஞ்சிரங்குளம் பறவைகள் சரணாலயம்
3. மேல்செல்வனூர்-கீழ்செல்வனூர் பறவைகள் சரணாலயம்
4. தேர்த்தங்கல் பறவைகள் சரணாலயம்
5. சக்கரக்கோட்டை பறவைகள் சரணாலயம்




A கஞ்சிரங்குளம் பறவைகள் சரணாலயம்
Kanjirankulam Bird Sanctuary

B சித்திரங்குடி பறவைகள் சரணாலயம்
Chitrangudi Bird Sanctuary

Bird Sanctuary Area
Eco Senstive Zone (ESZ)
Bird Sanctuary Prominent Points
ESZ Prominet Point

## கஞ்சிரங்குளம் பறவைகள் சரணாலயம்

*சித்திரங்குடியின் அருகில் இருக்கும் கஞ்சிரங்குளம் பறவைகள் சரணாலயத்தில் சங்குவளை நாரைகள் அதிக அளவில் கூடு கட்டி இனப்பெருக்கம் செய்கின்றன. சாம்பல் கூழைக்கடாக்கள் கூடு கட்டியிருக்கும் மரத்திலேயே இவற்றின் கூடும் இருப்பது குறிப்பிடத்தக்கது. இது தவிர வெள்ளை அரிவாள்மூக்கனும் இப்பகுதியில் கூடு கட்டுவது அறியப்பட்டுள்ளது. இந்த சரணாலயத்தின் பரப்பு 48 ஹெக்டேர்கள். இது 1989ல் சரணாலயமாக அறிவிக்கப்பட்டது. எனினும், அதற்கு முன்பாகவே இவ்வூர் மக்கள் இப் பகுதிகளுக்கு வந்து கூடமைக்கும் பறவைகளை பாதுகாத்து வருகின்றனர். சித்திரங்குடி, கஞ்சிரங்குளம் பறவைகள் சரணாலங்கள் இரண்டுமே முக்கிய பறவைகள் வாழிடமாக அறிவிக்கப்பட்டுள்ளது (Important Bird Area). இந்த இரண்டு சரணலாயங்களுமே ராம்சார் இடமாகவும் அறிவிக்க பரிந்துரை செய்யப்பட்டுள்ளது.*

## சித்திரங்குடி பறவைகள் சரணாலயம்

*இராமநாதபுரம் மாவட்டத்தில் அமைந்துள்ள சித்திரங்குடி கண்மாய் 48 ஹெக்டேர் பரப்பளவு கொண்டது. நீர்ப்பறவைகளுக்கான இந்தச் சரணாலயத்தில் சாம்பல் கூழைக்கடா அதிக அளவில் கூடமைகிறது. பல்லாண்டு காலமாக இங்குள்ள கூழைக்காடாக்களின் கூடுகளை இவ்வூர்ப் பொது மக்கள் பாதுகாத்து வருகின்றனர். இது 1989ல் சரணாலயமாக அறிவிக்கப் பட்டது. இந்த சரணாலயத்தில் ஜனவரி 1988ல் நடந்த கணக்கெடுப்பில் 934 கூழக்கடாக்களும் அவற்றின் 100 கூடுகளும் இருப்பது அறியப்பட்டது. பிறகு ஜனவரி 1989ல் 700 கூழக்கடாக்களும், 1991ல் 286 கூழக்கடாக்களும் இருப்பது அறியப்பட்டது. இது தவிர நத்தைகுத்தி நாரை, சின்ன கொக்கு, பெரிய கொக்கு, சாம்பல் நாரை, மடையான் முதலிய பறவைகளும் இங்கே கூடு கட்டி இனப்பெருக்கம் செய்கின்றன.*






மேல்செல்வனூர்கீழ்செல்வனூர் பறவைகள் சரணாலயம்

Melselvanur-Keelselvanur Bird Sanctuary

Bird Sanctuary Area　Eco Senstive Zone (ESZ)

Bird Sanctuary Prominent Points　ESZ Prominet Point

## மேல்செல்வனூர்-கீழ்செல்வனூர் பறவைகள் சரணாலயம்

*தமிழகத்தின் மிகப் பெரிய பறவைகள் சரணாலயங்களில் ஒன்றான இது இராமநாதபுரம் மாவட்டத்தில் சாயல்குடி எனுமிடத்தின் அருகில் 5.63 சதுர கி.மீ. பரப்பில் அமைந்துள்ளது. மேல்கீழ் செல்வனூர் நீர்நிலைகள் 1998ல் பற வைகள் சரணாலயமாக அறிவிக்கப்பட்டது. சாம்பல் கூழைக்கடா, சங்குவளை நாரை, நத்தைகுத்தி நாரை, வெள்ளை அரிவாள்மூக்கன், கரண்டிவாயன், பல வெள்ளைக் கொக்குகள் அனைத்தும் இப்பகுதியில் கூடமைப்பதாக அறியப் படுகிறது.*






**தேர்த்தங்கல் பறவைகள் சரணாலயம்**

Therthangal Bird Sanctuary

Bird Sanctuary Area | Eco Senstive Zone (ESZ)

Bird Sanctuary Prominent Points | ESZ Prominet Point

## தேர்த்தங்கல் பறவைகள் சரணாலயம்

இராமநாதபுரம் மாவட்டத்தின் பரமக்குடி தாலுகாவில் அமைந்துள்ள தேர்த்தங்கல் எனும் கிராமத்தின் அருகில் உள்ளது இந்த பறவைகள் சரணாலயம். இங்குள்ள 29 .29 ஹெக்டேர்கள் பரப்பில் அமைந்துள்ள குளம் 2010ல் பறவைகள் சரணாலயமாக அறிவிக்கப்பட்டது. பல வகை யான நீர்ப்பறவைகள் குறிப்பாக நத்தைகுத்தி நாரை, வெள்ளை அரிவாள் மூக்கன் போன்றவை இக்குளத்தின் உள்ளே உள்ள கருவேல மரங்களில் கூடுகட்டி இனப்பெருக்கம் செய்கின்றன. அதிகம் அறியப்படாத இந்த பறவைகள் சரணாலயத்தில் இருந்து இதுவரை சுமார் 65 பறவை வகைகள் பதிவு செய்யப்பட்டுள்ளது.






**சக்கரக்கோட்டை பறவைகள் சரணாலயம்**

Sakkarakottai Tank Bird Sanctuary

Bird Sanctuary Area | Eco Senstive Zone (ESZ)

Bird Sanctuary Prominent Points | ESZ Prominet Point

## சக்கரக்கோட்டை பறவைகள் சரணாலயம்

இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள சக்கரக்கோட்டை, இராஜசூரிய மடை, அச்சடிப்பிரம்பு கிராமப்பகுதிகள் பரவிக் காணப் படும் கண்மாய் 2012ல் பறவைகள் சரணாலமாக அறிவிக்கப்பட்டது. இந்த சரணாலயத்தின் மொத்த பரப்பு 230.49 ஹெக்டேர் ஆகும். அதிகம் அறியப்படாத இந்த பறவைகள் சரணாலயத்தில் இருந்து இதுவரை சுமார் 123 பறவை வகைகள் பதிவு செய்யப்பட்டுள்ளது.



ஐந்து பறவைகள் சரணாலயங்களைத் தவிர, உயிர்ப்பன்மையம் செறிந்த, மிக முக்கியமான பாதுகாக்கப்பட்ட பகுதியான மன்னார் வளைகுடாப் பகுதியும் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ளது.


ஆவுளியா *(Sea Cow Dugong dugon)*


கடலின் தரையில் உள்ள புல்வெளி
*(Seagrass Meadow)*




**மன்னார் வளைகுடா கடல்சார் தேசிய பூங்கா**
Gulf of Mannar Marine National Park

## மன்னார் வளைகுடா கடல்சார் தேசிய பூங்கா

*மன்னார் வளைகுடாவின் ஒரு பகுதி 1986ல் தேசியப் பூங்காவாக அறிவிக்கப்பட்டது. இப்பகுதி 21 தீவுகளையும், பவளப்பாறைத் திட்டுக் களையும் கொண்ட, உயிர்ப்பன்மயம் மிகுந்து காணப்படும் ஒரு பகுதி யாகும். இந்த தேசிய பூங்கா கடலோரப் பகுதிகளையும், கடல் பகுதி யையும் உள்ளடக்கியது. இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள தனுஷ்கோடி பகுதியில் இருந்து கடல் வழியே சுமார் 160 கி. மீ. தூத்துக்குடி மாவட்ட கடல்பகுதி வரை நீண்டு அமைந்துள்ளது.*

*இந்தியக் காட்டுயிர் நிறுவனம் (Wildlife Institute of India) இந்திய தீபகற் பத்தில் உள்ள 106 கடல்சார் பாதுகாப்புப் பகுதிகளை (Marine Protected Area MPA) முக்கியமான கடற்கரையோர மற்றும் கடல் பகுதிகள் (Important Coastal and Marine Areas ICMBAs) என அடையாளம் கண்டு இப்பகுதிகளுக்கு பாதுகாப்பு முன்னுரிமை அளிக்க பரிந்துரை செய்துள்ளது. இவற்றில் 14 தமிழகத்தின் கிழக்கு கடற்கரையோரம் அமைந்துள்ளன (முழுப் பட்டி யலையும் K. Sivakumar (Ed.) 2013ல் காணலாம்). அவற்றில் ஒன்று மன்னார் வளைகுடா தேசிய பூங்கா.*

## மன்னார் வளைகுடா உயிர்க்கோள காப்பகம்:

*உலக இயற்கை பாதுகாப்பு நியமத்தின் (IUCN) எல்லைகளைக் கடந்த பாதுகாக்கப்பட்ட வாழிடங்கள் திட்டத்தின் வரையரையின் படி இந்தியா வில் 12 பாதுகாக்கப்பட்ட வாழிடங்கள் உள்ளன. அவற்றில் இரண்டு கடல் சார் பாதுகாக்கப்பட்ட பகுதிகள் ஆகும். ஒன்று, உள்ள மேற்கு வங்கம் மற்றும் நமது அண்டை நாடான வங்காளதேசம் இரண்டிலும் தொடர்ச் சியாகப் பரவியுள்ள சுந்தரவன அலையாத்திக் காடுகளைக் கொண்ட சுந்தரவன தேசிய பூங்காவும், இரண்டாவது, இந்தியக் கடல் பகுதியிலும், இலங்கையின் கடல் பகுதியிலும் பரவியுள்ள மன்னார் வளைகுடா உயிர்க்கோள காப்பகமுமே ஆகும். இப்பகுதி யுநெஸ்கொவின் (UNESCO) மனிதனும் உயிர்க்கோளமும் திட்டத்தினால் (Man and Biosphere MOB) அங்கிகரிக்கப்பட்டது.*

*இந்தியாவின் முதல் கடல்சார் உயிர்க்கோள காப்பகமான இது நிறுவப் பட்டது 18 பிப்ரவரி 1989ல். இதன் பரப்பு 10,500 சதுர கி. மீ. இந்தப் பகுதி மன்னார் வளைகுடா கடல்சார் தேசிய பூங்காவையும் உள்ளடக்கியது. இப்பகுதி பவளப்பாறைத் திட்டுக்கள், மணற்பாங்கான கடற்கரைகள், கடற் கரையோர சேற்று சமவெளிகள் (mudflat), ஆழம் குறைந்த பாசிகள் நிறைந்த கடல்பகுதிகள், உவர்நீர் சேற்றுப் பகுதிகள், அலையாத்திக் காடுகள் போன்ற பலவகையான வாழிடங்களைக் கொண்ட 21 தீவுகளையும் உள்ளடக்கிய தாகும். இப்பகுதி சுமார் 3600 வகையான உயிரினங்களைக் கொண்டு உயிர்ப்பன்மையம் மிகுந்த இடமாக திகழ்கிறது. இங்கு சுமார் 1182 வகை யான மீன்களும், பல விதமான கடல்வாழ் உயிரினங்களும், 11 வகையான கடல் பாம்புகளும், கடலாமைகளில், பேராமை* (Green Turtle *Chelonia*




மன்னார் வளைகுடா உயிர்க்கோள காப்பகம்: Gulf of Mannar Biosphere Reserve

*mydas*), பங்குனி ஆமை (Olive Ridley Turtle *Lepidochelys olivaceae*), பெருந் தலை ஆமை Loggerhead Turtle *Caretta caretta* ஆகியவையும், சுமார் 180 வகையான பறவைகளும் அழியும் தருவாயில் உள்ள ஆவுளியா (Sea Cow *Dugong dugon*), ஓங்கல் வகைகள் (Dolphins) போன்ற எண்ணற்ற பல உயிரினங்கள் இங்கே பதிவு செய்யப் பட்டுள்ளன. அலையாத்திகாடுகளில் தென்படும் சுமார் சுமார் 20 வகையான தாவரங்களும், சுமார் 12 வகையான கடல் புற்களும் இங்கு பதிவு செய்யப் பட்டுள்ளது.

1. Vaan Island *(வான் தீவு)*
2. Koswari Island *(காசுவார் தீவு)*
3. Kariyachalli Island *(காரைசல்லி தீவு)*
4. Vilanguchalli Island *(விலங்குசல்லி தீவு)*
5. Uppu Thanni Island *(உப்புத்தண்ணி தீவு)*
6. Puluvini Challi Island *(புலுவினிசல்லி தீவு/சல்லி தீவு)*
7. Nalla Thanni Island *(நல்லதண்ணி தீவு)*
8. Anaipar Island *(ஆணைப்பார் தீவு)*
9. Vali Munai Island *(வாலிமுனை தீவு)*
10. Poovarasan Patti Island *(பூவரசன்பட்டி தீவு)*
11. Appa Island *(அப்பா தீவு)*
12. Talairi Island *(தலையாரி தீவு)*
13. Valai Island *(வாழை தீவு)*
14. Mulli Island *(முள்ளி தீவு)*
15. Musal Island *(முயல் தீவு)*
16. Manoli Island *(மனோலி தீவு)*
17. Manoli-Putti Island *(மனோலிபுட்டி தீவு)*
18. Poomarichan Island *(பூமரிச்சான் தீவு)*
19. Pullivasal Island *(புள்ளிவாசல் தீவு)*
20. Kurusadai Island (குருசடை தீவு)
21. Shingle Island *(சிங்கில் தீவு)*

# சின்ன சீழ்க்கைச் சிறகி

## Lesser Whistling Duck

## *Dendrocygna javanica*





**உருவ அளவு:** 42 செ.மீ. **அங்க அடையாளம்:** உடல் முழுவதும் வெளிறிய பழுப்பு நிறம். உச்சந்தலையும், பின்கழுத்தும் கரும்பழுப்பு நிறம். அமர்ந்த நிலையில் அதாவது, இறக்கைகள் மடக்கி வைக்கப் பட்டிருக்கும் நிலையில் இறக்கைகள் அடர் பழுப்பு நிறத்தில் செதில் செதிலாக இருக்கும். பறக்கும் நிலையில்தான் இறக்கைகளில் உள்ள அரக்கு நிறம் தென்படும். கீழ்உடல் இளம் பழுப்பு நிறம். அலகும் கால்களும் கருப்பு நிறம். சிறிய வாலின் அடிப்பகுதி வெள்ளை நிறம். **பண்புகள்:** மரங்களில் உள்ள பொந்துகளில் கூடமைக்கும். கழுகு, பருந்து முதலான பெரிய பறவைகளின் பழைய கூடுகளிலும் முட்டையிடும். பொதுவாகக் கூட்டமாகவே தென்படும். சீழ்க்கை ஒலி யுடன் கூட்டமாகப் பறந்து திரியும். **உணவு:** பெரும்பாலும் புற்கள், நெற்பயிர்கள், நீரில் உள்ள செடிகளின் தண்டுப் பகுதி, விதைகளையும் உண்ணும். சில வேளைகளில் நத்தை, சிறிய மீன்கள், தவளைகள், புழு பூச்சிகளையும் உண்ணும். **வாழிடம்:** ஆழமற்ற நீர் நிறைந்த நெல் வயல்கள், நீர்த்தாவரங்கள் நிறைந்த சிறிய குளங்கள், ஏரிகள், அலை யாத்திக் காடுகள், கழிமுகங்களில் வாழும், ஆண்டு முழுவதும் காணப் படும்.







# செண்டு வாத்து
## Knob-billed Duck
## *Sarkidiornis Melanatos*







**உருவ அளவு:** 56-76 **செ.மீ. அங்க அடையாளம்: ஆண்:** இறக்கைகள் கரும்பச்சை, உடலின் பக்கவாட்டுப் பகுதிகள் சாம்பல் நிறத்தில் இருக்கும். அலகு கருப்பு அதன் மேல் பந்து போன்ற பெரிய சதைத் திரட்சி காணப்படும். **பெண்:** அலகில் சதைத் திரட்சியாக இருக்கும், உடலின் பக்கவாட்டுப் பகுதிகளில் சாம்பல் நிறம் இருக்காது. ஆண், பெண் இரண்டுக்குமே வெண்ணிற உடலும், தலை மற்றும் கழுத்தில் கருப்புப் புள்ளிகளும் இருக்கும். **பண்புகள்:** பெரும்பாலும் ஜோடியாகவோ அல்லது சிறு கூட்டமாகவோ காணப்படும். பொது வாக சத்தமிடாமல் அமைதியாக இருக்கும். தாவரங்களில், மரப் பொந்துகளில் புல், இலை, சிறகுகள் முதலியவற்றை வைத்து கூடமைக்கும். **உணவு:** பெரும்பாலும் புற்கள், கோரைப் புல், நீர்த் தாவரங்களின் விதைகள், பூச்சிகள், புழுக்கள், நத்தைகள். **வாழிடம்:** சற்றே மரங்கள் சூழ்ந்த நன்னீர் ஆறுகள், குளங்கள், ஏரிகள், வயல் வெளிகளின் அருகே வாழும். ஆண்டு முழுதும் காணப்படும்.







# வெண்புருவ வாத்து
## Garganey
## *Spatula querquedula*







***உருவ அளவு:*** *37-41 செ.மீ.* ***அங்க அடையாளம்: ஆண்:*** *அடர்த்தியான வெள்ளை நிறப் புருவமும், பழுப்பு நிறத் தலையும், கழுத்தின் பக்கவாட்டில் சாம்பல் நிறமும் கொண்டிருக்கும்.* ***பெண்:*** *வெளுத்த புருவமும், கருத்த கண்வரிக்கோடும், பழுப்பு நிற செதில் போன்ற மேலுடம்பும் காணப்படும். ஆண், பெண் இரண்டுக்குமே பறக்கும் நிலையில் இறக்கைகளில் உள்ள பச்சை நிறமும், சாம்பல் நிறமும் தெரியும். ஆண் பறவையின் இளம் பருவம், இனப்பெருக்கம் செய்யாத காலத்தில் இருக்கும் பெண் பறவையின் நிறத்தை ஒத்திருக்கும். தமிழகத்துக்கு ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் பூமியின் வடப் பகுதியில் இருந்து வலசைவரும். மீண்டும் ஏப்ரல்-மே மாதங்களில் இனப்பெருக்கம் செய்ய வலசைபோகும். சில இளம் பறவைகள் வலசை போகாமல் இங்கேயே தங்கிவிடுவதும் உண்டு.* ***பண்புகள்:*** *நீர்நிலைகளில் கூட்டமாகப் பிற வாத்துகளுடன் சேர்ந்து இருக்கும்.* ***உணவு:*** *நீர்நிலைகளில் காணப்படும் புழுக்கள், பூச்சிகள், சிறு மீன்கள், நீர்த்தாவரங்களின் இலை, தண்டு, வேர் முதலியவை.* ***வாழிடம்:*** *வயல்வெளிகள், நீர்த்தாவரங்கள் நிறைந்த குளங்கள், குட்டைகள், ஏரிகள்.*







# தட்டைவாயன்
# Northern Shoveler
# *Spatula Clypeata*






**உருவ அளவு:** 44-52 செ.மீ. **அங்க அடையாளம்:** தட்டையான அலகைக் கொண்டது. **ஆண்:** கரும்பச்சை நிறத் தலையும், வெள்ளை நிற மார்பும் கொண்டது. உடலின் கீழும், பக்கவாட்டிலும் செம்பழுப்பு நிறமும், கண்கள் மஞ்சளும், அலகு கருப்பு நிறமும், கால்கள் ஆரஞ்சு நிறமும் கொண்டது. இளம் பருவ ஆண், பெண் பறவையின் நிறத்தை ஒத்திருக்கும். **பெண்:** மங்கலான பழுப்பு நிறமும், உடம்பில் வெள்ளைத் திட்டுகளுடனும் இருக்கும். அலகு பழுப்பும் மஞ்சளும் கலந்து இருக்கும். **பண்புகள்:** வலசைவரும் பறவை. இணையாகவும், சிறு கூட்டமாகவும் உணவு தேடும். தட்டையான அலகைப் பயன்படுத்தி நீரில் உள்ள புழு பூச்சிகளை சலித்தெடுத்து உண்ணும். **உணவு:** நுண்ணிய பூச்சிகள், புழுக்கள், தாவரங்கள், விதைகள் முதலியவை. **வாழிடம்:** புல்வெளிகள், நீர்த்தாவரங்கள் மூழ்கியுள்ள குளங்கள், குட்டைகள், ஏரிகளில் காணப்படும். தமிழகத்தில் அக்டோபர்முதல் மேவரை காணலாம்.







# புள்ளி மூக்கு வாத்து
## Indian Spot-billed Duck
*Anas poecilorhyncha*







**உருவ அளவு:** *58-63 செ.மீ.* **அங்க அடையாளம்:** உச்சந்தலை கரும் பழுப்பு நிறமும், முகமும் கழுத்தும் வெளிர் பழுப்பு நிறமும், உடலின் மேல்பகுதி கரும்பழுப்பாகவும், வெள்ளைத் திட்டும் கொண்டிருக்கும். பறக்கும் போது பச்சை நிற சிறகுகள் தெரியும். அலகு கறுப்பு அதன் முனையில் மஞ்சளாக இருக்கும். கால்கள் ஆரஞ்சு நிறம். ஆண் வாத்துக்கு மட்டும் அலகு தலையுடன் சேரும் பகுதியில் சிவப்புப் புள்ளி ஒன்று காணப்படும். **பண்புகள்:** இந்தியத் துணைக் கண்டத் திலேயே இனப்பெருக்கம் செய்தாலும் உள்நாட்டுக்குள் வலசை போகும். பெரும்பாலும் சிறு கூட்டமாகவோ, ஜோடியாகவோ இருக் கும். உச்சி வெயில் நேரங்களில் கரையோரத்தில் அமர்ந்து ஓய்வெடுக் கும். **உணவு :** பெரும்பாலும் தாவர உண்ணி. நீரின் மேற்பரப்பில் உள்ள நீர்த்தாவரங்களின் வேர், குருத்து, போன்றவற்றையும், எப்போதாவது புழு, பூச்சிகள், நத்தை முதலியவற்றையும் உண்ணும். **வாழிடம்:** தாவரங்கள் நிறைந்த நன்னீர் குளங்கள், ஏரிகள், அணைப் பகுதிகள். தமிழகத்தில் ஆண்டு முழுதும் காணப்படும்.








# ஊசிவால் வாத்து
# Northern Pintail
# *Anas acuta*




**உருவ அளவு:** 51-56 செ.மீ. **அங்க அடையாளம்: ஆண்:** தலை கரும்பழுப்பு, தலைமுதல் கழுத்துவரை இரு பக்கங்களிலும் வெள்ளை நிறக் கோடு காணப்படும். முதுகுப் பகுதி சாம்பல் நிறம். ஊசி போன்ற கருப்பு நிற வால் காணப்படும். **பெண்:** தலை பழுப்பு நிறம், உடல் பழுப்பும், வெள்ளையும், ஆரஞ்சு நிறமும் கலந்த செதில் வடிவில் இருக்கும். **பண்புகள்:** நீரில் மூழ்கி, சமயங்களில் கால் மேலே தெரியும்படி உணவு தேடும். பெரும்பாலும் விடியற்காலை, மாலை, இரவு ஆகிய நேரங்களில் உணவு தேடும். பகலில் திறந்தவெளியில், நீர்ப்பரப்பில் ஓய்வெடுக்கும். **உணவு:** பெரும்பாலும் தாவர உண்ணி. நீர்த்தாவர விதைகளையும், சில நேரங்களில் பூச்சிகள், புழுக்கள், நத்தைகள். **வாழிடம்:** ஆழம் குறைந்த, தாவரங்கள் நிறைந்த நன்னீர் ஏரிகள், குளங்கள், நீர்நிறைந்த விவசாய நிலங்களை ஒட்டியப் பகுதி கள். தமிழகத்தில் அக்டோபர்முதல் மேவரை காணப்படும்.





# கிளுவை
# Common Teal
# *Anas crecca*







***உருவ அளவு:*** 34-38 செ.மீ. ***அங்க அடையாளம்: ஆண்:*** உடல் சாம்பல் நிறத்திலும், தலை அரக்கு நிறத்திலும் இருக்கும். கண்களிலிருந்து கழுத்துவரை பச்சை நிறப் பட்டை காணப்படும். **பெண்:** உடல் பழுப்பு நிறத்தில் வெள்ளைத் திட்டுகளைக் கொண்டிருக்கும். ஆண், பெண் இரண்டுக்குமே அலகு கருப்பு. பறக்கும்போது இறக்கைகளில் உள்ள பச்சை நிறம் தெளிவாகத் தெரியும். **பண்புகள்:** பெரும்பாலும் இரவில் இரை தேடும். நீரில் தலைகீழாக மூழ்கி உணவைத் தேடும். பொதுவாகக் கூட்டமாகக் காணப்படும். ***உணவு:*** அவ்வப்போது கிடைக்கும் உணவுகளை உண்ணும். கோரைப்புல், நீர்த்தாவரங்கள், பிற புற்கள், புழு, பூச்சிகள், நத்தைகள், தானியங்கள். **வாழிடம்:** ஆழம் குறைந்த, தாவரங்கள் நிறைந்த, சேற்றுப் பாங்கான நீர்நிலைகளிலும், கடற்கரையோர நீர்நிலைகள். தமிழகத்தில் செப்டம்பர்முதல் மேவரை காணப்படும்.







# மயில்
# Indian Peafowl
# *Pavo cristatus*







**உருவ அளவு:** ஆண்: 180-230 செ.மீ. **அங்க அடையாளம்:** ஆண்: கழுத்திலிருந்து மார்புவரை நீல நிறத்திலும் பச்சை நிறத்திலும், பள பளப்பான கருநீல வட்டங்களுடைய அழகான தோகையுடன் காணப் படும். இறக்கைகள் வெள்ளையும் அடர்பழுப்புத் திட்டுகளுடன் இருக் கும். இளம் ஆண் பறவைக்குத் தோகை இருக்காது. **உருவ அளவு:** **பெண்:** 90-100 செ.மீ. முகம் வெண்மையாகவும் பின்கழுத்து பச்சையாக வும் வெள்ளைத் தொண்டையில் கருப்பு நிற செதில்களும் இருக்கும். முதுகு, இறக்கைகள் சாம்பல் நிறத்திலும், வயிறு வெள்ளை நிறத்திலும் இருக்கும். பெண் மயிலுக்குத் தோகை கிடையாது. ஆண், பெண் இரண் டுக்குமே தலையில் கொண்டை இருக்கும். **பண்புகள்:** இது இந்தியா வின் தேசியப் பறவை. மரங்கள் அடர்ந்த பகுதிகளில், புதர்க்காடுகளில் நடந்து இரை தேடும். இணையைக் கவர ஆண் மயில் அழகாகத் தோகையை விரித்தாடும். மனிதர்கள் வாழும் இடங்களில் இதற்கு உணவு கிடைப்பதால் அவ்விடங்களிலேயே தங்கிவிடுவதும் உண்டு. **உணவு:** அனைத்துண்ணி. தானியங்கள், பழங்கள், தாவரத்தின் வேர்ப் பகுதிகள், புழுக்கள், பூச்சிகள். சிறிய ஊர்வன, சிறிய பறவைகள். **வாழிடம்:** இந்திய துணைக் கண்டத்தின் அடிவாரக் காடுகள், சம வெளிக் காடுகள், விளை நிலங்கள். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# கவுதாரி
## Grey francolin
## *Francolinus pondicerianus*




**உருவ அளவு:** *33* செ.மீ. **அங்க அடையாளம்:** முகம், கழுத்து ஆகியவை வெளிறிய பழுப்பு நிறத்திலும், உடலில் ஆங்காங்கே, அடர் பழுப்பு, பழுப்பு, வெள்ளை நிறத் திட்டுகளும், உடலின் கீழ்ப் பகுதியில் வெளிறிய நிறத்தில் கருப்பு வரிகளும் இருக்கும். வால் குட்டையாக இருக்கும். கால்கள் சிவப்பு நிறம். கால்களில் நான்காவது விரல் பின்னோக்கி வளர்ந்திருக்கும். ஆண் பறவைகளுக்குத் குதி காலில் முள் போன்ற நீட்சி இருக்கும். **பண்புகள்:** சிறு கூட்டமாகத் திறந்தவெளிகளிலும், புதர்கள், புற்கள் இருக்கும் இடங்களிலும் இரை தேடித் திரியும். ஆள் அரவம் கேட்டால் குடுகுடுவென ஓடிப் பின்னர் விருட்டென பறக்கும். பெரும்பாலும் தரையில்தான் இருக்கும், எனினும், அவ்வப்போது மரங்களிலும் அடையும். ஆண் பறவை தன் காலில் உள்ள குதிமுள்ளை *(Spur)* சண்டையிடப் பயன்படுத்தும். தரையில் முட்டையிடும். **உணவு:** தானியங்கள், விதைகள், வண்டுகள், கறையான்கள், புழுக்கள், பூச்சிகள். **வாழிடம்:** மலையடிவாரப் புதர்க் காடுகள், திறந்த புல்வெளிகள், வயல்வெளிகள். ஆண்டு முழுதும் காணப்படும்.




# பெரிய பூநாரை
# Greater Flamingo
# *Phoenicopterus roseus*

***உருவ அளவு:*** 125-145 *செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *நீண்ட இளஞ்சிவப்பு கால்களையும், நீண்ட கழுத்தையும் உடைய நீர்ப்பறவை. உடல் வெள்ளை நிறம். ஆனால், இறக்கைகளை மடக்கிவைத்திருக்கும்போது அதிலுள்ள சிவப்பு நிற சிறகுகளாலான திட்டுத் தெரியும். இறக்கைகளின் பின்பாதி கருப்பு. ஆகவே பறக்கும் போது இறக்கைகளில் முன்பாதியில் உள்ள ஆரஞ்சு கலந்த சிவப்பு நிறம் பளிச்சென்று தெரியும். தலை வெள்ளை நிறமாகவும், அலகு இளஞ்சிவப்பு நிறமாகவும் நுனிப்பகுதி கறுப்பாகவும் இருக்கும். கண்கள் மஞ்சள் நிறம். இளம் பறவைகளுக்கு உடலில் உள்ள சிவப்பு நிறம் மங்கலாக அல்லது முற்றிலும் இருக்காது. உடல் அழுக்கடைந்த வெள்ளை நிறமாகவும், இறக்கை கரும்பழுப்பு நிறமாகவும் இருக்கும்.* ***பண்புகள்:*** *இவற்றின் இரை தேடும் பண்பு வித்தியாசமானது. தலையைக் குப்புறக் கவிழ்ந்து முழுவதும் நீருக்குள் விட்டு அல்லது அலகை மட்டும் நீரின் மேற்பரப்பில் அழுத்தி இரை தேடும். மற்ற பறவைகளுக்கு உள்ளது போலல்லாமல், இவற்றின் மேல்அலகு வெகுவாக அசையும் பண்பைப் பெற்றிருக்கும். இவை அலகை நீரில் அமிழ்த்தி தமது பெரிய நாக்கினால் நீரை உறிஞ்சி பின்னர் வெளியேற்றும். அப்படிச் செய்கையில் நீரில் உள்ள சிறிய உயிரினங்கள், அலகின் ஓரங்களில் உள்ள சீப்பு போன்ற அமைப்பினால் வடிகட்டப்பட்டு இரையாக்கப்படும். இதற்குத் தகுந்தாற்போல் இவற்றின் கீழ்அலகு தடிமனாகவும் மேல்அலகு அதற்கு மூடி போட்டதுபோல தட்டையாகவும் இருக்கும். பொதுவாகக் கூட்டமாகத் தென்படும். தென்னிந்தியாவுக்கு வலசைவரும் பறவை. எனினும் சில இளம் பறவைகள் ஆண்டு முழுவதும் இங்கேயே தங்கி விடுவதும் உண்டு.* ***உணவு:*** *சிறிய இறால் வகை உயிரினங்கள், புழு பூச்சிகள், நீர்த்தாவரங்களின் விதைகள்* ***வாழிடம்:*** *கடற்கரையோர உப்பங் கழிகள், கழிமுகங்கள் சில வேளைகளில் உள்நாட்டு நன்னீர் நிலைகள்.*

# சிறிய பூநாரை
## Lesser Flamingo
## *Phoeniconaias minor*




***உருவ அளவு:*** 80-90 செ.மீ. ***அங்க அடையாளம்:*** பெரிய பூநாரையை விட உருவில் சிறியது. உடல் இளஞ்சிவப்பாகவும் அலகு கருஞ்சிவப் பாகவும், நுனிப் பகுதிக்கு மேலே சிவப்புத் திட்டும், நுனி கறுப்பாகவும் இருக்கும். இறக்கைகளின் முன்பாதி ஆரஞ்சு கலந்த சிவப்பும், பின் பாதி கருப்பும், நீண்ட கால்கள் இளஞ்சிவப்பு நிறமும் கொண்டிருக் கும். இவற்றின் அலகின் நிறத்தையும், சிறிய உருவத்தையும் வைத்து பெரிய பூநாரையினின்று இனங்காணலாம். ***பண்புகள்:*** பெரும்பாலும் கூட்டமாகவே காணப்படும். பெரிய பூநாரை கூட்டங்களுடன் சேர்ந்து இரை தேடும். பெரிய பூநாரையைப் போலவே தலையைக் கவிழ்த்து இரை தேடும். தென்னிந்தியாவுக்கு வலசைவரும் பறவை. ***உணவு:*** நீரில் உள்ள கண்ணுக்குத் தெரியாத மிதவைத் தாவர உயிரினங்கள் (பாசி, டயட்டம்கள்) போன்றவை. ***வாழிடம்:*** பெரும்பாலும் கட லோரப் பகுதிகளில் மட்டுமே காணப்படும்.


பெரிய பூநாரை




# முக்குளிப்பான்
## Little Grebe
## *Tachybaptus ruficollis*





இளம் பறவை

**உருவ அளவு:** 25-29 செ.மீ. **அங்க அடையாளம்:** சிறிய நீர்ப்பறவை. இனப்பெருக்கக் காலங்களில் உடலின் மேல்பகுதி கரும்பழுப்பும், தலை, கழுத்தின் பக்கவாட்டில் பாக்கு நிறமும், அலகு ஆரம்பிக்கும் இடத்தில் மஞ்சள் நிறமும் இருக்கும். இளம் பறவையின் உடல் கரும்பழுப்பு நிறமாகவும், அலகு மஞ்சளாகவும் இருக்கும். தலையின் பக்கவாட்டிலும், கழுத்தும் வெளிர் நிறத்தில் இருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை நிறம். கால் விரல்களின் இருபுறமும் நீந்துவதற்கு ஏற்ப மடல் போன்ற அமைப்பு காணப்படும். **பண்புகள்:** பொதுவாகத் தனியாகவோ அல்லது கூட்டமாகவோ நீரின் மேற்பரப்பில் நீந்திக் கொண்டிருக்கும். சட்டெனை ஓரிடத்தில் இருந்து நீரில் முழ்கி இரை தேடியப் பின், வேறு இடத்தில் இருந்து வெளியே வரும். நீர்நிலை களின் நடுவே குச்சிகளையும், தாவரங்களையும் வைத்து தட்டு போன்ற மிதக்கும் கூட்டை அமைத்து முட்டையிடும். **உணவு:** தவளை, தலைப் பிரட்டை, புழு, பூச்சிகள் போன்றவற்றை நீரில் முழ்கித் தேடி உண்ணும்.

**வாழிடம்:** பொதுவாக எல்லா உள்நாட்டு நீர்நிலைகளிலும் தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





வளர்ந்த குஞ்சுப் பறவை



# மாடப்புறா
## Rock Pigeon (*FeralPigeon*)
## *Columba livia*




***உருவ அளவு :*** 33 செ.மீ. ***அங்க அடையாளம்:*** தலையும் உடலும் நீலம் கலந்த சாம்பல் நிறம். கழுத்து மின்னும் பச்சை நிறம். இறக்கைகளில் இரண்டு கரும்பட்டைகள் காணப்படும். சாம்பல் நிற வாலின் முடிவில் கரும்பட்டை இருக்கும். **பண்புகள்:** ஊர்ப்புறங்களிலும், நகரங்களிலும் பொதுவாக ஜோடியாகவும் கூட்டமாகவும் பறந்து திரியும். மக்கள் நடமாட்டம் உள்ள இடங்களிலும் தானியக் களஞ்சியங்களின் அரு கிலும் இவற்றைக் காணலாம். **உணவு:** விதைகள், தானியங்கள், பழங்கள் அவ்வப்போது பூச்சிகள் போன்றவை. **வாழிடம்:** மக்கள் வாழும் இடங்கள், மாடமாளிகைகள், கோயில்கள். ஆண்டு முழுதும் காணப்படும். மனிதர்கள் வாழும் பகுதிகளில் தென்படும் இப்புறாக்கள் யாவும் கலப்பினங்கள் ஆகும். அதாவது இவை இயற்கையாகத் தென்படும் *(Wild Type)* புறாக்கள் அல்ல. அது போன்ற காட்டுவகைப் புறாக்கள் மலை முகடுகளில் உள்ள பொந்துகளில் வசிக்கும், கூடமைக்கும். இந்தப் புறாக்களின் உருவம், இறகுகளின் நிற ஒற்று மையை வைத்து மட்டும் பிரித்தறிய முடியாது. மரபுச் சோதனை கள் மூலமாகத்தான் கண்டறிய முடியும். ஆகவே நாம் ஊர்ப்புறங் களிலும், நகரங்களிலும் காணும் அனைத்தையும் *Feral Pigeon* என்றே குறிக்க வேண்டும்.





# கள்ளிப்புறா
## Eurasian Collared-Dove
## *Streptopelia decaocto*





***உருவ அளவு :*** 32 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடல் சாம்பல் நிறம். பின்கழுத்தில் அரைவட்ட வடிவ கருப்பு வளையம் இருக்கும். இளம் பறவைகளுக்கு இந்த வளையம் சரியாகத் தெரியாது. இறக்கைகளின் நுணியில் (முதன்மைச் சிறகுகள்) கறுப்பாக இருக்கும். மாடப்புறாவை விடச் சிறியது. ***பண்புகள்:*** எப்போதும் ஜோடியாகத் திரியும். தனது இணையைக் கவர உயரப் பறந்து இறக்கைகளை நன்கு விரித்து தரையிறங்கும். ***உணவு:*** பொதுவாகத் தானியங்கள், சிறு விதைகள், தாவரத்தின் சில பகுதிகள், அவ்வப்போது சிறு பூச்சிகள் போன்றவை. ***வாழிடம்:*** திறந்த புல்வெளிகள், வயல்வெளிகள், புதர்க்காடுகள். அடர்ந்த காடுகளிலும், மலைப் பிரதேசங்களிலும் காணப்படுவதில்லை. ஆண்டு முழுதும் காணப்படும்.








# புதுப்பானைப் புறா
## Red Collared-Dove
### *Streptopelia tranquebarica*






***உருவ அளவு:*** 23 செ.மீ. ***அங்க அடையாளம்: ஆண்:*** இளநீலமும் சாம்பல் நிறமும் கலந்த தலையும். பின்கழுத்தில் அரைவட்ட வடிவக் கருப்பு வளையமும் இருக்கும். உடல் முழுவதும் செங்கல் நிறத்தில் அல்லது செம்மண்ணில் சுட்ட புதிய பானையின் நிறத்தில் இருக்கும். ***பெண்:*** மங்கலான பழுப்பு நிறத்திலும் பின்கழுத்தில் கருப்பு வளையமும் கொண்டிருக்கும். வால் சாம்பல் நிறத்தில் இருக்கும். இளம் பறவையின் பின்கழுத்தில் கருப்பு வளையம் இருக்காது. இவை கள்ளிப்புறாவை விட அளவில் சிறியவை எனினும், பெண் பறவை கள்ளிப்புறாவை ஒத்திருக்கும். ஆகவே இவற்றைப் பார்க்கும்போது கவனமாகப் பிரித்தறிய வேண்டும். ***பண்புகள்:*** ஜோடியாகவோ, சிறு கூட்டமாகவோ தென்படும். ***உணவு:*** தானியங்கள், புற்களின் விதைகள், சில வகைத் தாவரத்தின் இளம் தளிர்கள். ***வாழிடம்:*** மக்கள் நடமாட்டம் அதிகம் இல்லாத திறந்தவெளிப் புதர்க்காடுகள், கருவேல மரங்கள் நிறைந்த பகுதிகள். ஆண்டு முழுதும் காணப்படும்.









# மணிப்புறா
# Spotted Dove
# *Streptopelia chinensis*





***உருவ அளவு:*** 30 செ.மீ. ***அங்க அடையாளம்:*** தலை, கீழ்உடல் சாம்பல், இளஞ்சிவப்பு நிறமும் கலந்திருக்கும். இதன் கழுத்துப் பகுதியில் கருப்பு வெள்ளைப் புள்ளிகள் இருக்கும். இறக்கைகளில் செதில்செதிலான வடிவங்கள் காணப்படும். இளம் மணிப்புறாவுக்குக் கழுத்தில் கருப்பு வெள்ளைப் புள்ளிகள் இருக்காது. ***பண்புகள்:*** பெரும்பாலும் அமைதியாகத் தரையில் இரை தேடிக்கொண்டிருக்கும். அருகில் சென்றால் படபடவென இறக்கைகளை அடித்துப் பறக்கும். இனப்பெருக்கக் காலங்களில் ஜோடியாகத் திரியும். ஆண் பறவை பெண் பறவையின் அருகில் சென்று தலையை மேலும்கீழும் ஆட்டி இடைவிடாமல் மெல்லியக் குரலில் கூவும். ***உணவு:*** விதைகள், தானியங்கள், தாவரத்தின் குருத்துகள், சில சமயங்களில் கறையான் களையும் எறும்புகளையும் உண்ணும். ***வாழிடம்:*** மரங்கள் அடர்ந்த பகுதிகள், ஊர்ப்புறங்கள், தோட்டங்கள். மிகவும் வறண்டப் பகுதி களில் இருக்காது. ஆண்டு முழுதும் காணப்படும்.







# தவிட்டுப்புறா
## Laughing Dove
## *Streptopelia senegalensis*





***உருவ அளவு:*** 27 செ.மீ. ***அங்க அடையாளம்:*** சிறிய ஒல்லியான பறவை. சற்று நீண்ட வாலுடையது. தலையும் கீழ்உடலும் லேசான இளஞ்சிவப்பு. மேல்உடல் பழுப்பு நிறம். மார்புக்கு மேல் கருப்புப் புள்ளிகள் இருக்கும். இறக்கையில் இளநீலத் திட்டு இருக்கும். பறக்கும்போது இது தெளிவாகத் தெரியும். இளம் தவிட்டுப்புறா சற்று வெளிர் நிறத்தில் இருக்கும். ***பண்புகள்:*** பொதுவாகத் தனியாகவோ அல்லது சிறு கூட்டமாகவோ தரையில் நடந்து இரை தேடும். இவை ஏனைய வகை புறாக்களைப் போலவே அலகைத் திறக்காமலேயே குரலெழுப்பும். ***உணவு:*** மிகச் சிறிய விதைகள், தானியங்கள், அவ்வப் போது கறையான்களையும் எறும்புகளையும் உண்ணும். ***வாழிடம்:*** வறண்ட விவசாய நிலங்கள், திறந்த முட்காடுகள், வறண்ட மலைப் பகுதிகள். ஆண்டு முழுவதும் காணப்படும். ***இராமநாதபுரம் மாவட்டத்தில் வழங்கப்படும் பெயர்:*** மண்புறா.


இளம் பறவை





# கல்கவுதாரி
## Chestnut-bellied Sandgrouse
## *Pterocles exustus*







***உருவ அளவு:*** 31-33 செ.மீ. ***அங்க அடையாளம்: ஆண்:*** தலை மஞ்சள் நிறத்திலும், உடல் பொதுவாகக் காய்ந்த புல் அல்லது வைக்கோலின் நிறத்திலும் இருக்கும். கருப்பு நிறக் கண்கள் தெளிவாகத் தெரியும். வால் ஊசிபோல் நீண்டிருக்கும். அமர்ந்த நிலையில் இறக்கைகளின் மேல் பழுப்பு நிறத்தில் செதில்செதிலாக இருக்கும். மார்பில் கருப்பு வளையம் இருக்கும். **பெண்:** மஞ்சள் உடலில் ஆங்காங்கே கருப்பு புள்ளிகளும், கோடுகளும் இருக்கும். மார்பில் கருப்பு புள்ளிகள் இருக்கும். மார்புக்குக் கீழ் மஞ்சள் நிறம் இருக்கும். **பண்புகள்:** பொதுவாகக் கூட்டமாகத் தென்படும். காலையிலும், உச்சிவெயில் நேரங்களிலும் கூட்டமாக நீர் நிலைகளுக்கு நீர் அருந்த வரும். கத்திகொண்டே பறக்கும். தரையில் முட்டையிடும். உச்சிவெயில் நேரங்களில் நீர்நிலைகளுக்கு வந்து, அதன் மார்புச் சிறகுகளில் நீரைச் சேமித்து வந்து குஞ்சுகளுக்கு நீருட்டும். **உணவு:** சிறு விதைகள், தானியங்கள், பூச்சிகள். **வாழிடம்:** வறண்ட புல்வெளிகள், தரிசு நிலங்கள், திறந்தவெளி முட்காடுகள் முதலிய வறண்டப் பகுதிகளில். ஆண்டு முழுவதும் காணப்படும். **இராமநாதபுரம் மாவட்டத்தில் வழங்கப்படும் பெயர்:** மண்காடை.







# செண்பகம்
## Greater Coucal
## *Centropus sinensis*




**உருவ அளவு:** 48 செ.மீ. **அங்க அடையாளம்:** தலை, உடல், நீண்ட வால் ஆகியவை கருப்பு நிறம். கண்கள் சிவப்பு நிறம். பருத்த அலகு கருப்பு நிறம். முதுகும் இறக்கையும் செம்பழுப்பு அல்லது அரக்கு நிறத்தில் இருக்கும். **பண்புகள்:** மரக்கிளைகளின் இடையே பதுங்கி மெல்ல தாவித்தாவிச் செல்லும். சில நேரங்களில் தரையிலும் நடந்துசென்று இரை தேடும். மர உச்சியில் சென்று அங்கிருந்து இறக்கையை அதிகம் அடிக்காமல் மேலிருந்து கீழே தவழ்ந்து அடுத்த மரத்திற்கோ புதருக்கோ செல்லும். கூப்கூப்கூப் என அடித்தொண்டையிலிருந்து கத்தும். குயில் வகையைச் சேர்ந்தது. ஆனாலும், குயிலைப் போல் அல்லாமல் கூடு கட்டி முட்டையிட்டு குஞ்சுகளைப் பராமரிக்கும். **உணவு:** எலி முதலான சிறிய பாலுட்டிகளையும், பல்லிகள், பாம்புகள், தவளைகள், சிறு பூச்சிகள், பறவைகளின் முட்டை, குஞ்சுகள் முதலியவை. **வாழிடம்:** புதர்க்காடுகள், மரங்கள் அடர்ந்த காட்டுப் பகுதி, ஊர்ப்புறங்கள். ஆண்டு முழுவதும் காணப்படும். **இராமநாதபுரம் மாவட்டத்தில் வழங்கப்படும் பெயர்:** செம்போத்துக் குயில்.



இளம் பறவை





# நீலக்கண்ணி
## Blue-faced Malkoha
### *Phaenicophaeus viridirostris*




***உருவ அளவு:*** 39 செ.மீ. ***அங்க அடையாளம்:*** கண்களைச் சுற்றி நீல நிறத் தோல் இருக்கும். உடல் பளபளப்பான கரும்பச்சை நிறத்தில் இருக்கும். வாலின் நுனியில் வெள்ளைத் திட்டுகள் இருக்கும். அலகு வெளிறிய பச்சை நிறத்தில் இருக்கும். கருப்பு நிறக் கழுத்திலும் மார்பிலும் வெள்ளை நிற நீள்வாக்கில் அமைந்த ஊசி போன்ற கோடுகள் இருக்கும். **பண்புகள்:** மிகவும் கூச்சமான பறவை. ஆட்களைக் கண்டால் மரங்களுக்குள்ளும் புதர்களுக்குள்ளும் சென்றுவிடும். கத்துவதைக் கேட்பது அரிது. தனியாகவோ அல்லது இணையுடனோ காணலாம். குயில் வகையைச் சேர்ந்தது. ஆனாலும் குயிலைப் போல் அல்லாமல் கூடு கட்டி முட்டையிட்டு குஞ்சுகளைப் பராமரிக்கும். **உணவு:** பூச்சிகள், கம்பளிப்புழுக்கள், வெட்டுக்கிளிகள், வண்டுகள், பல்லிகள் மற்றும் பழங்கள். **வாழிடம்:** முட்புதர்க்காடுகள், திறந்த வெளிக் காடுகள். ஆண்டு முழுதும் காணப்படும். **இராமநாதபுரம் மாவட்டத்தில் வழங்கப்படும் பெயர்:** பருத்த கண்ணி.





# சுடலைக்குயில்
## Pied Cuckoo
## *Clamator jacobinus*





சுடலைக்குயில் குஞ்சுக்கு தவிட்டுக்குருவி உணவூட்டும் காட்சி

***உருவ அளவு :*** *33 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** மேலுடல் கறுப்பாகவும், கீழுடல் வெண்மையாகவும் இருக்கும். உச்சந்தலை சிறகுகள் மேல் நோக்கி நீட்டிக்கொண்டிருக்கும். இறக்கையிலும் வாலின் முடிவிலும் வெள்ளைத் திட்டுகள் இருக்கும். இளம் பறவை பழுப்பு கலந்த கருப்பு நிறத்தில் இருக்கும், தலையில் சிறிய கொண்டை ஒன்று காணப்படும். **பண்புகள்:** பொதுவாக மரங்களின் உச்சியில் அமர்ந்திருக்கும். எப் போதாவது புதர்களிலும் தரையிலும் இரை தேடும். கூடு கட்டாது. பொதுவாக தவிட்டுகுருவிகளின் கூட்டில் முட்டையிடும். **உணவு:** பெரும்பாலும் கம்பளிப்புழுக்கள், வெட்டுக்கிளிகள், கறையான்கள், நத்தைகள், பறவைகளின் முட்டைகள், சிறு பழங்கள். **வாழிடம்:** திறந்தவெளிக் காடுகள், முட்புதர்க்காடுகள், சமவெளிப் பகுதிகள். ஆண்டு முழுதும் காணப்படும்.







# குயில்
## Asian Koel
## *Eudynamys scolopaceus*







***உருவ அளவு:*** 43 செ.மீ. ***அங்க அடையாளம்: ஆண்:*** பளபளக்கும் கருமை நிற உடலையும் நீண்ட வாலையும், பச்சை நிற அலகையும், சிவந்த கண்களையும் உடையது. **பெண்:** பழுப்பு நிற உடலில் சிறுசிறு வெண்ணிற திட்டுகளைக் கொண்டது. **பண்புகள்:** இனிமையாகக் கூவும். தானாகக் கூடு கட்டாது. காக்கைகளின் கூட்டில் முட்டை யிடும். ***உணவு:*** பெரும்பாலும் பழங்கள், கம்பளிப்புழுக்கள், ஏனைய பூச்சிகள், பறவைகளின் முட்டைகள். **வாழிடம்:** திறந்தவெளிக் காடு கள், தோட்டங்கள், விளை நிலங்கள், ஊர்ப்புறங்கள், நகரங்கள். ஆண்டு முழுதும் காணப்படும்.

குயில் குஞ்சுக்கு
காகம் உணவூட்டும் காட்சி







# அக்காகுயில்
## Common Hawk-Cuckoo
### *Hierococcyx varius*



அக்காகுயில் குஞ்சுக்கு சாம்பல் சிலம்பன் உணவூட்டும் காட்சி



***உருவ அளவு:*** 34 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடலின் மேல்பகுதி சாம்பல் நிறத்திலும், வயிற்றுப் பகுதி வெள்ளையாகவும் சிறுசிறு வரிகளுடனும் காணப்படும் கண்களைச் சுற்றி மஞ்சள் வளையம் இருக்கும். வாலில் கருப்பு, சாம்பல் நிற பட்டைகள் இருக்கும். **பண்புகள்:** எளிதில் பார்க்க முடியாது எனினும் இதன் குரலை அடிக்கடி கேட்கலாம். நள்ளிரவிலும் பாடுவதைக் கேட்கலாம். மரங் களினூடே மறைந்து இரை தேடும். பறக்கும்போது வல்லூரைப் போல் காணப்படுவதால், இதைக் காணும் பிற பறவைகள் அச்ச மடைந்து எச்சரிக்கை ஒலியை எழுப்பும். தவிட்டுக்குருவிகளின் கூட்டில் முட்டையிட்டுச் சென்றுவிடும். **உணவு:** பெரும்பாலும் கம்பளிப்புழுக்கள், வெட்டுக்கிளிகள், ஈசல்கள், எறும்பு, பல்லி, சிறு பழங்கள் போன்றவை. **வாழிடம்:** மரங்கள் அடர்ந்த பகுதிகள், திறந்த வெளிக் காடுகள், தோட்டங்கள், விவசாய நிலங்கள். ஆண்டு முழுதும் காணப்படும்.







# சின்ன இராப்பாடி
## Indian Nightjar
## *Caprimulgus asiaticus*




**உருவ அளவு:** 24 செ.மீ. **அங்க அடையாளம்:** பெரும்பாலும் தரையில் அமர்ந்தே காணப்படும். அலகு சிறியது. உடல் பழுப்பு, சாம்பல், ஆங்காங்கே கருப்பு, வெள்ளை, மஞ்சள் திட்டுகளுடன் இருக்கும். தலை தட்டையாக இருக்கும். கண்களின் மேல் அடர்ந்த சாம்பல் நிறப் பட்டை தென்படும். **பண்புகள்:** இது ஒரு இராவாடிப் பறவை அதாவது, இரவு நேரங்களில் மட்டுமே பறந்து திரியும் இயல்புடையது. பகலில் தரையில் அமர்ந்திருக்கும். அருகில் சென்றவுடன் சட்டென பறந்து சென்று வேறோரு இடத்தில் அமரும். இரவில் சில நேரங்களில் சாலையின் நடுவே அமர்ந்திருப்பதை வண்டியின் வெளிச்சத்தில் காணலாம். அந்தி மாலை நேரங்களில் தரையில், புதர்களின் மேல் அமர்ந்துகொண்டு டக் டக் டக் டக்ரூ என குரலெழுப்பும். பார்ப் பதைவிட இவற்றின் குரலை எளிதில் கேட்கலாம். ஓரிடத்தில் அமர்ந்து காற்றில் பறக்கும் பூச்சிகளைப் பறந்து பிடிக்கும். **உணவு:** சிறிய பூச்சிகள், அந்துப்பூச்சி, சாணிவண்டு, வெட்டுக்கிளி, முதலியவை. **வாழிடம்:** புதர்க்காடுகள், புல்வெளிகள், வயல்வெளிகள். ஆண்டு முழுவதும் காணப்படும்.




# நாட்டு உழவாரன்
## Indian House Swift
## *Apus affinis*





**உருவ அளவு:** *15 செ.மீ.* **அங்க அடையாளம்:** பனை உழவாரனை விடப் பெரியது. அடர் பழுப்பு நிற உடலையும் அகன்ற இறக்கை களையும் உடையது. தொண்டையும் கீழ் முதுகும் வெள்ளையாக இருக்கும். பறக்கும் போது, வால் சதுர வடிவில் இருக்கும். **பண்புகள்:** கூட்டமாக வேகமாக அவ்வப்போது கத்திக்கொண்டே உயரத்தில் பறக்கும். மேகமூட்டமாக இருக்கும்போது சற்று தாழப் பறக்கும். பாலங்களுக்கு அடியிலும், பாறை இடுக்குகளிலும், சில நேரங்களில் கோயில் விதானங்களின் உட்புறங்களிலும் கூடு கட்டும். **உணவு:** பூச்சிகள், வண்டுகள், தட்டான்கள். **வாழிடம்:** வெட்டவெளியிலும், மரங்களடர்ந்த வனப் பகுதிகளிலும், நகரப் பகுதிகளிலும் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# பனை உழவாரன்
## Asian Palm-Swift
*Cypsiurus balasiensis*






***உருவ அளவு:*** 13 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடல் சாம்பல் நிறத்தில் இருக்கும். தொண்டைப் பகுதி சற்று வெளுத்திருக்கும். வானில் பறக்கும்போது வில் வடிவில் இருக்கும். இறக்கைகளைப் படபட என அடித்துப் பறக்கும். வால் கூர்மையாக இருக்கும். சில நேரங்களில் பறக்கும்போது கவை போல வால் பிளவுபட்டிருப்பத்தைக் காணலாம். ***பண்புகள்:*** பெரும்பாலும் மூன்று பறவைகள் சேர்ந்து அங்குமிங்கும் கத்திக்கொண்டே பறக்கும். பனை ஓலைகளின் உள்ளே தமது எச்சிலை வைத்துக் கூடு கட்டும். மின்கம்பங்களிலோ, மரக் கிளைகளிலோ தகைவிலான்களைப் போல் அமராது. பனைமரங்களில் அடையும். ***உணவு:*** தரைக்கு அதிகம் வராமல் பறந்தபடியே ஈசல்கள், பறக்கும் எறும்புகள், பிற பூச்சிகள். ***வாழிடம்:*** பனைமரங்கள் நிறைந்துள்ள இடங்களில். நிச்சயமாக இப்பறவைகளைக் காணலாம். ஆண்டு முழு வதும் காணப்படும். **இராமநாதபுரம் மாவட்டத்தில் வழங்கப்படும் பெயர்:** மொன்னி வௌவால். எனினும் இது வௌவால் அல்ல. வௌவால் பாலூட்டி.









# தாழைக்கோழி
## Common Moorhen
## *Gallinula chloropus*





***உருவ அளவு :*** 32-35 செ.மீ. ***அங்க அடையாளம்:*** காணாங்கோழியை விடப் பெரியது. உடல் கருஞ்சாம்பல் நிறம், இறக்கைகளிலும், குட்டையான வாலிலும் வெள்ளைத் திட்டுகள் இருக்கும். அலகின் நுனி மஞ்சளும் அதைத் தொடர்ந்து சிவப்பு நிறமும் இருக்கும். நெற்றியில் சிவப்பு நிற கவசம் இருக்கும். கால் பச்சையாக இருக்கும். விரல்கள் நீர்த்தாவரங்களின் மேல் நடக்க ஏதுவாக மெல்லியதாகவும், நீண்டதாகவும் இருக்கும். இளம் பறவைகளுக்கு முகத்தில் சிவப்பு நிற கவசம் இருக்காது. உடல் நிறமும் பழுப்பு நிறத்தில் இருக்கும். **பண்புகள்:** நீர்நிலைகளின் ஓரத்தில் உள்ள தாவரங்களுக்கு இடையே இரை தேடும். நன்றாக நீந்தும். ஆட்களைக் கண்டால் புதர்களுக்குள் ஓடி மறையும். **உணவு:** நீர்த்தாவரத்தின் குருத்துகள், விதைகள், சிறு பூச்சிகள், மண்புழுக்கள், நத்தைகள், சிறு மீன்கள், தலைப்பிரட்டைகள். **வாழிடம்:** அனைத்து நன்னீர்நிலைகளிலும், நாணல்கள் வளர்ந்த, நீர் தேங்கியுள்ள இடங்களிலும் காணலாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.








# நாமக்கோழி
# Common Coot
# *Fulica atra*





**உருவ அளவு:** 36-38 செ.மீ. **அங்க அடையாளம்:** தாழைக்கோழியை விடச் சற்று பெரிதாக இருக்கும். உடல் கருப்பு. அலகு வெள்ளை. நெற்றியில் உள்ள கேடயம் வெள்ளையாக இருக்கும். கால்கள் நீரில் நீந்துவதற்கு ஏற்றவாறு தட்டையான சாம்பல் நிற விரல்களைக் கொண்டிருக்கும். இளம் பறவைகளின் அலகு கறுப்பாகவும், முகம், கழுத்து, மார்பு ஆகிய பகுதிகள் வெள்ளையாகவும் இருக்கும். குஞ்சுப் பறவைகளின் தலையில் பொன்னிற தூவிகள் இருக்கும். அலகு சிவப்பாக இருக்கும். **பண்புகள்:** ஆழம் குறைந்த நீரில் உயரமான புற்கள் அல்லது தாவரங்களுக்குள் மேடை அமைத்து, ஆண், பெண் இரண்டும் சேர்ந்து கூடு கட்டும். 6 முதல் 10 முட்டைகளிடும். பொதுவாக சிறுசிறு கூட்டமாக நீரில் நீந்திக்கொண்டிருக்கும். **உணவு:** அனைத்துண்ணி. நீர்த்தாவரங்களின் குருத்துகள், விதைகள், பாசிகள், நீர்வாழ் பூச்சிகள், இறால், தவளை, சிப்பி, மீன், மீன் முட்டைகள், சிறு பறவைகள் அவற்றின் முட்டைகள் போன்றவை. **வாழிடம்:** நீர்த்தாவரங்களுடன் கூடிய நன்னீர்நிலைகள். ஆண்டு முழுவதும் காணப்படும்.





இளம் பறவை



# நீலத்தாழைக்கோழி
## Grey-headed Swamphen
## *Porphyrio poliocephalus*





***உருவ அளவு:*** 45-50 செ.மீ. ***அங்க அடையாளம்:*** கோழியைவிடப் பெரியதாக இருக்கும். உடல் கருநீலம், நீண்ட கால்கள் சிவப்பு. விரல் கள் நீர்த்தாவரங்களின் மேல் நடக்க ஏதுவாக நீளமாக இருக்கும். அலகும் அதைத் தொடர்ந்து இருக்கும், நெற்றியில் உள்ள கேடயமும் சிவப்பு நிறம். வாலடி வெள்ளை நிறம். ***பண்புகள்:*** கோரை, நாணல் போன்ற கரையோரத் தாவரங்கள், மிதவை நீர்த்தாவரங்கள் நிறைந்த நீர்நிலைகளின் ஓரங்களில் இவற்றைக் காணலாம். பொதுவாக சிறு கூட்டமாகக் காணப்படும். கால்களைத் தொங்கவிட்டுக்கொண்டு குறைந்த தூரம் பறக்கும். பெண் துணையைக் கவர அலகில் நீர்த் தாவரங்களை வைத்துக்கொண்டு உரத்த குரலெழுப்பும். ***உணவு:*** நீர்த் தாவரங்களின் வேர், குருத்து. சிறு பறவைகள், தவளைகள், மீன்கள், முட்டைகள், பூச்சிகள், நத்தைகள், கணுக்காலிகள், ஊர்வன முதலி யவை. ***வாழிடம்:*** கரையோரத் தாவரங்கள் நிறைந்த உள்நாட்டு நன்னீர் நிலைகள். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# வெண்மார்பு கானாங்கோழி
## White-breasted Waterhen
*Amaurornis phoenicurus*




**உருவ அளவு:** 32 செ.மீ. **அங்க அடையாளம்:** நாமக்கோழியைவிடச் சிறியது. உடலின் மேல்பகுதி கருஞ்சாம்பல் நிறத்திலும், முகம், முன்கழுத்து, மார்பு ஆகியவை வெண்மை நிறத்திலும் இருக்கும். வால் நுனி துரு நிறத்தில் இருக்கும். அலகும் காலும் பச்சை மற்றும் மஞ்சள் கலந்த நிறத்தில் இருக்கும். மேல்அலகு தொடங்கும் இடத்தில் சிவப் புப் புள்ளி இருக்கும். **பண்புகள்:** நீர்நிலைகளுக்கு அருகில் புதர்களும், சேறுமாக இருக்கும் இடங்களில் நடமாடும். குட்டையான வாலை அவ்வப்போது வெடுக்வெடுக் என தூக்கும். இனப்பெருக்கக் காலங் களில் இது தொடர்ந்து குரல் எழுப்பிக்கொண்டே இருக்கும். **உணவு:** புழுக்கள், நத்தைகள், வண்டுகள், வெட்டுக்கிளிகள், அவற்றின் புழுக் கள், சிலந்திகள், சிறு மீன்கள், நீர்த்தாவரங்களின் விதைகள், வேர்கள் ஆகியவை. **வாழிடம்:** கோரைப்புற்களும், புதர்களும் சூழ்ந்திருக்கும் நீர்நிலைகளின் அருகில் தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# பெருங்கண்ணி
# Indian Thick-knee
## *Burhinus indicus*




***உருவ அளவு:*** 36-39 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடல் பழுப்பு, ஆங் காங்கே கருப்பு வரிகள் இருக்கும். இறக்கைகள் மடக்கிய நிலையில் கிடைமட்டமாக வெள்ளைக் கோடு இருக்கும். வெள்ளைப் புருவமும், முகத்தில் வெள்ளைத் திட்டும் இருக்கும். பகலில் பார்க்கும் போது கண்கள் மஞ்சள் நிறத்தில் தெரியும். தடித்த கருப்பு அலகின் அடிப்புறம் மஞ்சளாக இருக்கும். பறக்கும் போது இறக்கைகளில் உள்ள கருப்பு முதன்மைச் சிறகுகளும், வெள்ளைத் திட்டும் தெளிவாகத் தெரியும். ***பண்புகள்:*** இது ஒரு இரவாடிப் பறவை. பகலில் புதர்களுக்குக் கீழே அமர்ந்திருக்கும். தரையில் முட்டையிடும். அந்தி மாலை நேரங்களில் இவை குரலெழுப்பும். ***உணவு:*** வண்டு, வெட்டுக்கிளி, புழு, எறும்பு, சிறு ஊர்வன, மரவட்டை ஆகியவை. ***வாழிடம்:*** வறண்ட நிலங்கள், புல்வெளிகள், முட்புதர்க்காடுகள். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# கரையோரப் பெருங்கண்ணி
## Great Thick-Knee
*Esacus recurvirostris*




**உருவ அளவு:** 49-54 செ.மீ. **அங்க அடையாளம்:** மேல்அலகு நேராகவும், கீழ்அலகு வளைந்தும் இருக்கும். தூரத்தில் இருந்து பார்க்கும் போது ஒரு கத்தியைப் போன்று தோற்றமளிக்கும் அலகைக் கொண்டிருக்கும். இந்தத் தடித்த கருப்பு அலகின், அடிப்புறம் மஞ்ச ளாக இருக்கும். நெற்றியிலும், முகத்திலும் வெள்ளைத் திட்டுகள் இருக்கும். கண்கள் மஞ்சள் நிறத்திலும் அதன் பின்னால் கருப்புத் திட் டும் இருக்கும். உடல் பழுப்பு நிறம், தோள்பட்டையில் கருப்புக் கோடு இருக்கும். பறக்கும் போது இறக்கையில் உள்ள கருப்பு, வெள்ளைத் திட்டுகளைக் காணலாம். தடித்த உறுதியான கால்கள் வெளிர் பச்சை-மஞ்சள் நிறத்தில் இருக்கும். **பண்புகள்:** பொதுவாக நீரை ஒட்டியப் பகுதிகளில் காணலாம், மிகவும் கூச்சசுபாவம் கொண்டதால் ஆளரவம் கேட்டதும் விலகிச் செல்லும். திறந்தவெளி யில் வெயில் காயும். கவனமாக, மெதுவாக நடந்து செல்லும். **உணவு:** நண்டு முக்கியமான உணவு. ஒட்டு மீன்கள், பூச்சிகளையும் உண் ணும். அலகால் கற்களைப் புரட்டி உணவைத் தேடும். **வாழிடம்:** பொது வாக, நீர்நிலைகளை ஒட்டிக் காணப்படும். கடற்கரை ஓரங்களிலும் இருக்கும். ஆண்டு முழுதும் காணப்படும்.





# பவளக்கால் உள்ளான்

## Black winged Stilt

## *Himantopus himantopus*





**உருவ அளவு:** *35-40 செ.மீ.* **அங்க அடையாளம்:** உடல் பளிச்சிடும் கருப்பு வெள்ளை, நீண்ட பவள நிறக் கால்கள், ஊசி போன்ற நீண்ட அலகைக் கொண்டது. பறக்கும்போது நீண்ட கால்கள் வாலைத் தாண்டி நீட்டிக்கொண்டிருப்பதைக் காணலாம். **பண்புகள் :** பார்ப் போர் கவனத்தைக் கவரும் அழகான பறவை. ஆழமற்ற நீர்நிலை களிலும், அதனை ஒட்டியப் பகுதிகளிலும் மெதுவாக நடந்து இரை தேடும். மாசுபட்ட நீர்நிலைகளிலும் இவற்றைக் காணலாம். பொது வாகக் கூட்டம்கூட்டமாக இரை தேடும். இனப்பெருக்க காலங்களில் இவற்றின் தலையும் கழுத்தும் வெள்ளை வெளேரென இருக்கும். மற்ற காலங்களில் முதிர்ந்த பறவைகளின் தலையிலும், கண்களைச் சுற்றியும், பின் கழுத்திலும் கருப்புத் திட்டுக்கள் விட்டு விட்டோ, தொடர்ச்சியாகவோ தென்படும். **உணவு:** நீரில் உள்ள பூச்சிகள் முக்கிய உணவாகும். நத்தை, சிறிய மீன்கள், தலைப்பிரட்டை, தட்டான்கள் ஆகியவற்றை உண்ணும். **வாழிடம்:** நன்னீர், உவர்நீர்நிலைகளில் இருக்கும். ஆண்டு முழுவதும் காணப்படும்.







இனப்பெருக்க கால தோற்றம்



# கூனி அரிச்சான்
## Pied Avocet
## *Recurvirostra avosetta*



**உருவ அளவு:** 42-45 செ.மீ. **அங்க அடையாளம்:** உடல் கருப்பு வெள்ளை. உச்சந்தலையும், முகமும், பின்கழுத்தும் கருப்பு. இறக்கைகளில் கருப்பு நிறம் இருக்கும். இதை பறக்கும் போது தெளிவாகக் காணலாம். நீண்ட மெல்லிய மேல்நோக்கி வளைந்த அலகு. நீண்ட நீலச் சாம்பல் கால்கள். **பண்புகள்:** எளிதில் அடையாளம் காணக் கூடிய அழகிய பறவை. கூட்டமாகக் காணப்படும். ஆழம் குறைந்த நீர்நிலைகளில், மெதுவாக நடந்து, தலையை நீரில் முக்கி அலகைப் பக்கவாட்டில் அசைத்து, நடந்துகொண்டே உணவு தேடும். **உணவு:** பெரும்பாலும், நீர்நிலைகளில் உள்ள பூச்சிபுழுக்களை உண்ணும். இறால் வகையைச் சேர்ந்த உயிரினங்களை உண்ணும். கடலோர மாவட்டங்களில் கூனி (அல்லது சென்னாக்குன்னி) என்று அழைக்கப் படும் சிறிய இறால் வகையை உண்ணும் என நம்பப்படுவதால் இப் பறவையைக் கூனி அரிச்சான் என்று அழைக்கப்படுகிறது. **வாழிடம்:** கடற்கரையோர நீர்நிலைகள், உப்பங்கழிகள், நதி முகத்துவாரங்களில் அதிகமாகக் காணலாம். உள்நாட்டு பெரிய ஏரிகளிலும் அவ்வப்போது தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# கிளிஞ்சல் கொத்தி
## Eurasian Oystercatcher
## *Haematopus oestralegus*





**உருவ அளவு:** 40-46 செ.மீ. **அங்க அடையாளம்:** அமர்ந்த நிலையில் உடலின் மேல்பகுதி கருப்பு. கீழ்ப்பகுதி வெள்ளையாகத் தெரியும். பறக்கும் போது பின்முதுகு, வால், இறக்கை பகுதிகளில் வெள்ளை நிறம் தெரியும். வாலின் நுனி கருப்பு. பார்க்கும் போது இறக்கைகளின் கீழ்ப்பகுதி வெள்ளை நிறத்தில் இருப்பது தெரியும். இனப்பெருக்க காலங்களில் தலை முழுவதும் கறுப்பாகவும், இனப்பெருக்கம் செய் யாத இளம் பறவைகளில் கழுத்தில் வெள்ளைப் பட்டையும் இருக் கும். நீண்ட அலகு ஆரஞ்சு நிறம். கால்கள் இளஞ்சிவப்பு. **பண்புகள்:** கடலோரத்தில் தென்படும். மணலைக் கிளரிக் கிடைக்கும் கிளிஞ்சல் களை அலகால் திறந்து உள்ளிருக்கும் சதையை உண்ணும். வலசை வரும் பறவை. **உணவு:** கடலோரத்தில் தென்படும் புழுக்கள், பூச்சி கள், கிளிஞ்சல்கள், மெல்லுடலிகள், நண்டுகள் ஆகியவை. **வாழிடம்:** கடலோரங்கள், நதி முகத்துவாரங்கள். செப்டம்பர்முதல் மேவரை காணலாம்.





# சாம்பல் உப்புகொத்தி
## Grey Plover
## *Pluvialis squatarola*






**உருவ அளவு:** 27-30 செ.மீ. **அங்க அடையாளம்:** உருவ அளவில் ஏறத்தாழ ஆள்காட்டியை ஒத்திருக்கும். வலசைவரும் காலங்களில் சாம்பல் நிற உடலில் கருப்பு, வெள்ளை புள்ளிகளைக் கொண்டிருக் கும். பறக்கும் போது இறக்கைகளின் உள்பகுதியில் கருப்புத் திட்டு தெளிவாகத் தெரியும். இங்கிருந்து வலசைபோகும் காலங்களில் இதே பறவை இனப்பெருக்க கால தோற்றத்தினைக் கொண்டிருக்கும். இத்தோற்றத்தில் கழுத்து, வயிறு யாவும் கருப்பு நிறத்தில் இருக்கும். உச்சந்தலை, நெற்றி, கழுத்தின் பக்கவாட்டில், தோள்பட்டைவரை வெள்ளை நிறம் இருக்கும். **பண்புகள்:** கடலோரப் பகுதிகளில் மணல், ஈரமான நிலப் பகுதியைக் கிளரி இரை தேடும். வலசைவரும் பறவை. இளம் பறவைகள் சில வலசை போகாமல் ஆண்டு முழுவதும் இங் கேயே தங்கிவிடுவதும் உண்டு. **உணவு:** பூச்சிகள், புழுக்கள், சிறிய இறால் முதலியவை. **வாழிடம்:** கடற்கரையோரங்கள், முகத்துவாரங் கள், மணல் திட்டுகள். பொதுவாக ஆகஸ்ட்டு மாதங்களில் வலசை வரும். மே மாதம்வரை இருந்துவிட்டு பூமியின் வட பகுதிக்கு மீண்டும் வலசைபோகும்.







# பொன்னிற உப்புகொத்தி
## Pacific Golden Plover
### *Pluvialis fulva*






***உருவ அளவு:*** 23-26 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உருவ அளவில் ஏறத்தாழ சாம்பல் உப்புகொத்தியை ஒத்திருக்கும். இனப்பெருக்கம் முடிந்து தமிழகத்துக்கு வலசைவரும் போது (ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில்) இளம் மஞ்சள் நிற உடலில் பொரிபொரியாகக் கருப்புப் புள்ளிகளைக் கொண்டிருக்கும். இங்கிருந்து வலசைபோகும் போது (ஏப்ரல்-மே மாதங்களில்) முகத்திலும், உடலின் கீழ்ப்பகுதியிலும் கருப்பு நிறமும், உடலின் மேல்பகுதி கருப்பும் பொன்னிறமுமானப் புள்ளிகளும் இருக்கும். நெற்றியிலிருந்து கண்களுக்கு மேலே செல்லும் வெள்ளை பட்டை கழுத்தில் இறங்கி உடலின் பக்கவாட்டில் நீண்டு செல்லும். இது தூரத்தில் இருந்து பார்ப்பதற்கு வெள்ளைக் கொக்கிப் போலத் தெரியும். ***பண்புகள்:*** மிகவும் எச்சரிக்கையான பறவை. பொதுவாகக் கூட்டம் கூட்டமாகத் திரியும். தொந்தரவு ஏற்பட்டால் கூட்டம் முழுவதும், வளைந்துநெளிந்து பறந்து செல்லும். ***உணவு:*** நன்னீர், கடல்நீரில் உள்ள தரைவாழ் புழு, பூச்சிகள், போன்றவை. ***வாழிடம்:*** விளை நிலங்கள், மேய்ச்சல் நிலங்கள், கடலோரங்கள், உப்பங்கழிகள், கடலோரத் திட்டுகள்.







# மஞ்சள்மூக்கு ஆள்காட்டி
## Yellow-wattled Lapwing
## *Vanellus malabaricus*


இளம் பறவை



**உருவ அளவு:** 26–28 செ.மீ. **அங்க அடையாளம்:** கண்களுக்கும் அலகுக்கும் இடையில் மஞ்சள் நிறத் தசை தொங்கிக்கொண்டிருக்கும். கருப்பு அலகின் பின் பாதி மஞ்சள் நிறமாக இருக்கும். கால்களும் மஞ்சள் நிறம். உச்சந்தலை கருப்பு. கண்களுக்குப் பின் அடர்த்தியான வெள்ளைக் கோடு இருக்கும். உடல் பழுப்பு, வயிறு வெள்ளை நிறம். இறக்கைகளில் உள்ள வெள்ளைப் பட்டையும், வெளி ஓர கருப்பு சிறகுகளும், பறக்கும் போது தெளிவாகத் தெரியும். **பண்புகள்:** பொதுவாக ஜோடியாகவோ, சிறு கூட்டமாகவோ காணப்படும். வெட்டவெளிகளில் கழுத்தைக் குறுக்கிக்கொண்டு ஓடி சட்டென நின்று குனிந்து பூச்சிகளைப் பிடிக்கும். தரையில் முட்டையிடும். அருகில் சென்றால் உரக்க ஒலி எழுப்பிப் பறந்து செல்லும். **உணவு:** புழு, பூச்சிகள், முக்கியமாக வெட்டுக்கிளிகள், வண்டுகள், நத்தைகள் போன்றவை. **வாழிடம்:** வறண்ட, திறந்த, கற்கள் நிறைந்த விவசாய நிலங்கள், சில நேரங்களில் நீர்நிலைகளின் அருகிலும் தென்படும்.

ஆண்டு முழுதும் காணப்படும்.







# செம்மூக்கு ஆள்காட்டி
## Red-wattled Lapwing
### *Vanellus indicus*




இளம் பறவை

**உருவ அளவு:** 32-35 செ.மீ. **அங்க அடையாளம்:** மேல்உடல் பழுப்பு. தலையும் கழுத்தும் மார்பும் கறுப்பு. கறுப்பு நுனியுள்ள சிவப்பு அலகு. கண்களில் இருந்து அலகின் பாதி அளவுவரை சிவப்புத் தோல் இருக்கும். இறக்கைகளில் உள்ள வெள்ளைப் பட்டையும், வெளி ஓர கறுப்பு சிறகுகளும், பறக்கும் போது தெளிவாகத் தெரியும். பறக்கும் போது உடலின் மேல்பகுதியில் உள்ள வெள்ளைப் பட்டை 'V' வடிவில் தெரியும். கன்னத்திலிருந்து கீழுடல்வரை வெள்ளை யாக இருக்கும். **பண்புகள்:** மிகவும் எச்சரிக்கையாக இருக்கக்கூடிய பறவை. சிறு அரவம் கேட்டாலும் எச்சரிக்கை குரலெழுப்பிக் கத்த ஆரம்பிக்கும். தரையில் முட்டையிடும். **உணவு:** பூச்சி புழுக்கள் முக் கிய உணவு. வண்டு, வெட்டுக்கிளி, எறும்பு, கறையான், வண்ணத்துப் பூச்சி முதலியவை. **வாழிடம்:** பொதுவாக நீர்நிலைகள், விளை நிலங் கள், வறண்ட நிலங்கள் ஆகிய பகுதிகளில் சிறு கூட்டமாக இதைக் காணலாம். ஆண்டு முழுதும் காணப்படும்.





# சிறிய மணல்கொத்தி
## Lesser Sandplover
## *Charadrius mongolus*





இனப்பெருக்க கால தோற்றம்

**உருவ அளவு:** 19–21 செ.மீ. **அங்க அடையாளம்:** ஆகஸ்ட் மாதங்களில் வலசைவரும் போது உடலின் மேல்பகுதி பழுப்பு நிறமாகவும், கீழ்ப்பகுதி வெள்ளையாகவும் இருக்கும். மே மாதத்தில் இனப்பெருக்கம் செய்ய பூமியின் வட பகுதிக்கு செல்வதற்கு முன் மார்பில் இளம் ஆரஞ்சு நிறப் பட்டை இருக்கும். பறக்கும் போது இறக்கைகளில் உள்ள வெள்ளைப் பட்டை தெரியும். அலகு கருப்பு நிறம். **பண்புகள்:** கடற்கரையோரங்களிலும் அதனை அடுத்த நீர்நிலைகளிலும் அலைந்து திரிந்து உணவு தேடும். பெரிய மணல்கொத்தியை விட உருவத்தில், சிறியதாக இருக்கும். இருப்பினும் இரண்டையும் ஒன்றாக அருகருகே பார்த்தால் மட்டுமே இந்த வித்தியாசம் தெரியும். இரவிலும் உணவு தேடும். **உணவு:** பூச்சிகள், புழுக்கள், நண்டு, இறால் வகை உயிரினங்கள் சிப்பிகள் ஆகியவை. **வாழிடம்:** கடற்கரையோர மணல் பகுதி, திட்டுகள், முகத்துவாரங்களில் காணலாம். வெகு அரிதாக உள்நாட்டு நீர்நிலைகளிலும் காணப்படும்.







# பெரிய மணல்கொத்தி
## Greater Sandplover
## *Charadrius leschenaultii*





இனப்பெருக்க கால தோற்றம்

**உருவ அளவு:** 22–25 செ.மீ. **அங்க அடையாளம்:** சிறிய மணல் கொத்தியைவிட சற்றே பெரிய உடலையும், அலகையும், அகலமான தலையையும், நீண்ட கால்களையும் கொண்டது. அலகு கருப்பு நிறம். வலசைவரும் போது (ஆகஸ்டு மாதங்களில்) மேலுடல் பழுப்பாக வும், கீழுடல் வெள்ளையாகவும் இருக்கும். மே மாதங்களில் வலசை போகும் நிலையில் கண்களை மறைக்கும் வகையில் கண்ணாடி போல் கருப்புப் பட்டையும், கழுத்தின் பின்பகுதியிலும், மார்பிலும் இளம் ஆரஞ்சு நிறமும் இருக்கும். எனினும் எல்லாப் பறவைகளுக்கும் இப்படி இருக்காது. **பண்புகள்:** பொதுவாக சிறு கூட்டமாகவோ, தனியாகவோ கடற்கரை ஓரங்களில், அதனை ஒட்டிய கழிமுகங்களில் இரை தேடும். பெரும்பாலும் சிறிய மணல்கொத்திகளோடு சேர்ந்து காணப்படும். அவ்வப்போது கூட்டமாகத் திடீரெனப் பறந்து கடல் நீரின் மேல் வேகமாகப் பறந்து திரிந்து மீண்டும் ஓரிடத்தில் வந்து அமரும். **உணவு:** பெரும்பாலும் வண்டுகள், நத்தைகள், புழுக்கள், இறால் வகை உயிரினங்கள், நண்டுகள், பூச்சிகள், பல்லிகள் போன் றவை. **வாழிடம்:** கடற்கரை ஓரங்கள், அதனை ஒட்டியப் பகுதிகள்.



காண்க பக்கம் 79





# வெண்மார்பு உப்புகொத்தி
## Kentish Plover
## *Charadrius alexandrines*






**உருவ அளவு:** 15-17 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி பழுப்பு நிறம். கீழ்ப்பகுதி வெள்ளை நிறம். அலகு கருப்பு நிறம். கழுத்தின் பின்புறத்தைச் சுற்றி வெள்ளை பட்டை இருக்கும். தோள் பட்டையிலிருந்து வரும் கருப்பு கோடு மார்பில் சேராமல் பாதியி லேயே முடிவடைந்திருக்கும். கண்களுக்குப் பின்னே கருப்புத் திட்டு இருக்கும். கால்கள் கருப்பு நிறம். **பண்புகள்:** பெரும்பாலும் தனி யாகவே இரை தேடும். குடுகுடுவென ஓடி சட்டென நின்று குனிந்து தரையில், நீரில், இரை தேடும். வலசைவரும் பறவை. எனினும் இப்பறவையின் ஒரு உள்ளினம் தென்னிந்தியாவில் இனப்பெருக்கம் செய்யும். தரையில் முட்டையிடும். **உணவு:** வண்டு, பூச்சி, இறால் வகை உயிரினங்கள் நண்டு, நத்தை, புழுக்கள் போன்றவை. **வாழிடம்:** கடற்கரை ஓரங்களில், அதனை ஒட்டிய கழிமுகங்களில், உள்நாட்டு நன்னீர் நிலைகளின் ஓரங்களில் தென்படும்.






# பட்டாணி உப்புகொத்தி
## Little Ringed Plover
## *Charadrius dubius*


இளம் பறவை


இனப்பெருக்க கால தோற்றம்

**உருவ அளவு:** 14-17 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி பழுப்பு. கீழ்ப்பகுதி வெள்ளை. அலகு கருப்பு, கால்கள் வெளிறிய மஞ்சள் அல்லது இளஞ்சிவப்பு நிறம். முதிர்ந்த இனப்பெருக்கக் கால பறவையின் கண்களைச் சுற்றி மஞ்சள் வளையம் இருக்கும். கண்களுக்குப் பின்னே கருப்புத் திட்டு இருக்கும். வெள்ளை நெற்றி அதன் மேலே கருப்புப் பட்டை இருக்கும். உச்சந்தலை பழுப்பு. கழுத்து வெள்ளை அதன் கீழே மார்பைச் சுற்றி கருப்பு வளையம் இருக்கும். இளம் பறவைக்கு முகத்திலும் மார்பிலும் உள்ள கருப்புப் பட்டைகள் மங்கலாக இருக்கும். **பண்புகள்:** ஜோடியாகவோ, சிறு கூட்டமாகவோ இருக்கும். பிற கரைப் பறவைகளோடு சேர்ந்து இரை தேடும். குடுகுடுவென ஓடிச் சட்டென நின்று குனிந்து தரையில், நீரில், இரை தேடும். தரையில் முட்டையிடும். **உணவு:** பெரும் பாலும் வண்டு, புழு, பூச்சிகள், தலைப்பிரட்டை, இறால்கள். **வாழிடம்:** ஏரிகள், ஆறுகள், கடற்கரை முதலான பல்வேறுபட்ட நன்னீர், உவர் நீர்நிலைகள். ஆண்டு முழுதும் காணப்படும்.









| பெரிய மணல்கொத்தி<br>Greater Sand plover | VS | சிறிய மணல்கொத்தி<br>Lesser Sand plover |
|---|---|---|

## உச்சந்தலை

சற்றே சதுர வடிவில் இருக்கும்

வளைந்து காணப்படும்







## பறக்கும் நிலையில் இறக்கையில் தெரியும் வெள்ளைப் பட்டை







## கழுத்தை குறுக்கி வைத்திருக்கும் நிலை







## நிமிர்ந்து நிற்கும் நிலை



## மயில் உள்ளான்
## Greater Painted-Snipe
## *Rostratula benghalensis*

***உருவ அளவு:*** *25 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *மடையான் அளவுள்ள நீர்ப்பறவை. கோரைக்கொத்தியைப் போன்ற நீண்ட அலகைக் கொண்டிருக்கும். அலகு நுனியில் லேசாக வளைந்திருக்கும். ஆண் பறவையை விட பெண் பறவையின் உடலில் பல நிறங்கள் இருக்கும்.* ***பெண்:*** *தலை, கழுத்து, மார்புப் பகுதி ஆகியவை செம்பழுப்பு நிறம். மார்பைச் சுற்றி கருப்பு வளையம் இருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை. முதுகும், இறக்கைகளும் கரும்பச்சை நிறத்தில் இருக்கும். தோள்பட்டையில் வெள்ளைக் கோடு வயிற்றுடன் இணைந்திருக்கும். கண்களைச் சுற்றி வெள்ளை வளையமும், கண்களின் பின்னால் மையிட்டது போல வெள்ளைக் கோடும் இருக்கும்.* ***ஆண்:*** *தலை, கழுத்து, உடலின் மேல்பகுதி ஆகியவை பழுப்பு நிறமாக இருக்கும். உடலின் மேல் பெரிய இளம் பழுப்பு புள்ளிகள் இருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை. தோள்பட்டையில் வெள்ளைக் கோடு வயிற்றோடு இணைந்திருக்கும். கண்களைச் சுற்றி வெள்ளை வளையமும், கண்களின் பின்னால் மையிட்டது போல வெள்ளைக் கோடும் காணப்படும்.* ***பண்புகள்: பெண்*** *பறவை 2-4* ***ஆண்*** *பறவைகளோடு இணைசேரும். நீர்நிலைகளில், வயல்வெளிகளில் தரையில் உள்ள புற்கள், புதர்களுக்கு உள்ளே கூடமைக்கும். பெண் பறவை முட்டையிட்டு விட்டு சென்றுவிடும். ஆண் பறவைகள் அடைகாத்து, குஞ்சுகளை வளர்க்கும்.* ***உணவு:*** *அனைத்துண்ணி. பூச்சி, நத்தை, இறால் வகை உயிரினங்கள், மண்புழு. இதைத் தவிர புற்கள், அரிசி, சிறுதானியங்கள் போன்றவை.* ***வாழிடம்:*** *அனைத்து நீர்நிலைகள், குறிப்பாகப் புல்வெளிகள், சதுப்பு நிலங்களில் வாழும்.* ***ஆண்டு முழுதும்*** *காணப்படும்.*

# அரிவாள்மூக்கு உள்ளான்
## Whimbrel
*Numenius phaeopus*




**உருவ அளவு:** 40-46 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி கரும்பழுப்புப் புள்ளிகளைக் கொண்டிருக்கும். கீழ்ப்பகுதி வெளிறியப் பழுப்பு நிறம். அதில் கழுத்திலிருந்து மார்புவரை கரும்பழுப்பு வரிகள் இருக்கும். அடர்ந்த வெள்ளைப் புருவம் இருக்கும். உச்சந்தலையில் கருப்பு வெள்ளை வரிகள் இருக்கும். கருப்பு அலகு முன்னோக்கி வளைந்திருக்கும். பறக்கும் போது முதுகில் உள்ள அம்பு போன்ற வெள்ளைத் திட்டு தெளிவாகத் தெரியும். **பண்புகள்:** சிணுங்கும் உள்ளான் போல் தோற்றமளிக்கும், ஆனால், தோற்றத்தில் சிறியது. அலகும் சிணுங்கும் உள்ளானைவிடச் சிறியது. தனியாகவோ, சிறு கூட்டமாகவோ கடற்கரையோரங்களில் இரை தேடும். வலசைவரும் பறவை. **உணவு:** பெருமளவு கடலில் கிடைக்கும் நண்டுகள், இறால் வகை உயிரினங்கள், நத்தைகள், புழுக்கள் போன்றவை. **வாழிடம்:** கடற்கரையோர மணல் வெளிகள், சதுப்பு நிலப்பகுதிகள்.

ஆகஸ்டுமுதல் ஏப்ரல்வரை பொதுவாகக் காணலாம்.




# சிணுங்கும் உள்ளான்
## Eurasian Curlew
## *Numenius arquata*





**உருவ அளவு:** 50-60 செ.மீ. **அங்க அடையாளம்:** அரிவாள் மூக்கு உள்ளானைப் போல இருந்தாலும், உருவில் பெரியது. அலகு நீண்டும் முனையில் கீழ்நோக்கியும் வளைந்திருக்கும். உடலின் மேலும், தலையிலும், கழுத்திலும் பழுப்பு நிறமும், ஆங்காங்கே கருப்புத் திட்டுகளும் இருக்கும். அடிவயிறும், வாலின் கீழ்ப்பகுதியும் வெள்ளையாக இருக்கும். உடலின் பக்கவாட்டில் பழுப்பு வரிகள் இருக்கும். பறக்கும் போது முதுகில் உள்ள கூம்பு வடிவ வெள்ளைத் திட்டு தெரியும். **பண்புகள்:** கடற்கரையோரமாகவும், அதனை ஒட்டிய கழிமுகப் பகுதிகளில் தனது நீண்ட அலகை மண்ணுக்குள் விட்டு இரைகளைப் பிடிக்கும். இப்பறவையின் குரலொலி இரண்டு சுரங்களைக் கொண்டிருக்கும். தூரத்தில் இருந்து கேட்கும் போது இதன் குரல் சிணுங்குவது போலிருக்கும். பொதுவாகத் தனியாகவும் சில நேரங்களில் கூட்டமாகவும் தென்படும். **உணவு:** வளைத் தசைப் புழுக்கள், கணுக்காலிகள், நத்தைகள் போன்றவை. **வாழிடம்:** கடற்கரையோர மணல் வெளிகள், சதுப்பு நிலப்பகுதிகள், கடற்கரையோர மண் திட்டுகள், அருகிலுள்ள சதுப்புநிலங்களில் காணலாம். ஆகஸ்டுமுதல் ஏப்ரல் வரை பொதுவாகக் காணலாம்.





# பட்டைவால் மூக்கான்
# Bar-tailed Godwit
## *Limosa lapponica*





**உருவ அளவு:** *37–41* செ.மீ. *அங்க அடையாளம்:* உடலின் மேல் பகுதி பழுப்பாகவும், கருப்பழுப்பும், கருப்பு நிறத் திட்டுகளும் இருக்கும். நீண்ட அலகு சற்றே மேல்நோக்கி வளைந்திருக்கும். அலகின் முன்பாதி இளஞ்சிவப்பாகவும், பின்பாதி கறுப்பாகவும் இருக்கும். அடர்ந்த வெள்ளை நிறப் புருவம் இருக்கும். பறக்கும் போது வாலின் மேல் சிறிய கருப்பு நிறக் கோடுகள் தெரியும். முதுகிலும் கூம்பு போன்ற வெள்ளைத் திட்டு தெரியும். இங்கிருந்து வலசைசெல்லும் காலங்களில் சில பறவைகளுக்கு உடலில் செங்கல் நிற சிறகுகள் வளர ஆரம்பிக்கும். **பண்புகள்:** ஆழமற்ற நீரில் இரை தேடும். பொதுவாக சிறு கூட்டமாக மற்ற கரையோரப் பறவைகளுடன் சேர்ந்து காணப்படும். கடற்கரையை ஒட்டியப் பகுதிகளில் மட்டுமே தென்படும் அலகால் மண்ணைக் கிளறியும், குத்தியும் இரை தேடும். **உணவு:** கடல் நத்தைகள், புழுக்கள் போன்றவை. **வாழிடம்:** பெரும்பாலும் கடலோரங்களில் காணலாம். ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் வலசை வந்து மீண்டும் ஏப்ரல்-மே மாதங்களில் பூமியின் வட பகுதிகளுக்கு இனப்பெருக்கம் செய்ய திரும்பிப் போகும். சில இளம் பறவைகள் இங்கேயே தங்கிவிடுவதும் உண்டு.


இனப்பெருக்க கால தோற்றம்





# கருவால் மூக்கான்
## Black – tailed Godwit
## *Limosa limosa*






***உருவ அளவு :*** *36-44 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *உடலின் மேல்பகுதி இளம் பழுப்பு, வயிறும் வாலின் கீழ்ப்பகுதியும் வெள்ளை. அலகு கருப்பும், இளஞ்சிவப்பு நிறம். கழுத்து, அலகு, கால்கள் யாவும் பட்டைவால் மூக்கானைவிட சற்றே நீளமாக இருக்கும். பறக்கும் போது வாலில் கருப்புப் பட்டையும், இறக்கைகளில் வெள்ளைப் பட்டையும் தெளிவாகத் தெரியும்.* **பண்புகள்:** *நீர்நிலைகளின் ஆழ மான பகுதிகளில்கூட நீண்ட அலகுகளால் இரை தேடும். பொதுவாக மற்ற கரைப் பறவைகளோடு கூட்டமாக இரை தேடும். பட்டைவால் மூக்கானைப் போலல்லாமல் உள்நாட்டு நீர்நிலைகளிலும் பரவலாகத் தென்படும். வலசைவரும் பறவை.* **உணவு:** *பெரும்பாலும் பூச்சி கள், புழுக்கள், வளைத்தசை புழுக்கள், நத்தைகள், சிலந்திகள், மீன்முட்டைகள், தலைப்பிரட்டைகள் முதலியவை.* **வாழிடம்:** *நன்னீர் நிலைகளிலும், கடற்கரையோர, உவர்நீர் சதுப்பு நிலங்களிலும் தென் படும். ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் வலசை வந்து மீண்டும் ஏப்ரல்-மே மாதங்களில் பூமியின் வட பகுதிகளுக்கு இனப்பெருக்கம் செய்ய திரும்பிப் போகும். சில இளம் பறவைகள் இங்கேயே தங்கி விடுவதும் உண்டு.*







# கல்திருப்பி உள்ளான்
## Ruddy Turnstone
## *Arenaria interpres*


இனப்பெருக்க கால தோற்றம்



**உருவ அளவு:** 23 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி யிலிருந்து மார்புவரை கரும்பழுப்பு நிறம். ஆங்காங்கே இளம் பழுப் புத் திட்டுகளும் இருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை. கால்கள் ஆரஞ்சு நிறம். பறக்கும் போது இறக்கைகளில் உள்ள வெள்ளைக் கோடும், முதுகில் உள்ள வெள்ளைத் திட்டும் தெளிவாகத் தெரியும். அதுபோலவே, பறக்கும் போது விசிறிபோல் விரிக்கப்பட்ட வால் சிறகுகளின் ஓரங்கள் கறுப்பாகவும், அதன் மேலே வெள்ளையாகவும் இருக்கும். வலசைபோகும் காலங்களில் உடலின் மேல் செம்பழுப்பு நிறத் திட்டுகள் தோன்றும். **பண்புகள்:** கற்கள், கிளிஞ்சல், குப்பை களைப் புரட்டி அவற்றின் அடியிலுள்ள இரையைத் தேடிப்பிடித்து உண்ணும். கடற்கரை ஓரங்களிலும், நீரிலிருந்து மேலே நீட்டிக்கொண் டிருக்கும் பாறைகளின் மேலும் காணலாம். **உணவு:** பூச்சி, புழு, வண்டு, நண்டு, போன்றவை. **வாழ்விடம்:** பாறைகள், கற்கள் நிறைந்த கடற்கரைப் பகுதிகள். ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் வலசை வந்து மீண்டும் ஏப்ரல்-மே மாதங்களில் பூமியின் வட பகுதிகளுக்கு இனப்பெருக்கம் செய்ய திரும்பிப் போகும். சில இளம் பறவைகள் இங்கேயே தங்கிவிடுவதும் உண்டு.





# பெரிய உள்ளான்
## Great Knot
## *Calidris tenuirostris*




**உருவ அளவு:** 26-28 செ.மீ. **அங்க அடையாளம்:** தோற்றத்தில் பேதை உள்ளான் போல இருக்கும். உடலின் மேல்புறம் பழுப்பு, வெள்ளை, கருப்பு நிறங்களைக் கொண்டிருக்கும். சிறகுகள் செதில்செதிலாகத் தோற்றமளிக்கும். கண்களின் மேல் மெல்லிய வெள்ளை புருவம் இருக்கும். உடலின் பக்கவாட்டில் கருப்புப் புள்ளிகள் இருக்கும். கழுத்திலும் மார்பிலும் சிறிய பழுப்புக் கோடுகளும், புள்ளிகளும் இருக்கும். உடலின் கீழ்ப்புறம் வெள்ளை. வால் சிறகுகள் கருப்பு நிறம். லேசாக வளைந்த அலகைக் கொண்டிருக்கும். இனப்பெருக்கக் காலங்களில் உடலின் மேல்புறம் அடர் பழுப்பு, கருப்பு நிறமாகவும், தோள்பட்டையில் செங்கல் சிவப்பு நிற சிறகுகளும் தோன்றும். கீழ்ப்புறத்தில் உள்ள புள்ளிகள் பெரிதாகவும், அடர் பழுப்பு, கருப்பு நிறமாகவும் இருக்கும். **பண்புகள்:** பொதுவாக மற்ற கரையோரப் பறவைகளோடு சேர்ந்து இரை தேடும். வலசைவரும் பறவை. சில இளம் பறவைகள் இங்கேயே தங்கிவிடுவதும் உண்டு. தென்னிந் தியாவில் ஆகஸ்டுமுதல் அக்டோபர்வரை அதிகமாகப் பதிவுசெய்யப் பட்டுள்ளது. **உணவு:** இறால் வகை உயிரினங்கள், மெல்லுடலிகள், நண்டு ஆகியவை. **வாழிடம்:** கடற்கரையோரப் பகுதிகள், உப்பங் கழிகள், முதலான கடலைச் சார்ந்த பகுதிகளில் மட்டுமே தென்படும்.




# பேதை உள்ளான்
## Ruff
## *Calidris pugnax*




***உருவ அளவு: ஆண்:*** 26-32 செ.மீ. ***பெண்:*** 20-25 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடலின் மேல்புறம் உள்ள சிறகுகளின் நடுவில் கரும் பழுப்பாகவும், அதன் ஓரங்கள் இளம்பழுப்பாகவும் இருக்கும். இது செதில்களைப் போன்ற தோற்றத்தை அளிக்கும். தலையும், மார்பும் இளம் பழுப்பு. உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை. கால்கள் ஆரஞ்சு நிறம். அலகு கருப்பு நிறம். இங்கிருந்து வலசைபோகும் காலங்களில் (ஏப்ரல்) உடலின் நிறம் சற்று மங்கலாக இருக்கும். தென்னகத்திற்கு வலசைவரும் போது இவற்றின் நிறமும், தோற்றமும் இனப்பெருக்கம் செய்யும் பூமியின் வடக்குப் பகுதிகளில் முற்றிலுமாக மாறியிருக்கும். ***பண்புகள்:*** பொதுவாக கடற்கரையோரங்களிலும், அதனை ஒட்டிய நீர்நிலைகளில் தனியாகவோ, கூட்டமாகவோ இரை தேடும். மற்ற கரைப் பறவைகளோடு சேர்ந்து காணப்படும். கூட்டமாகப் பறக்கும். சில நேரங்களில் உள்நாட்டு நீர்நிலைகளிலும் தென்படும். ***உணவு:*** பூச்சிகள், வெட்டுக்கிளிகள், தவளைகள், மீன்கள் முதலியவை, ***வாழிடம்:*** நீர்நிறைந்த, சதுப்புநிலங்கள், சகதியான புல்வெளிகள், கடலை ஒட்டிய நீர்நிலைகள்.





# வரித்தலை மண்கொத்தி
## Broad billed Sandpiper
## *Calidris falcinellus*





**உருவ அளவு:** 16-18 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி அடர்ந்த பழுப்பு நிறத்திலும், ஆங்காங்கே வெள்ளைத் திட்டுகளும் கொண்டிருக்கும். கீழ்ப்பகுதி வெள்ளையாகவும், உடலின் பக்கவாட்டில் அடர்பழுப்பு வரிகளும் காணப்படும். அடர்த்தியான வெள்ளைப் புருவம் இருக்கும். நேருக்கு நேர் பார்க்கும் போது அலகில் இருந்து தலையில் *'V'* போன்ற வடிவில் இந்த வெள்ளைப் புருவங்கள் தெளிவாகத் தெரியும். உச்சந்தலையில் வரிகள் காணப்படும். அலகு மற்ற மண்கொத்திகளைக் காட்டிலும் சற்று பருத்துக் காணப்படும். நுனியில் சற்று வளைந்திருக்கும். பறக்கும் போது வாலின் இரு புறமும் வெள்ளையாகவும், நடுவிலும், வாலின் நுனியிலும் அடர்பழுப்பாகவும் காணப்படும். **பண்புகள்:** பொதுவாக தனியாகவே இரை தேடும். சில நேரங்களில் சிறு கூட்டமாகவும் தென்படும். பிற கரையோரப் பறவைகளோடு சேர்ந்து இரை தேடும். வலசைவரும் பறவை. **உணவு:** பெரும்பாலும் கடலில் உள்ள புழுக்கள், புழு முட்டைகள், பூச்சிகள் நத்தைகள் போன்றவை. **வாழிடம் :** கடலோரங்கள், நதிமுகத்துவாரங்கள். ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் இங்கு வலசை வந்து மார்ச்-ஏப்ரல் மாதம்வரை இருக்கும்.







# வளைமூக்கு மண்கொத்தி
## Curlew Sandpiper
## *Calidris ferruginea*





இனப்பெருக்க கால தோற்றம்

***உருவ அளவு:*** 18-23 செ.மீ. ***அங்க அடையாளம்:*** ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் தென்னிந்தியாவிற்கு வலசைவரும் காலங்களில் இப்பறவையின் மேலுடலில், கரும்பழுப்பு, இளம் பழுப்பு, வெள்ளை நிறங்களால் ஆன சிறகுகள் செதில்செதிலாகத் தோன்றும். கண்களின் மேல் அடர்ந்த புருவம் இருக்கும். மார்புவரை இளம் பழுப்பு நிறமாகவும், அடிவயிறும், வாலின் அடிப்பகுதி வெள்ளையாகவும் இருக்கும். பறக்கும் போது இறக்கைகளில் உள்ள வெள்ளைக் கோடுகளும், அடி முதுகில் உள்ள வெள்ளைத் திட்டும் தெளிவாகத் தெரியும். இவை பூமியின் வடபகுதிகளுக்கு இனப்பெருக்கம் செய்ய இங்கிருந்து புறப்படும் வேளையில் (ஏப்ரல்-மே மாதங்களில்), முதிர்ந்த பறவைகளுக்கு உடல் முழுவதும் செங்கல் நிறச் சிறகுகள் தோன்றும். **பண்புகள்:** கடற்கரையோர மணல் பகுதிகளில் மற்ற கரையோரப் பறவைகளோடு சேர்ந்து இரை தேடும். வலசைவரும் பறவை. **உணவு:** பூச்சிகள், புழுக்கள், நத்தைகள் முதலியவை. **வாழிடம்:** கடற்கரையோர ஈர நிலப் பகுதிகளில் மட்டுமே தென்படும். வெகு அரிதாக உள்நாட்டு நீர்நிலைகளில் வலசைவரும் காலங்களில் காணலாம்.





வரித்தலை
மண்கொத்தி



# மஞ்சக்கால் கொசு உள்ளான்
## Temminck's Stint
## *Calidris temminckii*




**உருவ அளவு:** *13–15* செ.மீ. **அங்க அடையாளம்:** உருவில் சிறிய பறவை. ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் தென்னிந்தியாவிற்கு வலசைவரும் காலங்களில் இப்பறவையின் மேலுடல் பழுப்பு நிற மாகவும், கீழுடல் வெள்ளையாகவும் இருக்கும். தலை, மார்பு ஆகி யவை இளம் பழுப்பு. இவை பூமியின் வட பகுதிகளுக்கு இனப் பெருக்கம் செய்ய இங்கிருந்து புறப்படும் வேளையில் (ஏப்ரல்-மே), உடலின் மேல்பகுதியில் அடர் பழுப்பும், செங்கல் சிவப்புத் திட்டுகளும் தோன்றும். பறக்கும் போது வாலின் இரு ஓரங்களும் வெள்ளையாக இருக்கும். இவற்றின் கால்கள் மஞ்சள் நிறம். இதை வைத்தே சின்ன கொசுஉள்ளானையும் இப்பறவையையும் பிரித்தறிய முடியும். எனினும் சேற்றில் நடந்து செல்வதால் சில நேரங்களில் கால் களின் நிறம் சின்ன கொசுஉள்ளானைப் போல தெரியும். **பண்புகள்:** தனியாகவோ, சிறு கூட்டமாகவோ காணப்படும். அங்குமிங்கும் ஓடி, அலகால் மண்ணைக் குத்திக்குத்தி இரை தேடும். **உணவு:** பெரும் பாலும் வண்டு அதன் புழுக்கள், பூச்சிகள் சிறு நத்தைகள் போன்றவை. **வாழிடம் :** பல்வேறுபட்ட நீர்நிலைகளில் காணலாம்.







# வெள்ளை உள்ளான்
## Sanderling
## *Calidris alba*


இனப்பெருக்க கால தோற்றம்



**உருவ அளவு:** 20 செ.மீ. **அங்க அடையாளம்:** மற்ற கரையோரப் பறவைகளை ஒப்பிடுகையில் வலசைவரும் காலங்களில் (ஆகஸ்டு-செப்டம்பர்) வெள்ளைவெளேரென்று இருக்கும். உடலின் மேல் பகுதியில் வெள்ளை மற்றும் கருப்பு அல்லது அடர் பழுப்பு புள்ளிகள் இருக்கும். இவை பூமியின் வட பகுதிகளுக்கு இனப்பெருக்கம் செய்ய இங்கிருந்து புறப்படும் வேளையில் (ஏப்ரல்-மே மாதங்களில்), உடலின் மேல்பகுதியில் அடர் பழுப்பும், செங்கல் சிவப்புத் திட்டு களும் தோன்றும். பறக்கும் போது வாலின் இரு ஓரங்களிலும், இறக் கைகளிலும் உள்ள வெள்ளைக் கோடுகள் தெரியும். **பண்புகள்:** அலை அடிக்கும் இடத்தில் பெரும்பாலும் காணலாம். தனியாகவோ, சிறு கூட்டமாக இருக்கும். மற்ற கரையோரப் பறவைகளோடு சேர்ந்து இரை தேடும். **உணவு:** நீரிலும், நீரை ஒட்டிய தரையிலும் உள்ள சிறுநத்தை, ஒட்டு மீன்கள், பூச்சிகள், புழுக்கள், சிறு நத்தைகள் முதலியவை. **வாழிடம்:** மணற் பாங்கான கடற்கரையோரப் பகுதிகள்.





# கருவயிற்று மண்கொத்தி
## Dunlin
## *Calidris alpina*





**உருவ அளவு:** 16-22 செ.மீ. ***அங்க அடையாளம்:*** *தென்னிந்தியாவிற்கு வலசைவரும் காலங்களில் (செப்டம்பர்-அக்டோபர்களில்) தலை இளம் பழுப்பாகவும், உடலின் மேல்பகுதி பழுப்பு அல்லது அடர்பழுப்பு நிறத்திலும் இருக்கும். கீழ்ப்பகுதி வெள்ளை. கண்ணின் மேல் லேசான வெள்ளை நிறப் புருவம் காணப்படும். பூமியின் வட பகுதிகளுக்கு இனப்பெருக்கம் செய்ய இங்கிருந்து புறப்படும் வேளையில் (மார்ச்-ஏப்ரல்), இவற்றில் சில பறவைகளுக்கு உடலின் மேல்பகுதியில் அடர் பழுப்பும், செங்கல் சிவப்புத் திட்டுகளும் தோன்றும். வயிற்றுப் பகுதியில் கருப்புப் புள்ளிகளும் தோன்றும். இவை தென்னிந்தியாவை விட்டு வலசை செல்லும் போது இனப்பெருக்கக் கால இறகுத் தொகு தியை (Breeding Plumage) முழுவதுமாக அடைந்திருக்காது. வடக்கே செல்லச்செல்ல இவற்றின் உடலின் மேல்பகுதி அடர் பழுப்பாகவும், செங்கல் சிவப்பாகவும், வயிறு கறுப்பாகவும் இருக்கும்.* ***பண்புகள்:*** *பெரும்பாலும் தனியாகவோ, சிறு கூட்டமாகவோ, பிற கரைப் பறவை களோடு சேர்ந்தும் காணலாம்.* ***உணவு:*** *கடற்கரையோரம் தென்படும் புழு, பூச்சி, வெகு அரிதாக சிறிய மீன்கள்.* ***வாழிடம்:*** *கடற்கரை யோரங்களிலும், அதனை அடுத்த நீர்நிலைகளும் காணப்படும்.*



இனப்பெருக்க கால தோற்றம்



# சின்ன கொசு உள்ளான்
## Little Stint
## *Calidris minuta*


இனப்பெருக்க கால தோற்றம்



***உருவ அளவு:*** 13-15 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உருவத்தில் சிறிய பறவை. ஆகஸ்டு-செப்டம்பரில் தென்னிந்தியாவிற்கு வலசைவரும் காலங்களில் இப்பறவையின் மேலுடல் பழுப்பு அல்லது அடர் பழுப்பு நிறமாகவும், கீழுடல் வெள்ளையாகவும் இருக்கும். தலை, மார்பு ஆகியவை இளம் பழுப்பு. பூமியின் வட பகுதிகளுக்கு இனப்பெருக்கம் செய்ய இங்கிருந்து புறப்படும் வேளையில் (ஏப்ரல்-மே), சில பறவை களுக்கு உடலின் மேல்பகுதியில் அடர்பழுப்பும், செங்கல் சிவப்புத் திட்டுகளும் தோன்றும். எல்லா நிலைகளிலும், பறக்கும் போது வாலின் இரு ஓரங்களும் சாம்பல் நிறத்தில் இருக்கும். அதற்கு சற்று மேலே வெள்ளைத் திட்டு இருக்கும். இவற்றின் கால்கள் கருப்பு நிறம். ***பண்புகள்:*** பெரும்பாலும் தனியாகவோ, சிறு கூட்டமாகவோ, பிற கரைப் பறவைகளோடு சேர்ந்தோ காணப்படும். மிகவும் சுறுசுறுப் பான பறவை. அங்குமிங்கும் ஓடி, அலகால் மண்ணைக் குத்திக் குத்தி இரை தேடும். வலசைவரும் பறவை. சில பறவைகள் இங்கே ஆண்டு முழுவதும் தங்கிவிடுவதும் உண்டு. ***உணவு:*** நீரிலும், அதை ஒட்டிய தரையிலும் உள்ள சிறு நத்தைகள், பூச்சிகள், புழுக்கள் முதலி யவை. ***வாழிடம்:*** நன்னீர் உவர் நீர்நிலைகள்.







## மூன்று வகையான மண்கொத்திகளின் (பறக்கும் நிலையில் தெரியும்) வால் சிறகுகளின் தோற்றம்

மண்கொத்தி
Common Sandpiper





ஆற்று மண்கொத்தி
Green Sandpiper





பொரி மண்கொத்தி
Wood Sandpiper





## மூன்று வகையான மண்கொத்திகளின் அலகின் வடிவங்கள்

வரித்தலை மண்கொத்தி
Broad-billed Sandpiper





கருவயிற்று மண்கொத்தி
Dunlin





வளைமூக்கு மண்கொத்தி
Curlew sandpiper





# ஊசிவால் கோரைகொத்தி
## Pin-tailed Snipe
## *Gallinago stenura*

***உருவ அளவு:*** 25-27 செ.மீ. ***அங்க அடையாளம்:*** நீண்ட அலகைக் கொண்டது. செவ்வக வடிவ தலையும், ஏறுநெற்றியும் கொண்டது. இளம் பழுப்பும், கரும்பழுப்புமாகப் பெரிய வரிகளும் காணப்படும். உச்சந்தலையில் வகிடு எடுத்தது போன்ற ஒரு கோடு இருக்கும். உடலின் மேல்புறம் கரும்பழுப்பு, பழுப்பு நிறங்களால் ஆன திட்டுகளும், பட்டைகளும் இருக்கும். உடலின் பக்கவாட்டிலும், கழுத்திலும், மார்பிலும், இளம் பழுப்பும் கருப்பும் கலந்த சிறகுகளும், உடலின் கீழ்ப்பகுதி வெள்ளையாகவும் இருக்கும். வால் சிறியது எனினும் அமர்ந்திருக்கும் நிலையில் வாலின் நடுவில் உள்ள சிறகுகள் செம்பழுப்பு நிறத்தில் வெளியே நீட்டிக்கொண்டிருக்கும். வாலின் பக்கவாட்டில் உள்ள சிறகுகள் ஊசிபோல் குறுகலாக இருக்கும். ஆனால், களத்தில் இவற்றைக் கண்டறிவது மிகவும் கடினம். சில நேரங் களில் இவற்றின் வாலை விரித்து வைத்துக்கொண்டிருக்கும் போது இந்த ஊசி போன்ற சிறகுகள் தெரிவதற்கான வாய்ப்புகள் உண்டு. பறக்கும் போது உடலின் பக்கவாட்டிலும், கீழ்இறக்கைகளிலும் சிறிய வரிகள் இருப்பது தெரியும். இந்தப் பறவை போலவே இருக்கும் மற்ற கோரைகொத்திகளில் இருந்து இவற்றை அடையாளம் காண்பது கடினம்.

***பண்புகள்:*** தாவரங்கள் நிறைந்த நீர்நிலைகளின் ஓரங்களில், சேற்றுப் பாங்கான பகுதிகளில் மறைந்துகொண்டு, நீண்ட அலகால் ஈரமான மண் அல்லது சேற்றைக் கொத்தி அதிலுள்ள சிறு உயிரினங்களைப் பிடித்து உண்ணும். தனியாகவோ கூட்டமாகவோ இருக்கும். பெரும் பாலும் அந்தி சாயும் நேரங்களிலும், இரவிலும் இரை தேடும். வலசை வரும் பறவை. ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் தென்னிந்தியா விற்கு வலசைவந்து மீண்டும் ஏப்ரல்-மே மாதங்களில் வலசைபோகும்.

***உணவு:*** பூச்சிகள், புழுக்கள், நத்தைகள் முதலியவை.

***வாழிடம்:*** உள்நாட்டு நீர்நிலைகள், சதுப்பு நிலங்கள், வயல்வெளிகள் கடலோரப் பகுதிகள்.

# செங்கால் மண்கொத்தி
## Terek Sandpiper
*Xenus cinereus*




**உருவ அளவு:** 22-25 செ.மீ. **அங்க அடையாளம்:** வலசைவரும் காலங்களில் (ஆகஸ்டு-செப்டம்பர்) உடலின் மேல்பகுதி வெளிர் பழுப்பு நிறமாகவும், கீழ்ப்பகுதி வெள்ளையாகவும் தலையில் லேசான புருவமும் இருக்கும். இங்கிருந்து வலசைபோகும் (மார்ச்-ஏப்ரல்) மாதங்களில் முதிர்ந்த பறவைகளின் உடலின் மேல்பகுதியில் அடர்ந்த பழுப்பு நிறத் திட்டுகள் தோன்ற ஆரம்பிக்கும். தலை, கழுத்து, மார்பு பகுதிகளில் வெளிர் பழுப்பு நிறமாக இருக்கும். பறக்கும்போது இறக்கைகளில் உள்ள வெள்ளை நிறம் தெளிவாகத் தெரியும். இவற்றின் அலகு நீண்டும், மேல்நோக்கியும் வளைந்தும் இருக்கும். அலகு ஆரம்பிக்கும் இடத்தில் ஆரஞ்சு நிறமாகவும் பாதிக்கு மேல் கறுப்பாகவும் இருக்கும். கால்கள் பளிச்சிடும் ஆரஞ்சு நிறத்தில் இருக்கும். **பண்புகள்:** மிகவும் சுறுசுறுப்பான பறவை, அங்குமிங்கும் ஓடி இரை தேடும். ஆழமற்ற நீரினுள் நடந்து சென்றும் இரை தேடும். தனியாக அல்லது ஒன்றிரண்டு பறவைகளோடு சேர்ந்து திரியும் **உணவு:** கடல் வாழ் புழுக்கள், லார்வாக்கள் போன்றவை. **வாழிடம்:** கழிமுகங்கள், அலையாத்திக் காடுகள், கடற்கரை ஓரங்கள்.





# மண்கொத்தி
# Common Sandpiper
# *Actitis hypoleucos*




***உருவ அளவு:*** 19-21 செ.மீ. ***அங்க அடையாளம்:*** வலசைவரும் காலங்களில் (ஜூலை-ஆகஸ்டு) உடலின் மேல்பகுதி வெளிர் பழுப் பாகவும், கழுத்திலும் மார்பிலும் லேசான வெளிர் பழுப்பு கோடுகளும் இருக்கும். இங்கிருந்து வலசைபோகும் காலங்களில் (ஏப்ரல்-மே) உடலின் மேல்பகுதி சற்றே அடர்ந்த பழுப்பு நிறமாகவும், கழுத்து, மார்பு முழுவதும் பழுப்பு நிற வரிகளும் இருக்கும். பறக்கும் போது இறக்கைகளில் உள்ள வெள்ளைக் கோடு தெளிவாகத் தெரியும். பக்க வாட்டில் இருந்து பார்க்கும் போது இறக்கையின் முன்பகுதி மடிக்கப் பட்ட இடத்தில் ஒரு 'கமா' (,) வடிவ வெள்ளைக் கீற்று தெரியும். கண் களினூடே செல்லும் அடர் பழுப்பு கோடும், அதன் மேலே வெள்ளை புருவமும் இருக்கும். அலகு கருப்பு. கால்கள் பச்சையும் மஞ்சளும் கலந்த நிறம். ***பண்புகள்:*** உடலின் பின்பகுதியையும், தலையை யும் நடக்கும்போது தொடர்ந்து மேலும்கீழும் ஆட்டிக்கொண்டே இருக்கும். பொதுவாக, தனியாக இரை தேடும். ***உணவு:*** தலைப் பிரட்டைகள், சிறு மீன்கள், பூச்சி புழுக்கள், சிறு வண்டுகள் முதலி யவை. ***வாழிடம்:*** நன்னீர் நிலைகள், கடற்கரைகள், உவர்சதுப்பு நிலங்கள், கழிமுகங்கள், நெல்வயல்கள் என பல வகையான நீர் நிலைகளில் காணலாம்.




# ஆற்று மண்கொத்தி
## Green Sandpiper
## *Tringa ochropus*





***உருவ அளவு:*** 21-24 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடலின் மேல்புறம் அடர்ந்த பழுப்பு நிறமாகவும், ஆங்காங்கே சிறிய வெள்ளைப் புள்ளி களும் இருக்கும். உடலின் கீழ்ப்புறம் வெள்ளையாக இருக்கும். கழுத்தில் சிறிய பழுப்பு வரிகள் இருக்கும். வெள்ளையான புருவம் கண்களைத் தாண்டி இருக்காது. கால்கள் பச்சை நிறம். பறக்கும் போது இறக்கையின் அடிப்பகுதி அடர் பழுப்பு நிறமாக இருக்கும். கீழ்முதுகு வெள்ளை. வாலில் பழுப்புத் திட்டுகள் தெரியும். **பண்புகள்:** ஆழம் குறைந்த நீரினுள் நடந்து திரியும். சில சமயங்களில் நீருக்குள் மூழ்கிப் பூச்சிகளைப் பிடிக்கும். பெரும்பாலும் தனியாகவும் சில சமயங்களில் சிறு கூட்டமாகவும் இருக்கும். வலசைவரும் பறவை. **உணவு:** நீர்வாழ் பூச்சிகள், புழுக்கள், வண்டுகள், சிறு மீன்கள் போன்றவை. **வாழிடம்:** பொதுவாக நன்னீர் நிலைகளில் காணலாம். மரங்கள் அடர்ந்த காட்டு நீரோடைகளின் ஓரங்களிலும் தென்படும். தென்னிந்தியாவுக்கு ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் வலசைவந்து மீண்டும் மார்ச்-ஏப்ரல் மாதங்களில் பூமியின் வடக்குப் பகுதிக்கு இனப்பெருக்கம் செய்ய வலசைபோகும்.



பொரி மண்கொத்திகளுடன்



# பச்சைக்கால் உள்ளான்
# Common Greenshank
## *Tringa nebularia*




***உருவ அளவு:*** 30-34 செ.மீ. ***அங்க அடையாளம்:*** சற்றே பெரிய உள்ளான். பச்சை நிறக் கால்களைக் கொண்டது. அலகு சற்றே மேல்நோக்கி இருக்கும். வலசைவரும் காலங்களில் (ஜூலை-ஆகஸ்டு) உடலின் மேல்பகுதி இளம்பழுப்பு நிறமாகவும், கழுத்து, மார்பு, உடலின் கீழ்ப்பகுதி ஆகியவை வெள்ளையாகவும் இருக்கும். இங்கிருந்து வலசைபோகும் காலங்களில் (ஏப்ரல்-மே) சில முதிர்ந்த பறவைகளுக்கு உடலின் மேல்பகுதியில் அடர் பழுப்பும், வெள்ளைத் திட்டுகளும், கழுத்திலும், மார்பிலும் பழுப்பு நிற கோடுகளும் தோன்றும். பறக்கும் போது முதுகில் கூம்பு வடிவ வெள்ளைத்திட்டு தெளிவாகத் தெரியும். வாலில் பழுப்பு புள்ளிகள் இருக்கும். ***பண்புகள்:*** தனியாகவோ, கூட்டமாகவோ பிற கரையோரப் பறவைகளுடன் சேர்ந்து இரை தேடும். வலசைவரும் பறவை எனினும் சில பறவைகள் இங்கேயே ஆண்டு முழுவதும் தங்கிவிடுவதும் உண்டு. ***உணவு:*** பூச்சிகள், புழுக்கள், சிறு மீன்கள், தவளைகள், நண்டுகள் முதலியவை. ***வாழிடம்:*** பல வகையான நன்னீர் மற்றும் உவர் நீர்நிலைகள்.




# சதுப்பு மண்கொத்தி
## Marsh Sandpiper
## *Tringa stagnatilis*





***உருவ அளவு:*** 22-25 செ.மீ. ***அங்க அடையாளம்:*** வலசைவரும் காலங்களில் (ஆகஸ்டு-செப்டம்பர்) உடலின் மேல்பகுதி இளம்பழுப்பு நிறமாகவும், கீழ்ப்பகுதி மற்றும் முகமும் வெள்ளையாகவும் காணப்படும். வலசைபோகும் காலங்களில் சில பறவைகளுக்கு உடலின் மேல்பகுதியில் சற்றே அடர்பழுப்பு நிறத் திட்டுகளும், தலை, கழுத்து, மார்பு ஆகிய பகுதிகளில் பழுப்புப் புள்ளிகளும் காணப்படும். பறக்கும் போது முதுகில் நீண்ட வெள்ளைத் திட்டு தெளிவாகத் தெரியும். கால்கள் பச்சை-மஞ்சள் நிறத்தில் இருக்கும். ஊசிபோன்ற நீண்ட கருப்பு அலகை கொண்டது. ***பண்புகள்:*** ஆழம் குறைவான நீரில் நடந்தும் ஓடியும் இரை தேடும். தனியாகவோ, பிற உள்ளான்களுடன் சேர்ந்தோ இரை தேடும். சில நேரங்களில் கூட்டமாகவும் தென்படும் ***உணவு:*** சிறு மீன்கள், சிப்பிகள், நீர்வாழ் பூச்சிகள், எப்போதாவது நீர்த்தாவரத்தின் பகுதிகள் முதலியவை. ***வாழிடம்:*** கடற்கரையோரம், அதனை ஒட்டிய நீர்நிலைகளிலும், உள்நாட்டு நன்னீர்நிலைகளிலும் காணப்படும்.





# பொரி மண்கொத்தி
## Wood Sandpiper
## *Tringa glareola*




**உருவ அளவு:** 18- 21 செ.மீ. **அங்க அடையாளம்:** கால்கள் மஞ்சள் நிறம், கண் புருவம் கண்களைத் தாண்டிச் செல்லும். உடலின் மேல்பகுதி பழுப்பு நிறம் அதில் வெள்ளைப் புள்ளிகள் பொரிப் பொரியாக இருக்கும். பறக்கும்போது கால்கள் வாலைத் தாண்டி நீட்டிக் கொண்டிருக்கும். கீழ்முதுகு வெள்ளை. வாலின் முடிவில் பழுப்பு நிறப் புள்ளிகள் இருக்கும். இனப்பெருக்கத்துக்காக வலசைபோகும் காலங்களில் (ஏப்ரல்-மே) முதிர்ந்த பறவைகளில் சிலவற்றுக்கு தலை, கழுத்து, மார்பு முழுவதும் பழுப்பு நிற வரிகளும் உடலில் உள்ள புள்ளிகள் சற்று பெரிதாகவும் இருக்கும். வலசைவரும் காலத்தில் (ஜூலை-ஆகஸ்டு) கீழுடலின் நிறம் சற்று மங்கலாக இருக்கும். **பண்புகள்:** மற்ற மண்கொத்திகளைப் போலல்லாமல் பெரும்பாலும் கூட்டமாகவே இரை தேடும். சில நேரங்களில் நீருக்குள் மார்பு மறையும் அளவுக்கு இறங்கி இரை தேடும். இதைப் பார்ப்பதற்கு நீந்துவது போலத் தோன்றும். பறக்கும் போது சிப்சிப்சிப் எனவும் பீப், பீப், பீப், எனவும் கத்தும். **உணவு:** சிறு நத்தைகள், சிறு மீன்கள், நீர்வாழ் பூச்சிகள், புழுக்கள். **வாழிடம்:** நன்னீர் நிலைகளிலும், உவர் நீர்நிலைகளிலும் காணலாம்.




# செங்கால் உள்ளான்
## Common Redshank
*Tringa totanus*







**உருவ அளவு:** 27-29 செ.மீ. **அங்க அடையாளம்:** அலகு ஆரம்பிக்கும் இடத்தில் ஆரஞ்சு நிறமாகவும் முனையில் கறுப்பாகவும் இருக்கும். கால்கள் ஆரஞ்சு நிறத்தில் இருக்கும். வலசைவரும் காலங்களில் (ஜூலை-ஆகஸ்டு) உடலின் மேல்புறம் வெளிர் பழுப்பு நிறத்திலும், தலையும் கழுத்தும் மார்பும் சாம்பல் நிறத்திலும் உடலின் கீழ்ப்பகுதி வெள்ளையாகவும் இருக்கும். இங்கிருந்து வலசைபோகும் காலங்களில் (ஏப்ரல்-மே) உடலின் மேல்பகுதி அடர்பழுப்பும், தலை, மார்பு ஆகிய பகுதிகளில் பழுப்புத் திட்டுகளும் இருக்கும். பறக்கும்போது முதுகில் உள்ள கூம்பு போன்ற வெள்ளைத் திட்டு காணப்படும். பறக்கும் நிலையில் இறக்கைகளின் தோள்பட்டைப் பகுதிகளில் பழுப்பு நிறமும், கீழே (முதன்மை மற்றும் இரண்டாம் நிலை சிறகுகள்) வெள்ளை நிறமும் இருக்கும். **பண்புகள்:** நீண்ட கால்களைக் கொண்டிருப்பதால் ஓரளவுக்கு ஆழமான நீரில் இறங்கி இரை தேடுவதையும், சில நேரங்களில் தலையை நீரில் முக்கியும் இரை தேடும். **உணவு:** சிறு மீன்கள், தவளைகளின் தலைப்பிரட்டைகள், நத்தைகள், சிப்பிகள், நீர்வாழ் பூச்சிகள் புழுக்கள். **வாழிடம்:** நன்னீர் நிலைகளிலும், உவர் நீர்நிலைகளிலும் கடற்கரையோரங்களிலும் காணலாம்.





# நண்டு தின்னி
## Crab Plover
## *Dromos ardeola*




**உருவ அளவு:** *38-41* செ.மீ. **அங்க அடையாளம்:** கால்கள் சாம்பல் நிறம். நீந்துவதற்கு ஏதுவாக வாத்துக்குள்ளதைப் போல் விரல்களின் இடையே சவ்வு போன்ற உறுப்பு காணப்படும். அலகு கருப்பு நிறம். உடல் வெள்ளையாகவும், முதுகு கறுப்பாகவும் காணப்படும். மடக்கி வைக்கப்பட்ட இறக்கைகளின் விளிம்பு கறுப்பாகத் தெரியும். இளம் பறவைகளின் உடல் சாம்பல் நிறத்தில் இருக்கும். **பண்புகள்:** உறுதியான அலகைக் கொண்டு கடல் உயிரினங்களை, குறிப்பாக நண்டு, இறால் வகை உயிரினங்களைப் பிடித்து உண்ணும். தனியாகவோ, சிறு கூட்டமாகவோ கடற்கரையோரம், ஆழம் குறைந்த கடலோர நீர் நிலைகளில் காணப்படும். இரை தேடும்போது தலையை உடலோடு சேர்த்து குறுக்கிக்கொண்டு ஓடும். வலசைவரும் பறவை. தென்னிந்தியாவுக்கு அக்டோபர்-நவம்பர் மாதங்களில் வந்து மார்ச் மாதத்தில் வடக்கு நோக்கி வலசைபோகும். **உணவு:** பெரும்பாலும் நண்டை உணவாகக் கொள்ளும்.மெல்லுடலிகளையும் உண்பதுண்டு. **வாழிடம்:** மணற் பாங்கான கடற்கரையோரங்கள், கடலை ஒட்டிய தீவுகள், பவழத்திட்டுகள், கடற்பாறைகள், கடலோர சதுப்பு நிலங்கள்.





# வெண்தலை கடல்காகம்
## Slender-billed Gull
## *Chroicocephalus genei*




***உருவ அளவு:*** *43 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *முதிர்ந்த பறவையின் இனப்பெருக்கக் காலத்தில் இறகுத் தொகுதியில், உடலின் கீழ்ப்பகுதியில் லேசான இளஞ்சிவப்பு (பிங்க்) நிறப் பூச்சைக் கொண்டிருக்கும். கூட்ட மாக இவை அருகருகே இருக்கும் போதும், இவை மற்ற வெள்ளை நிற கடல் காகங்களுக்கு இடையே நின்றுகொண்டு இருக்கும் போதும் இந்த நிறம் தெளிவாகத் தெரியும். அலகும் கால்களும் கருஞ்சிவப்பு நிறத்தில் இருக்கும் இளம் பறவைகளும், இனப்பெருக்கம் செய்யாத முதிர்ந்த பறவைகளும் வலசைவரும் காலங்களில் உடலில் சாம்பல், இளம் பழுப்பு, கருப்பு நிறங்களைக் கொண்டிருக்கும். பொதுவாக எல்லா நிலைகளிலும் தலை வெள்ளையாகவே இருக்கும். சில பறவை களுக்குக் காதுப் பகுதியில் சிறிய சாம்பல் நிறத் திட்டு தென்படும். அலகு சிவப்பு அல்லது ஆரஞ்சு நிறத்திலும் அலகின் முனை கறுப் பாகவும் இருக்கும். கால்கள் ஆரஞ்சு அல்லது இளஞ்சிவப்பு நிறத்தில் இருக்கும்.* ***பண்புகள்:*** *தென்னிந்தியாவிலிருந்து வலசைபோகும் காலங் களில் (பிப்ரவரி) பொதுவாகக் கூட்டமாகக் காணலாம். செப்டம்பர்-நவம்பர் மாதங்களில் வலசைவரும்.* ***உணவு:*** *பெரும்பாலும் சிறு மீன்கள், நீரிலுள்ள மெல்லுடலிகள்.* ***வாழிடம்:*** *கடற்கரையோரப் பகுதி கள்.*





# கருந்தலைக் கடல் காகம்
## Black-headed Gull
## *Chroicocephalus ridibundus*

***உருவ அளவு:*** *38 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *இனப்பெருக்கக் காலங்களில் தென்னிந்தியாவிலிருந்து வலசைபோகும்போது (ஏப்ரல்-மே) முதிர்ந்த பறவைகளின் தலை கரிய காப்பிக்கொட்டை நிறத்திலும், உடலின் மேல்பகுதி சாம்பல் நிறமாகவும் இருக்கும். அலகும் கால்களும், கருஞ்சிவப்பு நிறத்திலும் இருக்கும். கண்களைச் சுற்றி அரைவட்ட வெள்ளை வளையம் இருக்கும். பறக்கும் போது இறக்கைகளை முதன்மை மற்றும் இரண்டாம் நிலைச் சிறகுகளின் ஓரத்தில் கறுப்பாக இருக்கும். இதில் முதன்மைச் சிறகுகளில் நீண்ட வெள்ளைத் கீற்றுகள் தெளிவாகத் தெரியும்.*

*வலசைவரும் காலங்களில் (செப்டம்பர்-அக்டோபர்) இளம் பறவைகளுக்கும், இனப்பெருக்கம் செய்யாத முதிர்ந்த பறவைகளுக்கும் தலை வெள்ளையாகவும், காதோரத்தில் கருப்புத் திட்டும் இருக்கும். கண்கள் கறுப்பாகத் தெரியும். அலகு ஆரஞ்சு நிறமாகவும், முனையில் கறுப்பாகவும் இருக்கும். கால்கள் ஆரஞ்சு அல்லது வெளிர் சிவப்பு நிறத்தில் இருக்கும். பறக்கும் போது இறக்கைகளின் விளிம்புகள் முழுவதுமாகக் கருப்பு நிறத்திலோ அல்லது நீண்ட வெள்ளைத் கீற்றுகளையோ கொண்டிருக்கும்.*

***பண்புகள்:*** *பழுப்புத் தலை கடல் காகத்தை ஒப்பிடுகையில் இவை பெரும்பாலும் கடலோரப் பகுதிகளில் மட்டுமே தென்படும். கூட்டமாகக் கடலோரப் பகுதிகளில் பறந்து திரியும். கடற்கரை மணலில் அலை அடிக்கும் பகுதிகளில் கூட்டமாக நின்றுகொண்டிருப்பதைக் காணலாம். கடலிலும் நீந்திக்கொண்டிருக்கும்.*

***உணவு:*** *கடல்வாழ் பூச்சிகள், புழுக்கள், சிறிய மீன்கள்.*

***வாழிடம்:*** *பெரும்பாலும் கடற்கரையோரங்கள், துறை முகங்கள், கழிமுகங்கள்.*

# பழுப்புத்தலை கடல் காகம்
## Brown-headed Gull
*brunnicephalus*

***உருவ அளவு:*** 42 *செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *வலசைவரும் காலங்களில் (செப்டம்பர்-நவம்பர்) தலை வெள்ளையாகவும், கண்களுக்குப் பின்னே கருப்புத் திட்டும் இருக்கும். அலகு ஆரஞ்சு நிறம், முனையில் கறுப்பாக இருக்கும். கால்கள் ஆரஞ்சு நிறம். உடலின் மேல்பகுதி சாம்பல் நிறம். இறக்கைகள் மடக்கிவைக்கப்பட்டிருக்கும் போது அவற்றின் நுனிப் பகுதியில் உள்ள கருப்பு நிறம் வால்போல பின்னால் நீட்டிக்கொண்டிருப்பது தெரியும். பறக்கும் போது இறக்கைகளில் கருப்பு நிறம் முதன்மை மற்றும் இரண்டாம் நிலைச் சிறகுகளில், சில பறவைகளுக்குப் பெரிய வெள்ளைப் புள்ளி இருக்கும். சில பறவைகளுக்கு முழுவதும் இறக்கைகளின் நுனி முழுவதும் கறுப்பாகவே இருக்கும்.*

*வலசைபோகும் காலங்களில் (மே-ஜூன்) சில முதிர்ந்த பறவைகளுக்குத் தலை அடர்பழுப்பு நிறமாக இருக்கும். பறக்கும் போது இறக்கைகளில் கருப்பு நிறம் முதன்மை மற்றும் இரண்டாம் நிலைச் சிறகுகளில், பெரிய வெள்ளைப் புள்ளி இருக்கும். அலகும், கால்களும் கருஞ்சிவப்பு நிறத்தில் இருக்கும். எல்லா நிலையிலும் கண்கள் வெளிர் மஞ்சள் நிறமாக இருக்கும்.*

***பண்புகள்:*** *கூட்டமாகக் கடலோரப் பகுதிகளில் பறந்து திரியும். கடற்கரை மணலில் அலை அடிக்கும் பகுதிகளில் கூட்டமாக நின்றுகொண்டிருப்பதைக் காணலாம். கருந்தலைக் காகத்தைப் போலல்லாமல் கடற்கரையோரமாகவும், உள்நாட்டு நீர்நிலைகளிலும் காணலாம்.*

***உணவு:*** *சிறிய மீன்கள், பூச்சிகள், இறால்கள், நத்தைகள், மண்புழுக்கள் ஆகியவை.*

***வாழிடம்:*** *பெரும்பாலும் கடற்கரையிலும், ஓரளவு சதுப்பு நிலங்கள், நதிமுகத்துவாரங்கள், உள்நாட்டு நீர்நிலைகள்.*

# பெரிய கடல் காகம்
## Pallas's Gull
## *Ichthyaetus ichthyaetus*





இனப்பெருக்க கால தோற்றம்

***உருவ அளவு:*** *69 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** மற்ற கடல் காகங்களை விட உருவத்தில் பெரியது. முதிர்ந்த இனப்பெருக்க இறகுத் தொகுதியைக் கொண்ட பறவையின் உடலின் மேல்பகுதி சாம்பல் நிறமாகவும், தலை கறுப்பாகவும். கண்களின் மேலும்கீழும் வெள்ளைத் திட்டுகளையும் கொண்டிருக்கும். மஞ்சள் நிற அலகின் முனையில் சிவப்பும் கருப்புமாக இருக்கும். கால்கள் பச்சை கலந்த மஞ்சள் நிறத்தில் இருக்கும். முதிர்ந்த இனப்பெருக்க இறகுத் தொகுதி இல்லாத பறவைகளின் தலை மங்கிய கருப்பும் சாம்பல் நிறமும் கொண்டிருக்கும். அலகில் சிவப்பு நிறம் சற்றே மங்கியிருக்கும். இளம் பறவைகளுக்குத் தலையிலும், உடலிலும் இளம்பழுப்பும், வெளிறிய கருப்பு நிறம் ஆங்காங்கே காணப்படும். **பண்புகள்:** தனியாகவோ, சிறு கூட்டமாகவோ இருக்கும். வலசைவரும் பறவை. பெரும்பாலும் தென்னிந்தியாவுக்கு செப்டம்பர் அக்டோபர் மாதங்களில் வந்து ஏப்ரல்–மே மாதங்களில் இனப்பெருக்கத்துக்காக மீண்டும் பூமியின் வடக்குப் பகுதிக்கு வலசை போகும். **உணவு:** மீன்கள் (பெரும்பாலும் இறந்த மீன்கள்), கடலோரப் புழு, பூச்சிகள் போன்றவை. வாழிடம்: பெரும்பாலும் கடற்கரைப் பகுதிகளிலேயே தென்படும்.







# சாம்பல் கடல் காகம்
## Lesser Black-backed Gull
*Laurus fuscus*






**உருவ அளவு:** 58-65 செ.மீ. **அங்க அடையாளம்:** முதிர்ந்த இனப்பெருக்க இறகுத் தொகுதியைக் கொண்ட பறவையின் உடலின் மேல்பகுதி சாம்பல் நிறமாகவும், தலை வெள்ளையாகவும் (சிலவற்றுக்குப் பிடரியில் வெளிர் பழுப்புப் புள்ளிகளும்) இருக்கும். அலகு மஞ்சள் நிறம். கீழ்அலகின் முனையில் சிவப்புப் புள்ளி இருக்கும். கால்கள் பச்சை கலந்த மஞ்சள் நிறம். இறக்கையின் நுனி கருப்பு நிறமாகவும், அதில் வெள்ளைப் புள்ளிகளும் இருக்கும். இளம் பறவைகள், முதிர்ந்த இனப் பெருக்க இறகுத் தொகுதி இல்லாத பறவைகளின் உடலில் பழுப்பு, கருப்பு நிறத் திட்டுகளைக் கொண்டிருக்கும். அலகு கறுப்பாகவும், கால்கள் வெளிறிய பழுப்பு நிறமாகவும் இருக்கும். **பண்புகள்:** பெரும்பாலும் கூட்டமாக மற்ற கடல் காகங்களுடன் சேர்ந்து கடற்கரையோரங்களில் காணலாம். பெரும்பாலும் தென்னிந்தியாவுக்கு ஆகஸ்டு -செப்டம்பர்களில் வந்து மார்ச்-ஏப்ரல்களில் இனப்பெருக்கத்துக்காக மீண்டும் பூமியின் வடக்குப் பகுதிக்கு வலசைபோகும். **உணவு:** சிறு மீன்கள், மெல்லுடலிகள், மீன்பிடிக் கழிவுகள் போன்றவை. **வாழிடம்:** அனைத்து நீர்நிலைகளிலும் காணலாம். குறிப்பாகக் கடற்கரை ஓரங்கள், ஏரிகள், கழிமுகங்களில் காணலாம்.







# சின்ன ஆலா
## Little Tern
## *Sternula albifrons*


இனப்பெருக்க கால தோற்றம்



**உருவ அளவு:** 22-24 செ.மீ. **அங்க அடையாளம்:** ஆலா வகைப் பறவைகளில் சிறியது. முதிர்ந்த இனப்பெருக்க இறகுத் தொகுதியைக் கொண்ட பறவையின் உடலின் மேல்பகுதி வெளிர் சாம்பல் நிறத்திலும், கீழ்ப்பகுதி வெள்ளையாகவும் இருக்கும். நெற்றியில் வெள்ளையாகவும், உச்சந்தலையும், பிடரியும் கறுப்பாகவும் இருக்கும். மஞ்சள் நிற அலகின் நுனி கறுப்பாகவும் இருக்கும். கால்கள் ஆரஞ்சு அல்லது சிவப்பு நிறம்.முதிர்ந்த அல்லது இளம் பறவைகளுக்கு அலகு கருப்பு அல்லது மஞ்சள் கலந்த கருப்பு நிறத்தில் இருக்கும். உச்சந்தலை வெள்ளை அல்லது வெளிறிய சாம்பல் கலந்த கருப்பு நிறத்தில் புள்ளிகளைக் கொண்டிருக்கும். சில பறவைகளுக்குத் தோள்பட்டையில் கருப்புத் திட்டு இருக்கும். வால் 'V' வடிவில் இருக்கும். **பண்புகள்:** தனியாகவோ, சிறு கூட்டமாகவோ இருக்கும். நீரில் சடாரென மூழ்கி சிறு மீன்களைப் பிடிக்கும். இவை இராமேஸ்வரம் பகுதிகளில் இனப்பெருக்கம் செய் வது பதிவுசெய்யப்பட்டுள்ளது. மணல் திட்டுகளின் மேல் தரையில் முட்டையிட்டு குஞ்சு பொரிக்கும் **உணவு:** பெரும்பாலும் சிறு மீன்கள், புழு, பூச்சிகள், நத்தைகள் முதலியவை. **வாழிடம்:** பெரும்பாலும் கடற்கரையை ஒட்டிய நீர்நிலைகளில்தான் தென்படும்.







# பருத்த அலகு ஆலா
## Gull-billed Tern
## *Gelochelidon nilotica*


இனப்பெருக்க கால தோற்றம்



**உருவ அளவு:** 35–38 செ.மீ. **அங்க அடையாளம்:** முதிர்ந்த இனப் பெருக்க இறகுத் தொகுதியைக் கொண்ட பறவையின் உடல் முழு வதும் வெள்ளை. அலகு கருப்பு. கால்கள் கருப்பு. உச்சந்தலை கறுப்பாகத் தொப்பி போட்டது போல இருக்கும். இளம் பறவையின் உடல் சற்று மங்கிய வெள்ளை அல்லது வெளிர் சாம்பல் நிறத்தில் இருக்கும். தலையில் கருப்புத் தொப்பி இருக்காது. **பண்புகள்:** தென்னிந்தியா வுக்கு ஜுலை-ஆகஸ்டு மாதங்களில் வலசைவரும். ஏப்ரல்-மே மாதங் களில் இனப்பெருக்கத்துக்காக மீண்டும் பூமியின் வடக்குப் பகுதிக்கு வலசைபோகும். சில இளம் பறவைகள் ஆண்டு முழுவதும் இங்கேயே தங்கிவிடுவதும் உண்டு. **உணவு:** நண்டுகள், புழுக்கள், மண்புழுக்கள், பல்லிகள், தவளைகள், சிறு மீன்கள், மெல்லுடலிகள், போன்றவை. **வாழிடம்:** கடற்கரை ஒட்டிய உவர்நீர், நன்னீர் நிலைகள், சதுப்பு நிலங்கள். சில நேரங்களில் உள்நாட்டு நீர்நிலைகளிலும் காணலாம்.







# பெரிய ஆலா
## Caspian Tern
## *Hydroprogne caspia*






***உருவ அளவு:*** 47–54 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உலகில் உள்ள ஆலாக்களில் இதுதான் பெரியது. உடல் வெள்ளை நிறம். பெரிய சிவப்பு அலகைக் கொண்டது. அலகின் முனையில் கறுப்பாகவும், மஞ்சளாகவும் இருக்கும். கால்கள் கருப்பு. இனப்பெருக்கக் காலங் களில் முதிர்ந்த பறவைகளுக்குத் தலையில் கருப்பு நிறத்தில் தொப்பி போட்டது போல் காணப்படும். மற்ற காலங்களில் இத்தொப்பி இல் லாமல், சாம்பல் நிறமாகவோ, கருப்புத் திட்டுகளுடனோ இருக்கும். இறக்கைகளின் முனை கருப்பு. இளம் பறவைகளின் அலகு ஆரஞ்சு நிறமாகவும், கால்கள் மஞ்சளாகவும் இருக்கும். உச்சந்தலையில் உள்ள கருப்பு நிறம் மங்கியும், சாம்பல் கலந்தும் காணப்படும். இறக்கைகளில் பழுப்புத் திட்டுகள் தென்படும். ***பண்புகள்:*** ஆறு, ஏரி, முகத்துவாரம், நீர்த்தேக்கங்களின் மேல் பறந்து மீன்களைப் பிடிக்கும். செப்டம்பர்-அக்டோபர்களில் தென்னிந்தியாவுக்கு வலசை வந்து மீண்டும் ஏப்ரல்-மே மாதங்களில் பூமியின் வடபகுதிக்குத் திரும்பிச் செல்லும். எனினும் சில இளம் பறவைகள் ஆண்டு முழுவதும் இங்கேயே தங்கி அடுத்த ஆண்டு வலசைபோகும். ***உணவு:*** மீன்களே முக்கிய உணவு. ***வாழிடம்:*** உள்நாட்டு ஆறுகள், பெரிய ஏரிகள், கடலோர நீர்நிலைகள்.







# வெண்தோள் ஆலா
## White-winged Tern
## *Chlidonias leucopterus*






***உருவ அளவு:*** 20-23 செ.மீ. ***அங்க அடையாளம்:*** முதிர்ந்த இனப்பெருக்க இறகுத் தொகுதியைக் கொண்ட பறவையின் தலை, கழுத்து, மார்பு, அடிவயிறு யாவும் கருப்பு நிறத்திலும், முதுகு கருஞ்சாம்பல் நிறத்திலும் இருக்கும். இந்த நிலையில் குறிப்பாக அமர்ந்திருக்கும் போது இறக்கைகளில் (தோள் பட்டையில்) உள்ள வெள்ளைத் திட்டுத் தெளிவாகத் தெரியும். கால்கள் சிவப்பு, அலகு கருப்பு நிறம். பறக்கும் போது கீழே இருந்து பார்க்கையில் இறக்கைகளின் முன்பகுதி முழுவதும் கறுப்பாகத் தெரியும். இனப்பெருக்க இறகுத் தொகுதிகள் இல்லாத முதிர்ந்த மற்றும் இளம் பறவைகளை மற்ற ஆலாக்களில் இருந்து பிரித்தறியும் போது கவனமாக இருக்க வேண்டும். இந்நிலையில், உடல் பெரும்பாலும் வெள்ளை, கருஞ்சாம்பல் நிறத்திலும், தலையில் கண்களுக்குப் பின்னால் சிறிய கருப்புத் திட்டும் இருக்கும். முதன்மை, இரண்டாம் நிலை சிறகுகளில் லேசான கருப்பு நிறப் பூச்சும் இருக்கும். ***பண்புகள்:*** நீருக்கு மேல் பறந்து இரை தேடும். இரையை நீருக்குள் மூழ்காமல், மேலிருந்தே எடுக்கும். ஆகஸ்டு-செப்டம்பரில் தென்னிந்தியாவுக்கு வலசைவரும். ஏப்ரல்-மேயில் இங்கிருந்து வலசைபோகும். ***உணவு:*** நீர்ப்பூச்சிகள், சிறு மீன்கள். வாழிடம்: பெரும்பாலும் கடற்கரையோரப் பகுதிகள்.







# மீசை ஆலா
# Whiskered Tern
# *Chlidonias hybrid*






***உருவ அளவு:*** 23–25 செ.மீ. ***அங்க அடையாளம்:*** முதிர்ந்த இனப்பெருக்க இறகுத் தொகுதியைக் கொண்ட பறவையின் உடலின் மேல் சாம்பல் நிறத்திலும், தலையில் கருப்புத் தொப்பி போன்ற சிறகுகளையும், கழுத்து வெள்ளையாகவும், உடலின் கீழ்ப்பகுதி கறுப்பாகவும், அலகும், கால்களும், கருஞ்சிவப்பு நிறத்திலும் இருக்கும். இங்கிருந்து வலசைபோகும் மாதங்களில் (ஏப்ரல்-மே) சில முதிர்ந்த பறவைகள் இந்தத் தோற்றத்தைக் கொண்டிருக்கும். தென்னிந்தியாவுக்கு வலசை வரும் காலங்களில் (ஆகஸ்டு-செப்டம்பர்) இவற்றின் உடலின் மேல் பகுதி இளஞ்சாம்பல் நிறமாகவும், கீழ்ப்பகுதி வெள்ளை நிறமாகவும் (சில பறவைகளுக்குக் கருப்புத் திட்டுகளும் தென்படும்) தலையின் மேல் கருப்புத் திட்டுகளும், கண்களுக்கு முன்னும் பின்னும் அடர்த்தியான கருப்புக் கோடும் இருக்கும். இது தூரத்திலிருந்து பார்க்கும்போது மீசையைப் போல் தெரியும். ***பண்புகள்:*** நீர்நிலைகளுக்கு மேல் இறக்கைகளை ஒரே சீராக அடித்துப் பறந்துகொண்டே இருக்கும். உள்நாட்டு நீர்நிலைகளில் பொதுவாகத் தென்படும். வலசைவரும் பறவை எனினும், சில பறவைகள் ஆண்டு முழுவதும் இங்கேயே தங்கிவிடும். ***உணவு:*** பூச்சிகள், புழுக்கள், சிறு மீன்கள். ***வாழிடம்:*** கடற்கரைப் பகுதிகள், உள்நாட்டு நீர்நிலைகள்.







# கருந்தோள் ஆலா
## Common Tern
### *Sterna hirundo*






***உருவ அளவு:*** 31-35 செ.மீ. மீசை ஆலா மற்றும் வெண்தோள் ஆலாவைவிடவும் கருந்தோள் ஆலா உருவில் பெரியது. முதிர்ந்த இனப்பெருக்க இறகுத் தொகுதியைக் கொண்ட பறவையின் உடலின் மேல்புறம் சாம்பல் நிறத்திலும், தலையில் கருப்புத் தொப்பி போன்ற சிறகுகளையும் கொண்டிருக்கும். அலகு சிவப்பாகவும், நுனியில் கறுப் பாகவும் இருக்கும். கால்கள் கருஞ்சிவப்பு. வலசைவரும் காலங்களில் இனப்பெருக்க இறகுத் தொகுதி இல்லாத பறவைகளுக்கு நெற்றி வெள்ளையாகவும், உச்சந்தலையும் பிடரியும் கறுப்பாக இருக்கும். இந்நிலையில்தான் இறக்கைகளில் (தோள் பட்டையில்) உள்ள கருப்பு கோடு தெளிவாகத் தெரியும். (குறிப்பாக அமர்ந்திருக்கும் நிலையில்). ***பண்புகள்:*** பெரும்பாலும் கடற்கரை ஒட்டிய பகுதிகளில்தான் தென் படும். கூட்டமாகப் பறந்து திரியும். வலசைவரும் பறவை. ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் தென்னிந்தியாவுக்கு வரும். ஏப்ரல்-மே மாதங்களில் இங்கிருந்து வலசைபோகும். சில பறவைகள் ஆண்டு முழுவதும் இங்கேயே தங்கிவிடுவதும் உண்டு. ***உணவு:*** சிறு மீன்கள். பூச்சிகள். ***வாழிடம்:*** கடற்கரையை ஒட்டியப் பகுதிகள்.







# பெரிய கொண்டை ஆலா
# Great crested Tern
# *Thalasseus bergii*




**உருவ அளவு:** 46-49 செ.மீ. **அங்க அடையாளம்:** அலகு எலுமிச்சை மஞ்சள் நிறத்தில் இருக்கும். நெற்றி வெள்ளையாகவும். உச்சந்தலை கறுப்பாகவும், பிடரியில் சிறகுகள் சிலிர்த்துக்கொண்டும் இருக்கும். இளம் பறவைகளுக்குத் தலையில் உள்ள கருப்பு நிறம் சற்றே மங்கலாக இருக்கும். இறக்கைகள் கருஞ்சாம்பல் நிறம். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை. பறக்கும் போது வால் 'V' வடிவில் பிளவுபட்டிருப்பதைக் காணலாம். **பண்புகள்:** கடற்கரைப் பகுதிகளில் மட்டுமே தென்படும். பெரும்பாலும் கூட்டமாக இருக்கும். மற்ற ஆலாக்களுடன் குறிப்பாகச் சிறிய கொண்டை ஆலாக்களுடன் சேர்ந்து கரையோரமாகவும், நீரில் உள்ள மணல் திட்டுகளிலும் அமர்ந்திர்ப்பதைக் காணலாம். இவ் வேளைகளில் சிறிய கொண்டை ஆலாவின் ஆரஞ்சு நிற அலகையும், உருவத்தையும் வைத்தே இவை இரண்டையும் பிரித்தறியலாம். ஆண்டு முழுவதும் காணப்படும். **உணவு:** மீன்கள், மெல்லுடலிகள், நண்டு கள், பூச்சிகள். **வாழிடம்:** கடற்கரைப் பகுதிகள்.





# புள்ளி அலகு ஆலா
## Sandwich Tern
## *Thalasseus sandvicensis*



**உருவ அளவு:** 36-41 செ.மீ. **அங்க அடையாளம்:** மஞ்சள் நுனியுள்ள கருப்பு அலகைக் கொண்டது. உடல் பெரும்பாலும் வெள்ளை அல்லது இளஞ்சாம்பல் நிறம். கீழ்ப்பகுதி வெள்ளை. இளம் பறவைகளுக்கும் சில முதிர்ந்த பறவைகளுக்கும் நெற்றியில் வெள்ளையாகவும் உச்சந் தலையிலும் பிடரியிலும் கறுப்பாகவும் இருக்கும். முதிர்ந்த இனப் பெருக்க இறகுத் தொகுதியைக் கொண்ட பறவையின் தலையில் தொப்பி போட்டது போல் கருப்பு நிற சிறகுகள் இருக்கும். **பண்புகள்:** கடற்கரைப் பகுதிகளில் மற்ற ஆலாக்களுடன் சேர்ந்து அமர்ந்திருப்பதைக் காணலாம். வலசைவரும் பறவை. தென்னிந்தியா வுக்கு வருபவை காஸ்பியன் கடல் பகுதிகளில் இருந்து வருவதாக அறியப்படுகிறது. எனினும் இவை தென்னிந்தியாவுக்கு வந்துபோகும் மாதங்கள் தெளிவாகத் தெரியவில்லை. அக்டோபரில் வந்து மார்ச்சில் மீண்டும் வலசைபோகக் கூடும். சில பறவைகள் ஆண்டு முழுவதும் இங்கேயே தங்கிவிடுவதும் உண்டு. **உணவு:** பெரும்பாலும், கடல் மீன்கள், கனவாய் மீன்கள், இறால் வகைகள். **வாழிடம்:** கடற்கரையை ஒட்டியப் பகுதிகளில் மட்டும்.





# சிறிய கொண்டை ஆலா
## Lesser-crested Tern
### *Thalasseus bengalensis*





இனப்பெருக்க கால தோற்றம்

***உருவ அளவு:*** 35-37 செ.மீ. ***அங்க அடையாளம்:*** தோற்றத்தில் பெரிய கொண்டை ஆலா போல இருந்தாலும் உருவில் அதைவிடச் சிறியது. இவற்றின் அலகு ஆரஞ்சு நிறத்தில் இருக்கும் (பெரிய கொண்டை ஆலாவுக்கு எலுமிச்சை மஞ்சள் நிறத்தில் இருக்கும்). நெற்றி வெள்ளை யாகவும். உச்சந்தலை கறுப்பாகவும், பிடரியில் சிறகுகள் சிலிர்த்துக் கொண்டும் இருக்கும். இளம் பறவைகளுக்குத் தலையில் உள்ள கருப்பு நிறம் சற்றே மங்கலாக இருக்கும். இறக்கைகள் கருஞ்சாம்பல் நிறம். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை. பறக்கும் போது வால் 'V' வடிவில் பிளவுபட்டிருப்பதைக் காணலாம். ***பண்புகள்:*** கடற்கரைப் பகுதிகளில் மட்டுமே தென்படும். பெரும்பாலும் கூட்டமாக இருக்கும். மற்ற ஆலாக்களுடன் குறிப்பாகப் பெரிய கொண்டை ஆலாக்களுடன் சேர்ந்து கரையோரமாகவும், நீரில் உள்ள மணல் திட்டுகளிலும் அமர்ந் திருப்பதைக் காணலாம். ***உணவு:*** முக்கிய உணவு மீன்கள். எப்போ தாவது இறால் வகை உயிரினங்கள். ***வாழிடம்:*** கடற்கரையை ஒட்டியப் பகுதிகள்.



பெரிய கொண்டை ஆலா



# நத்தைகுத்தி நாரை
## Asian Openbill
## *Anastomus oscitans*






**உருவ அளவு:** 68 செ.மீ. **அங்க அடையாளம்:** உடல் சாம்பல் கலந்த வெள்ளை நிறமாகவும், இறக்கைகள் கருப்பு வெள்ளை நிறத்திலும் இருக்கும். இனப்பெருக்கக் காலங்களில் உடலின் மேல்பகுதி வெள்ளைவெளேரென இருக்கும். நத்தைகளை உடைத்து அவற்றின் சதையை சாப்பிடுவதற்கு ஏற்றவாறு அலகின் நடுவே சிறிது இடை வெளி இருக்கும். நீண்ட கால்களைக் கொண்டவை. பறக்கும் நிலை யில் கீழிருந்து பார்க்கும் போது உடலிலும், இறக்கைகளின் முன்பாதி வெள்ளையாகவும், இறக்கைகளின் பின்பாதி கருப்பு நிறத்திலும் இருக்கும். சங்குவளை நாரைகளுக்குப் பறக்கும் நிலையில் கீழிருந்து பார்க்கும் போது இறக்கைகளின் பெரும்பகுதி கறுப்பாக இருக்கும். இதை வைத்து இவ்விரண்டு பறவைகளையும் இனங்காணலாம். **பண்புகள்:** வயல் வெளிகளிலும், நீர்நிலைகளிலும் கூட்டமாக இரை தேடுவதைக் காணலாம். மற்ற நீர்ப்பறவைகளுடன் (கூழைக்கடா, நீர்க்காகம், அரிவாள் மூக்கன்) சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும். **உணவு:** நத்தைகள், பாம்புகள், நண்டுகள், தவளைகள், பெரிய பூச்சிகள். **வாழிடம்:** வயல்வெளி, ஏரி, குளம், ஆறு சதுப்புநிலம் முதலான நீர் நிலைகளில் காணலாம். ஆண்டு முழுதும் காணப்படும்.







# சங்குவளை நாரை
## Painted Stork
### *Mycteria leucocephala*





இளம் பறவை

**உருவ அளவு :** 93 -100 செ.மீ. **அங்க அடையாளம்:** முதிர்ந்த பறவைகளின் உடல் வெள்ளை நிறம். இறக்கைகள் கருப்பு வெள்ளை, முதுகுப் பகுதிக்குக் கீழே இளஞ்சிவப்பு சிறகுகளைக் கொண்டிருக்கும். கால்கள் வெளிர் சிவப்பு நிறத்தில் நீளமாக இருக்கும். அலகு நீளமாகவும், கூர்மையாகவும், மஞ்சள் நிறத்திலும் இருக்கும். முனையில் சற்று வளைந்து காணப்படும். முகத்தில் ரோமங்கள் அற்று காணப்படும். கூடமைக்கும் காலங்களில் உச்சந்தலையில் ரோமங்கள் இருக்காது. இளம் பறவைகளுக்கு, தலையிலும் கழுத்திலும் குட்டையான பழுப்பு ரோமங்களைக் கொண்டிருக்கும். அலகு சற்றே மங்கிய மஞ்சள் நிறத்திலும், உடலில் இளஞ்சிவப்பு சிறகுகள் அற்றும் காணப்படும். வெகு உயரத்தில் பறக்கும் நிலையில் பார்க்கும் போது மார்பில் கருப்பு பட்டையும், இறக்கைகளின் பெரும்பகுதி கறுப்பாகவும் இருக்கும். **பண்புகள்:** ஆழம் குறைந்த நீரில் மெதுவாக நடந்து பிளந்த அலகை நீரில்விட்டு துழாவி மீன்பிடிக்கும். மரங்களின் மேல் கூடமைத்து இனப்பெருக்கம் செய்யும். **உணவு:** பெரும்பாலும் மீன்கள். **வாழிடம்:** ஆழம் குறைந்த நன்னீர்நிலைகள். கடற்கரையோர நீர்நிலைகள். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# பாம்புத்தாரா
## Oriental Darter
## *Anhinga melanogaster*





கூட்டில் உள்ள குஞ்சுப் பறவைகள்

**உருவ அளவு:** 85-97 செ.மீ. **அங்க அடையாளம்:** கூர்மையான மஞ்சள் நிற அலகையும், நீண்ட வளைந்த கழுத்தையும், கருப்பு உடலையும் கொண்டது. முதுகில் பளபளப்பான இளஞ்சாம்பல் நிறப் பட்டைகள் காணப்படும். நீந்துவதற்கு ஏதுவாகக் கால்களில் விரல்களுக்கிடையில் வாத்தைப் போல் சவ்வு போன்ற உறுப்பு காணப்படும். இளம் பறவை களின் தலை மற்றும் கழுத்து வெள்ளையும் பழுப்புமாக இருக்கும். **பண்புகள்:** நீரில் தலையும் கழுத்தும் தெரியும்படி நீந்தும். சட்டென மூழ்கி சிறிது நேரம் கழித்து மீண்டும் தலையை வெளியே நீட்டும். சில வேளைகளில் நீரிலிருந்து வெளியே வரும்போது அலகில் மீனை வைத்திருக்கும். அதை இலாவகமாகத் தூக்கி மேலே வீசி வாயைப் திறந்து விழுங்கும். இரை தேடியப் பின்னர் நீரிலிருந்து வெளியே வந்து மரக்கிளை, பாறைத் திட்டுகளில் இறக்கைகளை விரித்து வைத்து வெயிலில் காயவைக்கும். பெரும்பாலும் தனியாகவே இரை தேடும். இராக்கொக்கு, நீர்க்காகம் போன்ற மற்ற நீர்ப்பறவைகளுடன் சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும். **உணவு:** பெரும்பாலும் மீன்கள். அவ்வ போது தவளைகள், நீர்ப்பாம்புகள். **வாழிடம்:** பெரும்பாலும் உள் நாட்டு நன்னீர்நிலைகள். ஆண்டு முழுதும் காணப்படும்.







# சின்ன நீர்க்காகம்
## Little Cormorant
## *Microcarbo niger*




***உருவ அளவு:*** 51 செ.மீ. ***அங்க அடையாளம்:*** இந்தியாவில் தென்படும் மூன்று வகையான நீர்க்காகங்களிலேயே சிறியது இதுதான். உடல் கருப்பு. உச்சந்தலை தட்டையாக இருக்கும். கீழ்அலகு ஆரம்பிக்கும் இடத்தில் (தாடையில்) வெள்ளைத் திட்டு இருக்கும். இது இனப் பெருக்கக் காலங்களில் கறுப்பாக மாறும். இளம் பறவையின் உடலின் கீழ்ப்பகுதி பழுப்பு நிறத்தில் இருக்கும். சவ்வுள்ள கால்களைக் கொண்டது. ***பண்புகள்:*** நீரில் முழ்கி மீன்களைப் பிடிக்கும். சில வேளைகளில் கூட்டமாகவும் இரை தேடும். நீந்தி கரைக்கு வந்தபின் ஈரமாக இருக்கும் இரண்டு இறக்கைகளையும் விரித்துக் காயவைக்கும். ***உணவு:*** மீன்கள், தவளைகள், தலைப்பிரட்டைகள். ***வாழிடம்:*** ஆறு, ஏரி, குளம், குட்டை, வாய்க்கால், உப்பளங்கள் என பல வகையான நீர்நிலைகளிலும் கடற்கரையோரங்களிலும் காணலாம். ஆண்டு முழு தும் காணலாம்.





# பெரிய நீர்க்காகம்
## Great Cormorant
## *Phalacrocorax carbo*





**உருவ அளவு:** 80 - 100 செ.மீ. **அங்க அடையாளம்:** இந்திய நீர்க்காகத்தை விடப் பெரியது. உடல் கருப்பு. அலகு ஆரம்பிக்கும் இடத்தில் ஆரஞ்சு நிறமாகவும் அதனையடுத்து வெள்ளையாகவும் இருக்கும். தலையிலும், உடலின் பக்கவாட்டிலும் வெள்ளை நிறச் சிறகுகள் தோன்றும். வால் சற்றே சிறியது. இளம் பறவைகளின் உடலின் கீழ்ப் பகுதி வெள்ளையாக இருக்கும். **பண்புகள்:** தனியாகவோ, சிறு கூட்டமாகவோ காணப்படும். சில நேரங்களில் பிற நீர்க்காகங்க ளுடன் சேர்ந்து இரை தேடும். நீந்தி கரைக்கு வந்தபின் ஈரமாக இருக்கும் இரண்டு இறக்கைகளையும் விரித்துக் காயவைக்கும். **உணவு:** மீன்கள், தவளைகள். **வாழிடம்:** ஆறு, ஏரி, நீர்த்தேக்கம் போன்ற பெரிய உள்நாட்டு நீர்நிலைகளிலும் கடற்கரையோரங்களிலும் தென்படும். ஆண்டு முழுதும் காணப்படும்.







# இந்திய நீர்க்காகம்
## Indian Cormorant
## *Phalacrocorax fuscicollis*




**உருவ அளவு:** 63 செ.மீ. **அங்க அடையாளம்:** சிறிய நீர்க்காகத்துக்கும் பெரிய நீர்க்காகத்துக்கும் இடைப்பட்ட உருவம் கொண்டது. எனினும் தூரத்தில் இருந்து பார்க்கையில் சிறிய நீர்க்காகத்தைப் போல் தோற்ற மளிக்கும். உடல் கருப்பு. மேல்பகுதியில் உள்ள சிறகுகள் பழுப்பு நிற மாகவும் அவற்றின் விளிம்புகளில் கருப்பு நிறமும் இருப்பதால் தூரத்தில் இருந்து பார்க்கும் போது அவை செதில்களைப் போல் தோன்றும். நீண்ட அலகு, நுனியில் சற்றே வளைந்து காணப்படும். மற்ற நீர்க்காகங்களை ஒப்பிடும் போது உச்சந்தலை வளைவாக இருக்கும். கீழ்அலகு ஆரம் பிக்கும் இடத்தில் (தாடையில்) வெள்ளைத் திட்டு இருக்கும். இது இனப் பெருக்க காலங்களில் கறுப்பாக மாறும். இனப்பெருக்க காலங்களில் கன்னங்களில் வெள்ளைத் தூவிகள் தோன்றும். கண்கள் நீலப்பச்சை நிறத்தில் இருக்கும். இளம் பறவைககளின் கீழ்உடல் பழுப்பாகவும், வெளிர் நிறத்திலும் இருக்கும். **பண்புகள்:** பொதுவாகக் கூட்டமாக நீரில் நீந்தி அவ்வப்போது நீரில் மூழ்கி இரை தேடும். மற்ற நீர்ப் பறவைகளுடன் சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும். **உணவு:** மீன் களையே முக்கிய உணவாகக் கொள்ளும். **வாழிடம்:** குளம், ஏரி, ஆறு உள்நாட்டு நீர்நிலைகள். ஆண்டு முழுதும் காணப்படும்.





# சாம்பல் கூழைக்கடா
## Spot-billed Pelican
## *Pelecanus philippensis*




***உருவ அளவு:*** 140 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடல் சாம்பல் கலந்த வெள்ளை நிறம். நீண்ட அகலமான அலகுக்குக் கீழே இளஞ்சிவப்பு நிறப் பை போன்ற (தாடைப்பை) உறுப்பு இருக்கும். குட்டையான கால்களில் நீந்துவதற்கு ஏற்ற வகையில் விரல்களுக்கு இடையே சவ்வு காணப்படும். அலகிலும், அதன் கீழுள்ள தாடைப்பையிலும் கரும் புள்ளிகள் இருக்கும். பறக்கும் போது கீழே இருந்து பார்க்கையில் உடலும், இறக்கைகளின் முன்பாதியும் வெளிர் நிறமாகவும், பின்பாதி கறுப்பாகவும் தெரியும். இளம் பறவைகளின் மேலுடல் பழுப்பு நிறத்தில் இருக்கும். ***பண்புகள்:*** இவற்றின் முக்கிய உணவு மீன்களே. இவை கூட்டமாகச் சேர்ந்து மீன் பிடிக்கும். நீர்நிலைகளுக்கு அருகில் உள்ள மரங்களில் இவை கூட்டமாகக் கூடு கட்டும். ***உணவு:*** மீன்கள்தான் இவற்றின் முக்கிய உணவு. ***வாழிடம்:*** குளங்கள், ஏரிகள், கழிமுகப் பகுதிகள். ஆண்டு முழுதும் காணப்படும்.





# மஞ்சள் குருகு
# Yellow Bittern
# *Ixobrychus sinensis*







**உருவ அளவு:** *38 செ.மீ.* **அங்க அடையாளம்:** மஞ்சளும் கருப்பும் கலந்த கூர்மையான உளி போன்ற அலகைக் கொண்டது. கால்கள் பச்சை கலந்த மஞ்சள் நிறத்தில் இருக்கும். பறக்கும் போது இறக்கையின் கீழ்ப்பாதி கறுப்பாக இருப்பது தெளிவாகத் தெரியும். **ஆண்:** உச்சந்தலையில் இளநீல நிறம் இருக்கும். உடலின் மேல்பகுதி மஞ்சள் கலந்த பழுப்பு நிறமாகவும், கீழ்ப்பகுதியில் அதே நிறத்தில் வரிகளும், வெள்ளை வரிகளும் இருக்கும். **பெண்:** உச்சந்தலையில் இளநீல நிறம் இருக்காது. மார்பில் மஞ்சள் கலந்த பழுப்பு, வெள்ளை வரிகள் இருக்கும். மார்பின் இருபுறமும் கருப்பு நிறம் காணப்படும். **பண்புகள்:** இவற்றை எளிதில் பார்ப்பது கடினம். பெரும்பாலும் நீர்நிலைகளின் ஓரங்களில் உள்ள தாவரங்கள் அடர்ந்த, பகுதிகளுக்குள் மறைந்து இருக்கும். ஆபத்தை உணரும் போது தலையை மேலே தூக்கி அலகை வான் நோக்கி உயர்த்தி அசையாமல் இருக்கும். **உணவு:** மீன்கள், தவளைகள், நத்தைகள், புழுக்கள், பூச்சிகள். **வாழிடம்:** நீர்த்தாவரங்கள் நிறைந்த நீர்நிலைகள், நெல் வயல்கள். ஆண்டு முழுதும் காணப்படும்.







# சாம்பல் நாரை
## Grey Heron
## *Ardea cinerea*


இனப்பெருக்க கால தோற்றம்


இளம் பறவை

**உருவ அளவு:** 90-98 செ.மீ. **அங்க அடையாளம்:** நீண்ட கழுத்தையும், கால்களையும் உடைய உயரமான நீர்ப்பறவை. அலகு மஞ்சள் நிறத்திலும் கழுத்து வெள்ளையாகவும் உடல் முழுவதும் சாம்பல் நிறத்திலும் இருக்கும். கண்களுக்கு மேல் ஆரம்பிக்கும் அடர்ந்த கருப்புப் பட்டை பிடரிவரை செல்லும். கழுத்து, தோள்பட்டை, வயிறு ஆகிய பகுதிகளில் கருப்புத் திட்டுகள் இருக்கும். இளம் பறவைகளுக்குக் கழுத்தும் அலகும் சாம்பல் நிறத்தில் இருக்கும். இனப்பெருக்கக் காலங்களில் இவற்றின் அலகு ஆரஞ்சு நிறத்துக்கு மாறிவிடும். கண்ணுக்கு மேல் உள்ள கருப்புப் பட்டையில் இருந்து சிறகு நீட்சி குஞ்சம் போல பின்னோக்கி நீட்டிக்கொண்டிருக்கும் **பண்புகள்:** ஆழம் குறைந்த பகுதிகளில் நின்று இரை தேடுவதைக் காணலாம். பறக்கும் நிலையில் கழுத்தை மடக்கிவைத்துக்கொள்ளும். செந்நீல நாரையைப் போல் அல்லாமல் நீரில் திறந்தவெளியில் நின்று இரை தேடும். மரத்தின் மேல் மற்ற நீர்ப்பறவைகளுடன் சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும். **உணவு:** மீன்கள், தவளைகள், நண்டுகள், பூச்சிகள், சிறு பறவைகள். **வாழிடம்:** கடற்கரை, ஏரிகள், குளங்கள், சதுப்புநிலங்கள், அலையாத்திக்காடுகள், பவழத்திட்டுகள். ஆண்டு முழுதும் காணப்படும்.







# செந்நீல நாரை
## Purple Heron
## *Ardea purpurea*







**உருவ அளவு:** 78-90 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலில் செந்நீலம், சாம்பல், கருப்பு, பழுப்பு, கபில நிறம் என பல நிறங்களைக் கொண்டிருக்கும். இந்நிறங்கள் இனப்பெருக்கக் காலங்களில் சற்றுத் தூக்கலாகவும், இளம் பறவைகளுக்குச் சற்று மங்கலாகவும் இருக்கும். அலகு மஞ்சளும் கருப்புமாக இருக்கும். கழுத்தின் முன்பகுதி வெளிர் நிறமாகவும், கருப்பு வரிகளும், பின்னால் கருப்பு நிறம் பாதி கழுத்துவரை நீண்டிருக்கும். கழுத்தின் பக்கவாட்டில் தலையில் இருந்து கீழே உடல்வரை கருப்பு கோடு இருக்கும். இனப்பெருக்கக் காலத்தில் கருப்பு நிறச் சிறகு நீட்சி தலையின் பின்னே குஞ்சம் போல நீட்டிக்கொண்டிருக்கும். **பண்புகள்:** தாவரங்கள் நிறைந்த நீர் நிலைகளில் தனியாகவோ இடைவெளி விட்டு சிறு கூட்டமாகவோ இருக்கும். பொதுவாக வெட்டவெளியில் அதிகம் தென்படாது. தாவரங்களினூடே மறைந்து இருக்கும். அமைதியாக நின்று சட்டென கழுத்தை நீட்டி இரையைப் பிடிக்கும். **உணவு:** மீன்கள், தவளைகள், பாம்புகள், பல்லிகள், சிறுபறவைகள், சிறுபாலூட்டிகள். மெல்லுடலிகள், பூச்சிகள். **வாழிடம்:** தாவரங்கள் சூழ்ந்த உள்நாட்டு நன்னீர் நிலைகள். ஆகாயத் தாமரைகள் பரவியிருக்கும் குளங்களிலும் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பரவியிருக்கும். ஆண்டு முழுதும் காணலாம்.







# நெடலைக் கொக்கு
## Great Egret
## *Ardea alba*


இனப்பெருக்க கால தோற்றம்



**உருவ அளவு:** *90–102* செ.மீ. **அங்க அடையாளம்:** உடல் முழுவதும் வெள்ளை. அலகு மஞ்சள் நிறம். அலகு ஆரம்பிக்கும் இடத்திலிருந்து நீளும் கோடு கண்களுக்குக் கீழே, கண்களைத் தாண்டி நீண்டிருக்கும். நடுவாந்தரக் கொக்குக்கு இக்கோடு கண்களைத் தாண்டாது. எனினும் இவற்றைச் சற்று அருகில் இருந்து பார்க்கும்போதுதான் காண முடியும். தூரத்தில் இருக்கும் போது நடுவாந்தரக் கொக்கில் இருந்து இனப்பிரித்துக் காண்பது இவற்றின் 'S' போல வளைந்த கழுத்துப் பகுதியை வைத்தே. இனப்பெருக்கக் காலத்தில் அலகு கறுப்பாகவும் கண்களுக்கும், அலகுக்கும் இடையில் உள்ள சிறியப் பகுதி இளநீல நிறமாக இருக்கும். அடிக்கழுத்திலும், முதுகிலும் மெல்லிய இறகுத் தூவிகள் தோன்றும். **பண்புகள்:** ஆழமற்ற நீர்நிலைகளில் நிதானமாக நடந்து இரையைப் பிடிக்கும். பெரும்பாலும், நீர்நிலைகளில் சற்றே ஆழமான இடத்தில், நின்றவாறு இரை தேடும். பொதுவாக மரங்களில் கூட்டமாக, பிற நீர்ப்பறவைகளுடன் சேர்ந்து கூடமைக்கும். **உணவு:** முக்கிய உணவு மீன்களே. தவிர மெல்லுடலிகள், தவளைகள், பாம்புகள், சிறு பறவைகள் போன்றவை. **வாழிடம்:** உள்நாட்டு நீர்நிலைகள், கடலோரப் பகுதிகள். ஆண்டு முழுதும் காணப்படும்.







# நடுவாந்தரக் கொக்கு
## Intermediate Egret
## *Ardea Intermedia*





இனப்பெருக்க கால தோற்றம்

***உருவ அளவு:*** *65 -72 செமீ* ***அங்க அடையாளம்:*** *நெடலைக் கொக்குக்கும், சின்ன கொக்குக்கும் இடைப்பட்ட உருவ அளவில் இருக்கும் (குறிப்பாகக் கழுத்தின் நீளம்). உடல் முழுவதும் வெள்ளை நிறம். அலகு மஞ்சள் நிறம், நுனி கறுப்பாக இருக்கும். கால்கள் கருப்பு நிறம். கழுத்து நீண்டிருக்கும் ஆனால், நெடலையின் கழுத்தைவிட அளவில் குறைவாகவே இருக்கும். தூரத்தில் இருந்து பார்க்கும்போது அருகில் வேறு வெள்ளை நிறக் கொக்குகள் இல்லையெனில் இவற்றை இனங் காண்பதில் சற்று கவனம் தேவை. அருகில் கண்டால், அலகு ஆரம் பிக்கும் இடத்தில் இருந்து நீளும் கோடு கண்களுக்குக் கீழே, கண்களைத் தாண்டாமல் இருப்பது தெரியும். நெடலைக் கொக்குக்கு இக்கோடு கண்களைத் தாண்டி இருக்கும். இனப்பெருக்கக் காலத்தில் அலகு கறுப்பாகவும் கண்களுக்கும், அலகுக்கும் இடையில் உள்ள சிறிய பகுதி மஞ்சள் நிறமாகவும் இருக்கும். அடிக்கழுத்திலும், முதுகிலும் மெல்லிய இறகுத் தூவிகள் காணப்படும்.* ***பண்புகள்:*** *தனியாகவோ, மற்ற நீர்ப் பறவைகளுடனோ (குறிப்பாக வெள்ளைக் கொக்குகள்) சேர்ந்து இரை தேடும். பிற நீர்ப்பறவைகளுடன் சேர்ந்து ஒரு மரத்தில் கூடு கட்டும்.* ***உணவு:*** *மீன்கள், தவளைகள், பாம்புகள், பல்லிகள், பறவைகள், நண்டுகள், பூச்சிகள்.* ***வாழிடம்:*** *உள்நாட்டு நீர்நிலைகள், கடலோரப் பகுதிகள்.*






# சின்னக் கொக்கு
## Little Egret
## *Egretta garzetta*


இனப்பெருக்க கால தோற்றம்



***உருவ அளவு :*** 55-65 செ.மீ. ***அங்க அடையாளம்:*** வெள்ளை நிற நீர்ப் பறவை. உண்ணிக்கொக்கைவிடச் சற்றுப் பெரியதாகவும், அலகு, கால்கள் கறுப்பாகவும், விரல்கள் மஞ்சளாகவும் இருக்கும். தோற்றத் தில் வெள்ளை நிறக் கடற்கரைக் கொக்கைப் போலவே இருக்கும். எனினும், கடற்கரைக் கொக்குக்குக் கால் விரல்கள் மட்டுமல்லாது கால்களின் பாதி அளவு மஞ்சள் கலந்த பச்சை நிறத்தில் இருக்கும். ஆனால், சின்னக் கொக்குக்கு விரல்களிலிருந்து கணுக்கால்வரை மட் டுமே மஞ்சள் நிறம் இருக்கும். இனப்பெருக்கக் காலத்தில் பிடரியி லிருந்து குஞ்சம் வைத்தது போல் நீண்ட சிறகுகள் நீட்டிக்கொண் டிருக்கும். **பண்புகள்:** தனியாகவோ, சிறு கூட்டமாகவோ பிற வெள்ளை நிறக் கொக்குகளுடன் சேர்ந்தோ இரை தேடும். பிற நீர்ப்பறவை களோடு சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும். **உணவு:** மீன்கள், சிறிய நீர், நிலவாழ்வன முதலியன. **வாழிடம்:** நீர்நிலைகள், ஆற்றோரங்கள், நீர் நிரம்பிய நெல்வயல்கள், சதுப்பு நிலங்கள், கழி முகங்களில் காணப் படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# கடற்கரைக் கொக்கு
## Western Reef-Heron
*Egretta gularis*







***உருவ அளவு:*** *55-65 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *இரண்டு விதமான நிறத் தோற்றங்களைக் கொண்டது. சின்னக் கொக்கைப் போலவே உடல் முழுவதும் வெள்ளை அல்லது கருஞ்சாம்பல் நிறத்தைக் கொண்டிருக்கும். இந்தக் கருஞ்சாம்பல் நிறத் தோற்றத்தில் உள்ள முதிர்ந்த பறவைக்குத் தாடை வெள்ளையாக இருக்கும். இந்த இரண்டு நிறத் தோற்றங்களுக்கு இடைப்பட்ட தோற்றமும் உண்டு. இவை வெள்ளையும், வெளிறிய சாம்பல் பூச்சும் கொண்டிருக்கும். இப்பறவையின் அலகு சின்னக் கொக்கைவிடப் பருத்தும், சற்றே வளைந்தும் காணப்படும். கால் விரல்கள் மட்டுமல்லாது காலின் பாதி அளவு மஞ்சள் கலந்த பச்சை நிறத்தில் இருக்கும். இனப்பெருக்கக் காலத்தில் பிடரியிலிருந்து பின்பகுதிவரை குஞ்சம் வைத்தது போன்ற நீண்ட சிறகுகளும் மெல்லிய தோகை போன்ற சிறகுகளும் இருக்கும்.* **பண்புகள்:** *தனியாகவோ, சிறு கூட்டமாகவோ சற்று சுறுசுறுப்பாக இரை தேடும்.* **உணவு:** *பூச்சிகள், புழுக்கள், சிறு மீன்கள் போன்றவை.* ***வாழிடம்:*** *பெரும்பாலும் கடற்புறங்களிலும் பாறை, மணல் சூழ்ந்த கரையோரங்களிலும், முகத்துவாரங்களிலும் இரை தேடக் காணலாம். அவ்வப்போது உள்நாட்டு நீர்நிலைகளிலும் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.*







# உண்ணிக்கொக்கு
## Cattle Egret
## *Bubulcus ibis*



இனப்பெருக்க கால தோற்றம்


**உருவ அளவு:** 48-53 செ.மீ. **அங்க அடையாளம்:** உடல் வெள்ளை, அலகு மஞ்சள் நிறம், கால்கள் கருப்பு நிறம். இனப்பெருக்கக் காலத்தில் தலை, கழுத்து, முதுகு ஆகியவற்றில் ஆரஞ்சு நிற இறகுகள் காணப்படும். இந்நிலையில் அலகு சிவப்பு கலந்த ஆரஞ்சு நிறத்தில் இருக்கும். கால்கள் சிவப்பாக மாறும். **பண்புகள்:** ஆடு, மாடு போன்ற கால்நடைகள் மேயும் இடங்களில் இவற்றைக் காணலாம். கால்நடைகள் நடக்கும் போதும், மேயும் போதும் தரையிலிருந்து வெளிவரும் புழுக்களையும், பூச்சிகளையும் உண்ணிக்கொக்கு பிடித் துத் தின்னும். மாட்டின் மேல் சவாரிசெய்து அவற்றின் உடலில் இருக்கும் உண்ணிகளையும் பிடித்துத் தின்னும். கூட்டமாக அடையும். பிற நீர்ப்பறவைகளோடு சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும். **உணவு:** பூச்சிகள், தவளைகள், மீன்கள் போன்றவை. **வாழிடம்:** புல்வெளிகள், வயல்வெளிகள், நீர்நிலைகளின் அருகில் காணப்படும். ஆண்டு முழு வதும் காணப்படும்.





# மடையான்
## Indian Pond- Heron
## *Ardeola grayii*





இனப்பெருக்க கால தோற்றம்

**உருவ அளவு:** 42-45 செ.மீ. **அங்க அடையாளம்:** இறக்கைகள் வெள்ளையாக இருக்கும். எனினும் இவை அமர்ந்திருக்கும் நிலையில் மடக்கிவைக்கப்பட்ட வெள்ளையான இறக்கையை அவற்றின் முதுகில் உள்ள பழுப்பு நிறச் சிறகுகள் மறைத்துக்கொண்டிருப்பதால் உடல் முழுவதும் பழுப்பாகவே தோற்றமளிக்கும். இனப்பெருக்கக் காலத்தில் முதுகில் உள்ள சிறகுகள் செம்பழுப்பு அல்லது அரக்கு நிறத்தில் இருக்கும். சில பறவைகளுக்குப் பச்சையாக உள்ள கால்கள் சிவப்பாக மாறும். **பண்புகள்:** நீர்நிலைகளின் ஓரங்களில் அமைதியாகக் கழுத்தைக் குறுக்கி அமர்ந்து இரையைக் கண்டால் சட்டென கழுத்தை நீட்டிப் பிடிக்கும். கூட்டமாகப் பிற நீர்ப்பறவைகளுடன் சேர்ந்து மரங்களில் சிறுசிறு குச்சிகளைக் கொண்டு கூடமைக்கும். **உணவு:** மீன், தவளை, நண்டு, பூச்சிகள் ஆகியவை. **வாழிடம்:** அனைத்து விதமான நீர்நிலைகளிலும் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





வளர்ந்த குஞ்சுப் பறவை



# வக்கா
# Black-crowned Night Heron
# *Nycticorax nycticorax*



இளம் பறவை



***உருவ அளவு:*** *58-65 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *தலையும் முதுகும் நீலம் கலந்த கருஞ்சாம்பல் நிறத்திலும், இறக்கைகள் வெளிறிய சாம்பல் நிறத்திலும் இருக்கும். கண்கள் சிவப்பு. அலகு கறுப்பு. கால்கள் இளம் மஞ்சள் நிறம். இனப்பெருக்கக் காலத்தில் பிடரியிலிருந்து ஒற்றை வெள்ளைச் சிறகு நீட்டிக்கொண்டிருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை. இளம் பறவைகளின் உடல் பழுப்பு நிறமாகவும் அதில் வெள்ளைப் புள்ளிகள் திட்டுத்திட்டாகவும் இருக்கும். தலையிலும் உடலின் கீழ்ப்பகுதியிலும் பழுப்பும், வெள்ளையுமான வரிகள் இருக்கும்.* ***பண்புகள்:*** *இது ஒரு இரவாடிப் பறவை. அந்தி மாலை நேரங்களில் இவை வானில் வ்வாக்... வ்வாக்... என கத்திக்கொண்டு தனியாகவோ சிறு கூட்டமாகவோ பறந்து செல்வதைக் காணலாம். இதனாலேயே இதற்கு வக்கா என பெயர் வந்தது. பொதுவாகத் தனியாகவே நீர்நிலைகளின் ஓரங்களில் இரை தேடும். பிற நீர்ப் பறவைகளோடு சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும்.* ***உணவு:*** *மீன், தவளை, நண்டு, புழு, பூச்சிகள் முதலியவை.* ***வாழிடம்:*** *உள்நாட்டு நன்னீர் நிலைகளிலும், கடலோரப் பகுதிகளிலும்கூட தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.*







# சின்ன அரிவாள் மூக்கன்
## Glossy Ibis
## *Plegadis falcinellus*






***உருவ அளவு:*** 55-65 செ.மீ. ***அங்க அடையாளம்:*** அடர்ந்த கரும்பழுப்பு நிற உடலும், சற்றே பளபளப்பான கரும்பச்சை நிற இறக்கைகளும் கொண்ட நீர்ப்பறவை. இளம் பறவைகளுக்கும், இனப்பெருக்கம் செய்யாத முதிர்ந்த பறவைகளுக்கும் தலையிலும் கழுத்திலும் சிறிய வெள்ளைக் கோடுகள் காணப்படும். கூடு கட்டும் காலங்களில் இறக்கைகள் பளபளக்கும் மரகதப் பச்சை நிறத்திலும், உடல் செம்பழுப்பு நிறத்திலும் இருக்கும். அலகு அரிவாள்போல நீண்டும் வளைந்தும் இருக்கும். ***பண்புகள்:*** இவை பொதுவாகக் கூட்டமாக இரை தேடும். மாலையில் அடையும் வேளையில் கூட்டம்கூட்டமாக '*V*' வடிவில் வரிசையாகப் பறந்து செல்லும். குளம், ஏரி, போன்ற நீர்நிலைகளிலும், வயல்வெளிகளிலும் ஆழம் குறைந்த பகுதிகளிலும் தனது வளைந்த அலகால் நீரினைத் துழாவி இரை தேடும். மற்ற நீர்ப்பறவைகளோடு சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும். ***உணவு:*** நத்தை, சிப்பி, இறால் வகை உயிரினங்கள், பூச்சி, புழுக்கள் முதலியவை. ***வாழிடம்:*** ஆறு, குளம், ஏரி போன்ற நீர்நிலைகளிலும், வயல்வெளிகளிலும் காணப் படும் ஆண்டு முழுவதும் காணப்படும்.





# வெள்ளை அரிவாள் மூக்கன்
## Black-headed Ibis
## *Threskiornis melanocephalus*


இனப்பெருக்க கால தோற்றம்



**உருவ அளவு:** 75 செ.மீ. **அங்க அடையாளம்:** தலை, கழுத்து ஆகியவை கருப்பு நிறமாகவும், உடல் வெள்ளை நிறமாகவும் இருக்கும். அலகு அரிவாள்போல நீண்டும் வளைந்தும் இருக்கும். முதிர்ந்த பறவைகளுக்குத் தலையிலும் கழுத்திலும் சிறகுகள் இருக்காது. இளம் பறவைகளுக்குக் கழுத்தில் மட்டும் சிறகுகள் இருக்கும். சில பறவைகளுக்கு அவை பறக்கும் போது அல்லது இறக்கையை மேலே தூக்கும் போது உள்பக்கத்தில், இறக்கை எலும்புகளும், சிறகுகளும் சேருமிடத்தில் உள்ள சிவப்பு நிறத் தோல் தெரியும். இனப்பெருக்க் காலத்தில் சிறகுகள் அற்ற தலையின் பின்புறம் சிவப்பு நிறத் திட்டு காணப்படும். உடலின் பின்பகுதியில் சாம்பல் நிறத்தில் தோகை போல் சிறகுத் தூவிகள் இருக்கும். **பண்புகள்:** சதுப்புநிலங்களிலும், ஆழம் குறைந்த நீர்நிலைகளிலும், நடந்தபடி தனது அலகால் துழாவிப் புழுக்கள், தவளைகள், சிறு பூச்சிகள் போன்றவற்றை உண்ணும். மற்ற நீர்ப்பறவைகளோடு சேர்ந்து ஒரே மரத்தில் கூடு கட்டும். **உணவு:** தவளை, தலைப்பிரட்டை, நத்தை, பூச்சி, புழு, மீன்கள் முதலியவை. **வாழிடம்:** உள்நாட்டு நீர்நிலைகளிலும், வயல்வெளிகளிலும், சில நேரங்களில் கடலோரப் பகுதிகளிலும் தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# கறுப்பு அரிவாள்மூக்கன்
## Red-naped Ibis
## *Pseudibis papillosa*




***உருவ அளவு:*** 68 செ.மீ. ***அங்க அடையாளம்:*** கரிய உடலும், கருநீல இறக்கைகளும், தோள்பட்டையில் வெள்ளைத் திட்டும் (இது பறக்கும் போது தெளிவாகத் தெரியும்) உச்சந்தலை, பிடரியில் சிவப்பு நிறமும் கொண்ட பெரிய நீர்ப்பறவை. அலகு அரிவாள்போல நீண்டும் வளைந் தும் இருக்கும். **பண்புகள்:** மற்ற அரிவாள் மூக்கன்களைப் போல நீர் நிலைகளில் மட்டும் இல்லாமல், வறண்ட வெளிகளிலும்கூடத் தென் படும். பொதுவாக சிறுசிறு கூட்டமாகத் திரியும். தமிழகத்தின் தென் மாவட்டங்களில் இவற்றை அன்றில் என்றழைக்கின்றனர். “நெருப் பின் அன்ன செந்தலை அன்றில்…” என்று சங்கப்பாடலில் குறிப்பிடப் படும் பறவை இதுவே. மாலை வேளைகளில் மரங்களில் கூட்டமாக அடையும். பெரிய உயரமான மரங்களில் கூடு கட்டும். மற்ற அரி வாள் மூக்கன்கள் போலல்லாமல் தனியாகவே கூடு கட்டும். பாறு கழுகுகள், கழுகுகள் போன்ற பறவைகளின் பழைய கூடுகளிலும் சில வேளைகளில் கூடு வைக்கும். ***உணவு:*** தவளை, மீன், மண்புழு, வண்டு, தேள், பல்லி, சிறு பாம்பு, விதைகள் முதலியவை. ***வாழிடம்:*** நீர்நிலைகளின் ஓரங்கள், வறண்ட நிலங்கள், வயல்வெளிகள் போன்ற இடங்களில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# கரண்டிவாயன்
# Eurasian Spoonbill
# *Platalea leucorodia*






***உருவ அளவு:*** 80-90 செ.மீ. ***அங்க அடையாளம்:*** நீண்ட கழுத்தும், நீண்ட கருப்பு நிறக் கால்களும் கொண்ட பெரிய வெள்ளை நிற நீர்ப்பறவை. அகப்பை போன்ற பெரிய கருப்பு நிற அலகும், அதன் நுனி மஞ்சள் நிறத்திலும் காணப்படும். இளம் பறவைகளின் அலகு இளஞ்சிவப்பு நிறமாக இருக்கும். இனப்பெருக்கக் காலங்களில் பிடரியிலிருந்து கொத்தாக சிறகுத் தூவிகள் நீட்டிக்கொண்டிருக்கும். இதை சில நேரங் களில் விறைப்பாக விரித்து வைத்துக்கொள்ளும். தொண்டையில் செம்பழுப்பு, மஞ்சள் நிறத் திட்டு காணப்படும். மார்புப் பகுதி மஞ்சள் நிற சிறகுகளைக் கொண்டிருக்கும். ***பண்புகள்:*** ஆழமற்ற நீர்நிலைகளில் தலையை இடவலமாக ஆட்டி அலகை நீரில் அழுத்தி இரை தேடும். பொதுவாக சிறு கூட்டமாக இரை தேடுவதைக் காணலாம். பொது வாக சிறு கூட்டம் '*V*' வடிவில் பறக்கும். நீர்நிலைகளுக்கு அருகில் உள்ள மரங்களின் மேல் மற்ற பறவைகளுடன் சேர்ந்து கூடு கட்டும். ***உணவு:*** தவளை, தலைப்பிரட்டை, நத்தை, சிப்பி, பூச்சிகள், தாவாரங் களின் பாகங்கள் போன்றவை. ***வாழிடம்:*** குளம், ஏரி, பரந்த நீர்த் தேக்கங்கள், கடலோர உப்பங்கழிகள் போன்ற இடங்களில் காணப் படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# விராலடிப்பான்
## Osprey
## *Pandion haliaetus*





**உருவ அளவு:** 55-58 செ.மீ. **அங்க அடையாளம்:** உச்சந்தலையும், கழுத்தும் வெள்ளை நிறம். கண்களில் அடர்த்தியாக மையிட்டது போல் பழுப்பு நிறப் பட்டை இருக்கும். மார்பில் பட்டையான பழுப்பு வளையம் இருக்கும். உடலின் மேல்பகுதி கரும்பழுப்பு, கீழ்ப்பகுதி வெள்ளை. பறக்கும் போது இறக்கைகளின் முன்பாதி வெள்ளையாக வும், பின்பாதி பழுப்பும் வெள்ளையுமாகவும் இருக்கும். இளம் பறவை களின் உடலின் மேல்பகுதி பழுப்பும், வெள்ளையும் திட்டுத்திட்டாக இருக்கும். **பண்புகள்:** நீர்ப்பரப்பின் மேல் பறந்து இலாவகமாக மீன் களைத் தமது கூர்மையான விரல் நகங்களினால் பற்றிப் பிடிக்கும். மீனைப் பிடித்தவுடன் அதைப் பறந்துகொண்டே திருப்பி (பறவையின் உடலுக்கு குறுக்கே இல்லாமல், நேராகத் திருப்பி வைத்துக்கொண்டு பறக்கும் திசையை நோக்கி மீனின் முகம் இருப்பது போல) வைத்துக்கொண்டு பறக்கும். வலசைவரும் பறவை. தென்னிந்தியாவுக்கு செப்டம்பர்-அக்டோபரில் வந்து மார்ச்-ஏப்ரலில் வலசைபோகும். **உணவு:** மீன்கள்தான் முக்கிய உணவு. **வாழிடம்:** உள்நாட்டு நீர்நிலை களில் குறிப்பாகப் பெரிய ஏரி, நீர்த்தேக்கம், ஆறு மற்றும் கடலோரப் பகுதிகளிலும் தென்படும்.







# கருந்தோள் பருந்து
## Black-winged Kite
## *Elanus caeruleus*






***உருவ அளவு:*** 31-35 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடலின் மேல்பகுதி சாம்பல் நிறமாகவும், வயிற்றுப் பகுதி வெள்ளையாகவும், இருக்கும். இறக்கைகளின் மேல் தோள்பட்டை கறுப்பாகவும் மற்ற பாகங்கள் சாம்பல் நிறமாகவும் இருக்கும். பறக்கும் போது கீழே இருந்து பார்க்கும் போது இறக்கையின் பின்பாதி அதாவது முதன்மை மற்றும் இரண்டாம் நிலைச் சிறகுகள் கறுப்பாகவும், முன்பாதி வெள்ளையாகவும் இருக்கும். கண்கள் சிவப்பாக இருக்கும். கண்களின் மேல் கருப்பு நிறப் புருவம் இருக்கும். இளம் பறவை உடலின் மேலே உள்ள சாம்பல் நிறத்தோடு வெள்ளை நிறத் திட்டுகளும் இருக்கும். கண்கள் மஞ்சளாக இருக்கும். கழுத்திலும், மார்பிலும் லேசான பழுப்பு நிறம் காணப்படும். ***பண்புகள்:*** இப்பறவை மின்கம்பிகளில், மர உச்சிகளில் அமர்ந்திருப்பதைக் காணலாம். இது சிறகடித்தபடி அந்தரத்தில் ஒரே இடத்தில் இருந்து கொண்டு இரைக்காகக் கீழே நோட்டமிடும். சட்டெனப் பாய்ந்து கீழிறங்கி இரையைப் பிடிக்கும். ***உணவு:*** அணில், எலி, ஓணான், போன்றவை. ***வாழிடம்:*** வெட்டவெளிகளிலும், திறந்த புல்வெளிகளிலும், முட்புதர்க்காடுகளிலும் தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# வெண்தோள் கழுகு
# Booted Eagle
# *Hieraaetus pennatus*







***உருவ அளவு:*** 45-53 செ.மீ. ***அங்க அடையாளம்:*** இரண்டு நிறத் தோற்றங்களில் காணப்படும். *முதல் வகை:* உடல் கரும்பழுப்பு நிறத்தில் இருக்கும். பறக்கும் போது கீழிருந்து பார்த்தால் இறக்கையின் முன்பாதி கரும்பழுப்பாகவும் பின்பாதி சற்றே வெளிறியப் பழுப்பு நிறமாகவும் இருக்கும். *இரண்டாம் வகை:* தலை இளம் பழுப்பாகவும், உடலின் கீழ்ப்பகுதி வெள்ளையாகவும் உடலின் மேல்பகுதி பழுப்பு, கரும்பழுப்பு நிறங்களிலும் இருக்கும். பறக்கும் போது கீழிருந்து பார்த்தால் இறக்கையின் முன்பாதி, வயிறு ஆகியவை வெள்ளை நிறமாகவும், இறக்கையின் பின்பாதி அதாவது முதன்மை மற்றும் இரண்டாம் நிலை சிறகுகள் ஆகியவை கரும்பழுப்பாகவும் இருக்கும். இரண்டு நிலைகளிலுமே இதன் தோள்பட்டையின் இருபுறமும் வெள்ளைத் திட்டு தெரியும். இது பார்ப்பதற்கு வாகனத்தின் முன்னே உள்ள விளக்குகளைப் போல இருக்கும். **பண்புகள்:** வலசைவரும் பறவை. செப்டம்பர்-அக்டோபரில் தென்னிந்தியாவுக்கு வலசைவரும். மார்ச்-ஏப்ரலில் இங்கிருந்து வலசைபோகும். பொதுவாக நீர்நிலைகளை ஒட்டி இரையைத் தேடிப் பறந்து திரியும். **உணவு :** சிறு பறவைகள், எலி, ஊர்வன போன்றவை. **வாழிடம்:** வயல்வெளிகள், புல்வெளி கள், வறண்ட நிலப்பகுதிகள், மலைப் பகுதிகளில் காணப்படும்.







# வெள்ளைக்கண் வைரி
## White-eyed Buzzard
### *Butastur teesa*


இளம் பறவை



**உருவ அளவு:** 43 செ.மீ. **அங்க அடையாளம்:** உடல் பழுப்பு நிறம். கழுத்து வெள்ளை நிறம். ஆனால், நடுவிலும் கழுத்தின் இருபுறமும் கரும்பழுப்பு வரி இருக்கும். கண்கள் வெள்ளையாகவும், கண்மணி கறுப்பாகவும் இருக்கும். பறக்கும் நிலையில் கீழே இருந்து பார்க்கும் போது இறக்கைகளின் அடிப்பகுதி பெரும்பாலும் வெள்ளையாகவும், ஆனால், இறக்கைகள் உடம்போடு சேரும் இடத்திலும், மார்பிலும் கரும்பழுப்பு நிறம் இருப்பதைக் காணலாம். இறக்கைகளில் முதன் மைச் சிறகுகளின் நுனி கறுப்பாக இருக்கும். அமர்ந்த நிலையில் இறகு கள் இல்லாத மஞ்சள் நிறக் கால்களைக் காணலாம். பிடரியில் வெள் ளைத் திட்டு இருக்கும். இளம் பறவைகள் மங்கிய பழுப்பு நிறமாக வும், இறக்கைகளில் (தோள் பட்டையில்) பெரிய வெள்ளைத் திட்டும் காணப்படும். கண்கள் பழுப்பும், கருப்புமாக இருக்கும். **பண்புகள்:** மர உச்சிகளிலும், சில நேரங்களில் மின்கம்பங்களிலும் அமர்ந்திருக் கும். சட்டெனப் பறந்து சென்று பாய்ந்து இரையைப் பிடிக்கும். மரங் களின் மேல் காய்ந்த குச்சிகளை வைத்து கூடு கட்டும். ஒவ்வொரு ஆண்டும் புதிய கூட்டைக் கட்டும் எனவும், பெண் பறவை மட்டுமே அடைகாக்கும் எனவும் அறியப்படுகிறது. **உணவு:** பொதுவாக பூச்சி கள், எலி, பல்லி, தவளை, பாம்பு முதலியவை, **வாழிடம்:** முட்புதர்க் காடுகள், புல்வெளிகள், வயல்வெளிகள், இலையுதிர் காடுகளில் காண லாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# சேற்றுப் பூனைப்பருந்து
## Western Marsh Harrier
### *Circus aeruginosus*






**உருவ அளவு:** 42-54 செ.மீ. **அங்க அடையாளம்: பெண்:** உடல் முழுவதும் கரும்பழுப்பு நிறம். உச்சந்தலையும், கழுத்தும், தோள்பட்டையும் மஞ்சள் கலந்த பழுப்பு நிறத்தில் இருக்கும். **ஆண்:** உடல் முழுவதும் கரும்பழுப்பு நிறம், தலை இளம் பழுப்பு நிறம். இறக்கைகளின் முன்பாதி கரும்பழுப்பு நிறமாகவும், பின்பாதி (அதாவது முதன்மை மற்றும் இரண்டாம் சிறகுகள்) சாம்பல் நிறமாகவும் இருக்கும். முதன்மைச் சிறகுகளில் நுனிப்பகுதி கறுப்பாக இருக்கும். வால் சாம்பல் நிறத்தில் இருக்கும். **பண்புகள்:** நீர்நிலைகளின் மேல் அதிகம் இறக்கைகளை அடிக்காமல் ஒரே சீராகக் காற்றில் தவழ்ந்து செல்லும். சட்டென பாய்ந்து இரையைப் பிடிக்கும். இவை பறந்து வருவதைக் கண்டால் மற்ற நீர்ப்பறவைகள் யாவும் சிதறிக் கூட்டமாகப் பறந்து செல்லும். வலசைவரும் பறவை. செப்டம்பர்-அக்டோபரில் தென்னிந்தியாவுக்கு வலசைவரும். மார்ச்-ஏப்ரலில் இங்கிருந்து வலசைபோகும். **உணவு:** தவளை, மீன், சிறு பறவைகள், சிறு பாலூட்டிகள் முதலியவை. **வாழிடம்:** நீர்த்தாவரங்கள் நிறைந்த உள்நாட்டு நன்னீர்நிலைகளிலும், கடலோரப் பகுதிகளிலும் காணலாம்.








# வல்லூறு
## Shikra
## *Accipiter badius*










***உருவ அளவு:*** 30-36 செ.மீ. ***அங்க அடையாளம்:*** காகத்தைவிட அளவில் சற்றுச் சிறியது. ஒடுக்கமான தோற்றத்தைக் கொண்டது. ஆண் பறவையின் உடலின் மேல்பகுதி சாம்பல் நிறமாகவும், பெண் பறவைக்குப் பழுப்பு நிறமாகவும் இருக்கும். ஆண், பெண் இரண்டுக்கும், உடலின் கீழ்ப்பகுதி வெள்ளையாகவும் அதில் துரு நிற கிடைமட்ட வரிகளைக் கொண்டிருக்கும். **ஆண்:** கண்கள் சிவப்பு நிறம். **பெண்:** கண்கள் மஞ்சள் நிறம். இளம் பறவைகளின் உடலின் மேல்பகுதி பழுப்பு நிறமாகவும், அதில் வெள்ளைத் திட்டுகளும், உடலின் கீழ்ப் பகுதி வெள்ளையாகவும் அதில் பெரிய பழுப்பு நிறக் கோடுகளையும் கொண்டிருக்கும். வாலில் கரும்பழுப்பு நிறப் பட்டைகள் இருக்கும். கண்கள் மஞ்சள் நிறம். கழுத்து வெள்ளை ஆனால் அதன் நடுவிலும் கன்னங்களிலும் அடர்ந்த பழுப்பு நிறக் கோடு இருக்கும். **பண்புகள்:** அமைதியாக மரக்கிளைகளினூடே அமர்ந்திருக்கும். வேகமாகப் பறந்து சென்று இரையைப் பிடிக்கும். **உணவு:** ஓணான், அணில் பிள்ளை, எலி, சிறிய பறவைகள் போன்றவற்றை வேட்டையாடும். **வாழிடம்:** பரவலாக அனைத்து வாழிடங்களிலும் காணப்படும், மனிதர்கள் வசிக்கும் பகுதிகளிலும் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# கரும்பருந்து
## Black Kite
## *Milvus migrans*





இளம் பறவை

**உருவ அளவு:** 58-66 செ.மீ. **அங்க அடையாளம்:** கரும்பருந்து என்று அழைக்கப்பட்டாலும் இதன் உடல் முழுவதும் கரும்பழுப்பு நிறத்தில் இருக்கும். தோள்பட்டையில் உள்ள சிறகுகள் சற்றே வெளிறிய பழுப்பு நிறத்தில் இருக்கும். இளம் பறவைகள் பறக்கும்போது இறக்கைகளின் கீழ்ப்பகுதியில் வெள்ளை நிறத் திட்டுகள் இருக்கும். இது வயதிற்கு ஏற்ப மாறுபடும். (இளம் பறவைகளுக்கு சற்று அதிகமாக இருக்கும்) வால் 'V' வடிவில் தோற்றம் தரும். வாலை நன்கு விரித்துப் பறக்கும் போது சில சமயங்களில் 'V' வடிவம் தெரியாது. **பண்புகள்:** பறந்து கொண்டே தட்டான்களையும், ஈசல்களையும் காலால் கவ்விப்பிடித் துத் தலையைக் குனிந்து அவற்றை அலகால் பிடித்துத் தின்னும். மாலை வேளைகளில் கூட்டமாக வானில் வட்டமடித்து, கூட்டமாக மரங்களில் அடையும். இவை மற்ற பறவைகளின் குஞ்சுகளையும் அவ்வப்போது உண்பதால், இவை தாழப்பறக்கும் போது காகங்கள் இவற்றைச் சூழ்ந்து பறந்து விரட்டியடிக்கும். **உணவு:** சிறிய பறவை கள், இறந்து போன விலங்குகள், மாமிசக் கழிவுகள் முதலியவை. **வாழிடம்:** நகரங்களில் உள்ள குப்பைமேடுகளில் கூட்டமாகப் பறந்து திரிவதைக் காணலாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# செம்பருந்து
## Red-backed kite
## *Haliastur indus*






**உருவ அளவு :** 48 செ.மீ. **அங்க அடையாளம்:** முதிர்ந்த பறவையின் தலை, மார்பு, வயிறு யாவும் வெள்ளை நிறம். உடல் செம்பழுப்பு நிறம். இளம் பறவை பழுப்பு நிறத்தில் இருக்கும். தலை, முதுகு, வயிறு ஆகியவற்றில் பழுப்பு நிற வரிகள் இருக்கும். பறக்கும் போது கீழிருந்து பார்த்தால் இறக்கைகளில் பெரிய வெள்ளைத் திட்டு தெரியும். இளம் பறவையைத் தூரத்தில் இருந்து பார்க்கும் போது கரும்பருந்தை ஒத்திருக்கும். ஆகவே இவை இரண்டையும் கவனமாகப் பார்த்து பிரித்தறிய வேண்டும். செம்பருந்தின் வாலின் நுனிப் பகுதி வளைவாகவும், கரும் பருந்தின் வால் ‘*V*’ வடிவிலும் இருக்கும். **பண்புகள்:** பொதுவாகக் கடலோரப் பகுதிகளில் அதிகம் தென்படும். மதிய வேளையில் வானில் உயரத்தில் பறப்பதைக் காணலாம். நீர்நிலைகளை ஒட்டிய மரங்களின் மேல் அமர்ந்திருக்கும். மரங்களில் குச்சிகளை வைத்து கூடு கட்டும். **உணவு:** இறந்து போன மீன், மாமிசக் கழிவு, சிறிய பாம்புகள், தவளை போன்ற உயிரினங்கள். **வாழிடம்:** உள்நாட்டு நீர்நிலைகளிலும், கடற்கரைப் பகுதிகளிலும் எளிதாகக் காணலாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.








# கடல் கழுகு
## White-bellied Sea-Eagle
## *Haliaeetus leucogaster*







**உருவ அளவு:** 66-71 செ.மீ. **அங்க அடையாளம்:** கம்பீரமான தோற்றத்தை உடைய பெரிய கழுகு. முதிர்ந்த பறவையின் உடல் சாம்பல் நிறத்திலும், தலை, உடலின் கீழ்ப்பகுதி வெள்ளையாகவும் இருக்கும். வாலின் ஓரங்கள் வெள்ளையாக இருக்கும். பறக்கும் போது இறக்கைகளின் முன்பாதி வெள்ளையாகவும், பின்பாதி கறுப்பாகவும் தெரியும். இளம் பறவைகளின் உடல் இளம் பழுப்பாகவும், உடலின் மேல்பகுதி பழுப்பாகவும் வெள்ளைத் திட்டுகளும் இருக்கும். சுமார் மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர்தான் முதிர்ந்த பறவையின் தோற்றத்தை அடையும். **பண்புகள்:** தனியாகவோ அல்லது ஜோடியாகவோ பறந்து திரியும். பொதுவாகக் காலையிலும் மாலையிலும் குரலெழுப்பும். சில நேரங்களில் இரவில்கூட கத்தும். உயரமான மரங்களில் குச்சிகளையும், இலைகளையும் வைத்து பெரிய கூட்டைக் கட்டும். மீன்களையும், கடல்பாம்புகளையும் பறந்து சென்று நீரின் மேற்பரப்பில் இருந்து கால்களால் கவ்விச் செல்லும். **உணவு:** மீன்கள், நீர்ப்பறவைகள், கடல் பறவைகள், கடல்பாம்பு முதலியவை. **வாழிடம்:** கடற்கரையை ஒட்டியப் பகுதிகளில்தான் பெரும்பாலும் தென்படும். சில நேரங்களில் (ஆறு, நீர்த்தேக்கம் முதலான) உள்நாட்டு நன்னீர் நிலைகளிலும் தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# கூகை
# Common Barn Owl
# *Tyto alba*


காண்க திருக்குறள்: 481



**உருவ அளவு:** 36 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி பொன் நிறமும், சாம்பல் நிறமும் கொண்ட சிறகுகளைக் கொண்டிருக்கும். அதில் கருப்பு வெள்ளை புள்ளிகள் இருக்கும். உடலின் கீழ்ப் பகுதி வெள்ளையாகவும் அதில் சிறிய புள்ளிகளையும் கொண்டிருக்கும். முன்னோக்கி அமைந்த கண்களையும் ஆப்பிள் வடிவ வெள்ளையான முகத்தையும் கொண்டிருக்கும். இரவு நேரங்களில் பறக்கும் போது கீழிருந்து பார்க்கும் போது உடலும் இறக்கையும் வெள்ளைவெளேரெனத் தெரியும். **பண்புகள்:** இரவாடிப் பறவை. பகலில் ஆள் அரவமற்ற கட்டடங்களிலும், கோயில் கோபுரங்களின் உள்ளேயும், மரக் கிளைகளினூடேயும் அடையும். பகல் வேளையில் மற்ற பறவைகள் (குறிப்பாக காகங்கள்) இதைக் கண்டால் உரக்கக் கத்திக்கொண்டே விரட்டும். பாழடைந்த கட்டடங்கள், உயரமான கோயில் கோபுரங்கள், தேவாலயங்கள் போன்ற இடங்களிலும், மரப் பொந்துகளிலும், குச்சிகளை வைத்து கூடு கட்டி அதில் 4-7வரை முட்டையிடும். **உணவு:** எலிகளே முக்கியமான உணவு. **வாழிடம்:** பெரும்பாலும் மனிதர்கள் இருக்கும் பகுதிகளில் வாழும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# புள்ளி ஆந்தை
## Spotted Owlet
*Athene brama*




**உருவ அளவு:** 21 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி சாம்பல் கலந்த பழுப்பு நிறமாகவும், வெள்ளைப் புள்ளிகளையும் கொண்டிருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளையாகவும், பழுப்பு வரிகளையும், திட்டுகளையும் கொண்டிருக்கும். முன்னோக்கி அமைந்த கண்கள் மஞ்சள் நிறமாகவும், கண்மணி கறுப்பாகவும் இருக்கும். கண்களின் மேல் அடர்ந்த வெள்ளைப் புருவம் இருக்கும். கழுத்து வெள்ளையாக இருக்கும். கணுக்கால்வரை சிறகுத் தூவிகள் இருக்கும். கூர்மையான நகங்களைக் கொண்டது. வால் குட்டையாக இருக்கும். **பண்புகள்:** இது ஒரு இரவாடிப் பறவை. பகலில் மரப் பொந்துகளில், கட்டடத்தின் இடுக்குகளில், இரண்டு அல்லது மூன்று பறவைகள் நெருக்கமாக அமர்ந்திருப்பதைக் காணலாம். ஆள் அரவம் இருந்தால் தலையை ஆட்டி தமது மஞ்சள் நிறக் கண்களால் உற்றுப் பார்க்கும். மாலை வேளைகளில் (சில நேரங்களில் பகலிலும்கூட) குரலெழுப்பும். **உணவு:** பலவகையான பூச்சிகள், சுண்டெலி, தவளை போன்றவை. **வாழிடம்:** புதர்க்காடு, மரங்கள் அடர்ந்த மனிதர்கள் வாழும் பகுதிகள், விளைநிலங்களில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# கொண்டலாத்தி
# Common Hoopoe
# *Upupa epops*




***உருவ அளவு:*** 31 செ.மீ. ***அங்க அடையாளம்:*** தலை, கழுத்து, உடலின் கீழ்ப்பகுதி முழுவதும் ஆரஞ்சு அல்லது இளம் பழுப்பு நிறம். தலையில் சிறிய விசிறி போன்ற விரியக்கூடிய கொண்டையைக் கொண்டிருக்கும். கொண்டைச் சிறகுகள் ஆரஞ்சு நிறத்திலும் அதன் நுனி கருப்பும் வெள்ளையுமாக இருக்கும். உடலின் மேல்பகுதியில் கருப்பும் வெள்ளையுமாகப் பட்டையிட்டது போல இருக்கும். மண்ணைக் கிளற ஏதுவாக நீண்ட கூரான அலகு இருக்கும். **பண்புகள்:** பொதுவாகத் தனது சற்றே பிளந்த அலகைக் கொண்டு தரையில் குத்தி அதிலிருந்து வரும் புழு, பூச்சிகளை எடுத்து உண்ணும். தலையில் இருக்கும் கொண்டை சாதாரணமாக மடிக்கப்பட்டே இருக்கும், ஆனால், ஏதே னும் அபாயம் ஏற்படும் எனத் தெரிந்தாலோ, திடுக்கிட்டாலோ கொண்டையை விசிறிபோல் சிலுப்பிக்கொண்டு விரித்து வைத்துக் கொள்ளும். மரங்கொத்தி வகை யைச் சேர்ந்தது அல்ல. ஊப்ஊப்ஊப் என்ற குரலை வைத்தே இதற்கு ஹூப்பு என ஆங்கிலத்தில் பெய ரிட்டார்கள். **உணவு:** பூச்சிகள், சிலந்திகள், கறையான்கள் போன்ற வற்றை உண்ணும். **வாழிடம்:** புதர்க்காடுகள், திறந்த வெளிகளில் காணப் படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# சிறிய நீல மீன்கொத்தி
## Common Kingfisher
## *Alcedo atthis*





**உருவ அளவு:** 16 செ.மீ. **அங்க அடையாளம்:** தலை, உடலின் மேல் பகுதி ஆகியவை நீல நிறம். இறக்கைகள் சற்றே அடர் நீல நிற மாகவும், அதில் இளம் நீல புள்ளிகளும் காணப்படும். தலையிலும் இது போலவே புள்ளிகள் காணப்படும். பறக்கும் போது முதுகுப் பகுதியில் உள்ள இள நீல நிறம் பளீச்சென்று காணப்படும். கீழ் உடல் செம்பழுப்பு நிறம். கன்னங்களில் பழுப்பும், அதன் பின்னே வெள்ளைத் திட்டும் இருக்கும். கால்கள் சிவப்பாக இருக்கும். ஆண் பறவையின் அலகு கறுப்பாகவும், பெண் பறவையின் கீழ்அலகு சிவப்பு, கருப்பு நிறமாகவும் இருக்கும். **பண்புகள்:** பொதுவாக நீர் நிலைகளின் மேல் அமர்ந்திருக்கும். கிளைகளிலோ கரையோரத் திட்டு களிலோ நீரையே பார்த்துக்கொண்டு அமர்ந்திருக்கும். தலையையும் உடலையும் வெடுக்வெடுக்கென்று முன்னும் பின்னும் ஆட்டும். சட்டென நீரில் பாய்ந்து இரையைப் பிடித்து கரையில் அல்லது கிளையில் அமர்ந்து அதை உண்ணும். நீர்நிலைகளின் கரையோரங் களில் மண்ணைக் குடைந்து கூடு கட்டி முட்டையிடும். **உணவு:** முக்கியமாக சிறு மீன்கள். தவளைகள், நீர்வாழ் புழு, பூச்சிகள் ஆகி யவை. **வாழிடம்:** சிறு மீன்கள் வாழும் அனைத்து நன்னீர், உவர் நீர்நிலைகளிலும் காணலாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.









# வெண்மார்பு மீன்கொத்தி
## White-throated Kingfisher
## *Halcyon smyrnensis*




***உருவ அளவு:*** 27-28 செ.மீ. ***அங்க அடையாளம்:*** தலையும் வயிற்றுப் பகுதியும் பழுப்பு (காப்பிக்கொட்டை நிறம்) நிறத்திலும், தொண்டையும் மார்புப் பகுதியும் வெண்மை நிறத்திலும், முதுகு, இறக்கைகள், வால் ஆகியவை வெளிர் நீல நிறத்திலும் இருக்கும். தடித்த நீளமான அடர் சிவப்பு நிற அலகை உடையது. பறக்கும் போது இறக்கையில் உள்ள வெள்ளை நிறம் தெளிவாகத் தெரியும். ***பண்புகள்:*** இது நீர்நிலைகளை மட்டும் சார்ந்து இல்லாமல், பொதுவாக எல்லா வகையான வாழிடங்களிலும் தென்படும். மின்கம்பிகளில் அமர்ந்து கத்திக்கொண்டிருப்பதைக் காணலாம். குறிப்பாக இனப்பெருக்கக் காலங்களில் காலை, மாலை வேளைகளில் அதிகமாகக் கத்திக்கொண்டிருக்கும். மண் சரிவுகளில் மண்ணைக் குடைந்து வளைகளின் உள்ளே கூடமைக்கும். ***உணவு:*** மீன்கள், ஊர்வன, எலி போன்ற கொறிவிலங்குகள், பூச்சிகள், சிறிய பறவைகள் ஆகியவை. ***வாழிடம்:*** புதர்க்காடுகள், வயல்வெளிகள், தோட்டங்கள், நீர்நிலைகள், மனிதர்கள் வாழும் பகுதிகளில் பரவலாகத் தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# கறுப்பு வெள்ளை மீன்கொத்தி
## Pied Kingfisher
## *Ceryle rudis*







***உருவ அளவு:*** 25 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடலின் மேல்பகுதியில் கருப்பு, வெள்ளைத் திட்டுகள் கொண்ட மீன்கொத்தி. உச்சந்தலை கறுப்பாகவும், கண்களுக்கு மேல் வெள்ளை நிறப் புருவமும் கொண்டது. கழுத்து வெள்ளையாக இருக்கும். பறக்கும் போது இறக்கைகளில் உள்ள வெள்ளைத் திட்டு தெரியும். நீண்ட கூர்மையான கருப்பு அலகு கொண்டது. ***ஆண்:*** மார்பில் ஆரம் அணிந்தது போல இரண்டு பட்டைகள் இருக்கும். ***பெண்:*** மார்பில் ஆரம் இருக்காது. ஆனால், ஒரு பெரிய பட்டை மார்பின் இருபுறங்களிலிருந்து தொடங்கி நடுவில் இணையாமல் இருக்கும். ***பண்புகள்:*** இரையைப் பிடிக்க நீர்ப்பரப்பின் மேல் அந்தரத்தில் ஒரே இடத்தில் இருந்தபடி, இறக்கைகளைப் பட படவென அடித்துக்கொண்டு பறக்கும். பல நிமிடங்கள் இவ்வாறு அடித்துக்கொண்டே இருக்கும். பின்னர் சற்றுக் கீழ்நோக்கி இறங்கி மீண்டும் ஒரே இடத்தில் நின்று பறக்கும் *(Hovering)*. இரை தென் பட்டால் அம்புபோல் சட்டென்று கீழ்நோக்கிப் பாய்ந்து அதைக் கொத்திக்கொண்டு மேலே வரும். ***உணவு:*** பெரும்பாலும் மீன்களே முக்கிய உணவு. ***வாழிடம்:*** அனைத்து நன்னீர், உவர் நீர்நிலைகளிலும் காணலாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# சிறிய பஞ்சுருட்டான்
## Green Bee-eater
*Merops orientalis*


இளம் பறவை



**உருவ அளவு:** 16-18 செ.மீ. **அங்க அடையாளம்:** உடல் பச்சை நிறம். தொண்டை நீலமும் பச்சையும் கலந்த நிறத்துடன் இருக்கும். கழுத்தில் ஆரம் போன்ற கருப்பு வளையம் இருக்கும். தலையும் பிடறியும் செம் பழுப்பு நிறம். இளம் பறவைகளுக்கு ஊசிவாலும் கருப்பு வளையமும் காணப்படும். தலையில் செம்பழுப்பு நிறம் இருக்காது. **பண்புகள்:** ஆற்றங்கரைச் சரிவுகளிலும், அது போன்ற இடங்களிலும் மண்ணைக் குடைந்து கூடு கட்டும். மாலை வேளைகளில் அடைவதற்கு முன் கூட்டமாகப் பறந்து திரியும். அடையும் போது கிளைகளில் நெருக்க மாக அமர்ந்திருக்கும். மின்கம்பிகளில் தலையை அங்குமிங்கும் திருப் பிப் பார்த்துக்கொண்டு இருக்கும். காற்றில் பறக்கும் பூச்சிகளைக் கண் டால் சட்டெனப் பறந்து சென்று பிடித்து மீண்டும் அதே இடத் துக்கே வந்து அமர்ந்து அதை உண்ணும். **உணவு:** தேனீ, வண்ணத்துப் பூச்சி, தட்டான், பூச்சிகள் போன்றவை. **வாழிடம்:** திறந்தவெளிகள், புதர்க்காடுகள், வயல்வெளிகள் முதலிய இடங்களில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும். **இராமநாதபுரம் மாவட்டத்தில் வழங் கப்படும் பெயர்:** பஞ்சிட்டான்


கூட்டில்





# நீலவால் பஞ்சுருட்டான்
## Blue-tailed Bee-eater
*Merops philippinus*





**உருவ அளவு:** 23-26 செ.மீ. **அங்க அடையாளம்:** பஞ்சுருட்டானை விட உருவில் பெரியது. வாலின் நடுச்சிறகு கம்பிபோல் நீட்டிக்கொண்டிருக்கும். அலகு கருப்பு, அலகின் நீளத்தை ஒத்த கண்களின் பின்னே வரை செல்லும் மையிட்டது போன்ற கருப்புப் பட்டை காணப்படும். அலகுக்குக் கீழே மஞ்சளும், தொண்டை செம்பழுப்பிலும், இறக்கைகள் பச்சையும், வாலும் வாலின் அடிப்பகுதி நீல நிறத்திலும் இருக்கும். **பண்புகள்:** தென்கிழக்கு ஆசிய நாடுகளில் கூடமைக்கும். இந்தியாவில் வடக்கு ஆந்திராவிலும், மகாராஷ்டிராவிலும் இவை கூடமைப்பது பதிவுசெய்யப்பட்டுள்ளது. எனினும் இவை தென்னிந்தியாவுக்கு ஜூலை-ஆகஸ்டு மாதங்களில் வலசைவரும். மீண்டும் மார்ச்-ஏப்ரல் மாதங்களில் வடக்கு நோக்கி வலசைபோகும். சில இளம் பறவைகள் ஆண்டு முழுவதும் இங்கேயே தங்கிவிடுவதும் உண்டு. **உணவு:** தட்டான்கள், வண்ணத்துப்பூச்சி, தேனீக்கள், பறக்கும் பிற பூச்சிகளைக் காற்றில் பறந்து சென்று பிடித்து பின்னர் மரக்கிளைகளிலோ, மின்கம்பிகளிலோ வந்தமர்ந்து உண்ணும். **வாழிடம்:** பொதுவாக நீர்நிலைகள் உள்ள பகுதிகள், வயல்வெளிகளில் அதிகம் கூட்டமாகத் தென்படும்.




# பனங்காடை
## Indian Roller
## *Coracias benghalensis*




***உருவ அளவு:*** *33 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *தலை, இறக்கைகள், வால், வயிறு ஆகியவை நீல நிறம். பிடரி, முதுகு, மார்பு ஆகியவை பழுப்பு நிறம். தொண்டையிலும், கன்னங்களிலும் வெள்ளை நிறக் கீற்றுகள் இருக்கும். பருத்த அலகைக் கொண்டது. பறக்கும் போது இள நீல இறக்கைகளில் கருநீலப் பட்டைகள் இருப்பது தெளிவாகத் தெரியும்.* ***பண்புகள்:*** *மொட்டைப் பனை மரத்தின் உச்சியில், மின்கம்பிகளில் அமர்ந்திருப்பதைக் காணலாம். பெண் துணையைக் கவர ஆண் பனங்காடை உயரப் பறந்து அந்தரத்தில் குட்டிக்கரணம் அடிப்பது போல பறக்கும். கரகரவென்ற குரலால் உரத்த சத்தம் எழுப்பும். பெரும்பாலும் தரையில் இரை தேடும்.* ***உணவு:*** *பலவகையான பூச்சிகள், வெட்டுக்கிளிகள், கறையான், வண்டுகள், குளவி, தேள், சிலந்தி, எறும்பு, பூரான், பல்லி, பாம்பு, தவளை, எலிகள் போன்றவை.* ***வாழிடம்:*** *திறந்த புல்வெளிகளிலும், வயல்வெளிகளிலும், புதர்க்காடுகளிலும் பரவலாகக் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.*





# செம்மார்புக் குக்குறுவான்
## Coppersmith Barbet
## Psilopogon haemacephalus





இளம் பறவை

**உருவ அளவு:** 17 செ.மீ. **அங்க அடையாளம்:** சிட்டுக்குருவியைவிடச் சற்றுப் பெரிய பறவை. உடல் பச்சை நிறத்தில் இருக்கும். மார்பும் நெற்றியும் சிவப்பு நிறத்தில் இருக்கும். தொண்டை மஞ்சள் நிறம். கண்களின் மேலும்கீழும் முழுமையடையாத வட்ட வடிவம், மஞ்சள் நிறத்தில் இருக்கும். மார்புக்குக் கீழும், வயிறும் பச்சையும் மஞ்சளும் கலந்த நிறத்தில் இருக்கும். அதில் பச்சை நிறக் கோடுகள் இருக்கும். இளம் பறவைகளுக்கு மார்பிலும், நெற்றியிலும் சிவப்பு நிறம் இருக்காது. அலகு தடிமனாக இருக்கும். **பண்புகள்:** அலகைத் திறக் காமலேயே குக்..குக்..குக் என தொடர்ந்து கத்தும். ஆனால், அது கத்தும் போது தொண்டை உள்ளேயும் வெளியேயும் சென்று வரு வதையும், உடல் அசைவதையும் காணலாம். இப்பறவையின் குரலை எளிதில் கேட்கலாம் ஆனால், மரக் கிளைகளினூடே அமர்ந் திருக்கும் இவற்றைப் பார்ப்பது சற்றுக் கடினம். மரத்தில் பொந்து குடைந்து அதில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். **உணவு:** பழங் களைக் குறிப்பாக ஆலம்பழம், அரசம்பழம் போன்றவற்றை விரும்பி உண்ணும். சில சமயம் கறையான்கள் சிறு பூச்சிகள் போன்றவற்றை யும் உண்ணும். **வாழிடம்:** ஊர்ப்புறங்கள், புதர்க்காடுகள், அடிவாரக் காடுகள், மலைப்பகுதிகள் போன்ற பகுதிகளில் காணலாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# ஊர் மரங்கொத்தி
# Black-rumped Flameback
# *Dinopium benghalense*

***உருவ அளவு:*** 26-29 செ.மீ. ***அங்க அடையாளம்:*** முதுகு பொன் நிற மாகவும், கீழ்முதுகு கறுப்பாகவும், வயிற்றுப் பகுதி கருப்பு வெள் ளைத் திட்டுகளுடனும், வால் கறுப்பாகவும் இருக்கும். பிடரி கருப்பு நிறம். தொண்டை கறுப்பாகவும், அதில் சிறிய வெள்ளைப் புள்ளிகளும் இருக்கும். நீண்ட கூரான உளி போன்ற உறுதியான கருப்பு அலகு கொண்டது. கண்களின் மேல் தடித்த வெள்ளைப் பட்டை இருக்கும். கண்களுக்குக் கீழ் ஆரம்பிக்கும் வெள்ளைப் பட்டை கழுத் தின் பக்கவாட்டிலும் மார்பிலும் தொடரும். ஆண் பறவைக்கு உச்சந் தலையில் சிவப்பு நிற இறகுகள் காணப்படும். பெண் பறவைக்கு நெற்றியும் தலையின் முன்பகுதி கருப்பு வெள்ளைப் புள்ளிகளைக் கொண்டும், பின்பகுதி சிவப்பு நிற இறகுகளும் இருக்கும்.

***பண்புகள்:*** தனியாகவோ, ஜோடியாகவோ மரத்துக்கு மரம் தாவிப் பறந்து இரை தேடும். மரக் கிளைகளில் அல்லது பட்டுப்போன மரங் களில் தமது உறுதியான உளி போன்ற அலகால் வேகமாகக் கொத்தி, துளைபோட்டு தமது நீண்ட மெல்லிய நாக்கை உள்ளே விட்டு அத னுள் இருக்கும் புழு பூச்சிகளைப் பிடித்துத் தின்னும். பறக்கும் போது அலைபோல உயர்ந்தும் தாழ்ந்தும் செல்லும். மரத்தின் நடுப்பகுதியில் சென்று தமது கூரான விரல் நகத்தினால் பற்றிக்கொண்டு தொற்றியபடி மேலே செல்லும். சில நேரங்களில் மின்கம்பங்கள்மீதும் இவை இப் படி ஏறுவதைக் காணலாம். மரங்களில் பொந்து குடைந்து முட்டை யிட்டுக் குஞ்சுகளை வளர்க்கும். இவை குடைந்த மரப் பொந்து களில் இவை போன பிறகு மைனா, கிளி போன்ற பறவைகள் வந்து கூட மைக்கும்.

***உணவு:*** எறும்புகள், வண்டுகளின் இளம் புழுக்கள், சிலந்திகள், கம்பளிப்புழுக்கள் சில நேரங்களில் பழங்கள் போன்றவற்றை உண்ணும். மலரில் உள்ள தேனையும் குடிக்கும்.

***வாழிடம்:*** தோட்டங்கள், மரங்கள் அடர்ந்த மனிதர்கள் வாழும் பகுதி கள், வனப்பகுதிகளிலும் காணப்படும்.

ஆண்டு முழுவதும் காணப்படும்.

# பச்சைக்கிளி
# Rose-ringed Parakeet
# Psittacula krameri







***உருவ அளவு:*** *42 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *உடல் முழுவதும் பச்சை நிறம். கொட்டைகளைக் கொறிப்பதற்கு ஏற்ற விதத்தில் வளைந்த, உறுதியான சிவந்த அலகை உடையது. ஆண் கிளிக்கு மட்டும் கழுத்தைச் சுற்றிக் கருப்பு மற்றும் இளஞ்சிவப்பு நிற வளையம் இருக்கும். வால் சிறகுகளின் நடுவில் நீலம் கலந்த பச்சை நிறத்திலும், ஓரங்களில் மஞ்சள் கலந்த பச்சை நிறத்திலும் இருக்கும்.* ***பண்புகள்:*** *பொதுவாகக் காலையிலும் மாலையிலும் சிறு கூட்டமாகக் கத்திக்கொண்டே வேகமாகப் பறந்து திரிவதைக் காணலாம். மரங்களில் உள்ள பொந்துகளில் கூடமைக்கும்.* ***உணவு:*** *பெரும்பாலும் பழங்கள், தானியங்கள், விதைகள், கொட்டைகள் போன்றவை.* ***வாழிடம்:*** *இவை ஊர்ப்புறங்களிலும், மரங்கள் அடர்ந்த பகுதிகளிலும் தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.*





# ஆறு மணி குருவி
## Indian Pitta
## *Pitta brachyuran*




**உருவ அளவு:** 19 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி பச்சையாகவும், கீழ்ப்பகுதியும் தலையும் பழுப்பு கலந்த மஞ்சள் நிறமாகவும் இருக்கும். தோள்பட்டையிலும், கீழ்முதுகிலும் இளநீல நிறமும், கண்களுக்குப் பின் மையிட்டது போல கருப்புப் பட்டை இருக்கும். கண்களின் மேல் மெல்லிய வெள்ளைப் புருவம் காணப்படும். தொண்டை வெள்ளையாக இருக்கும். உச்சந்தலையில் வகிடு எடுத்தது போல கருப்புக் கோடு இருக்கும். குட்டையான வாலின் அடிப்பகுதி சிவப்பு. பறக்கும் போது முதன்மைச் சிறகுகள் கறுப்பாகவும் அதில் வெள்ளைத் திட்டு இருப்பதையும் காணலாம். **பண்புகள்:** பொதுவாகத் தரையில் தாவித்தாவிச் சென்று இலைச் சருகுகளைத் தமது அலகால் திருப்பி அடியில் உள்ள பூச்சிகளைப் பிடித்து உண்ணும். இது இமயமலைப் பகுதிகளிலிருந்து தென்னிந்தியாவுக்கு செப்டம்பர்-அக்டோபரில் வலசைவரும். மீண்டும் ஏப்ரல்-மே மாதங்களில் வடக்கு நோக்கி வலசைபோகும். அந்தி சாயும் வேளையிலும், அதிகாலையிலும் இரண்டு சுரங்களைக் கொண்ட (விசிலடிப்பது போல்) குரலெழுப்பும். **உணவு:** பூச்சிகள், குறிப்பாகக் கறையான்கள், எறும்புகள், மண்புழுக்கள், போன்றவை. **வாழிடம்:** வனப்பகுதிகள், மரங்களடர்ந்த கிராமப்புறங்களில்கூடக் காணலாம்.





# மாங்குயில்
# Indian Golden Oriole
# *Oriolus kundoo*










**உருவ அளவு:** 25 செ.மீ. **அங்க அடையாளம்: ஆண்:** உடலின் மேலும் கீழும் மஞ்சளாகவும், இறக்கைகள் கறுப்பாகவும் இருக்கும். கண்களைச் சுற்றி கருப்பு நிறம் இருக்கும். வாலின் நடுவில் உள்ள சிறகுகள் கறுப்பாகவும், ஓரத்தில் உள்ள சிறகுகள் மஞ்சளாகவும் இருக்கும். அலகு இளஞ்சிவப்பு நிறம். **பெண்:** இளம்பச்சையும் மஞ்சளும் கலந்த நிறத்தில் இருக்கும். இறக்கைகள், வால், கண்களுக்கு அருகில் உள்ள திட்டு ஆகியவை வெளிறிய கருப்பு நிறத்தில் இருக்கும். மார்பில் மெல்லிய கருப்பு வரிகள் இருக்கும். அலகு இளஞ்சிவப்பு நிறம். இளம் பறவை, பெண் பறவையை ஒத்திருக்கும். ஆனால், அலகு கறுப்பாக இருக்கும். **பண்புகள்:** இது குயிலினத்தைச் சேர்ந்த பறவை அல்ல. தென்னிந்தியாவுக்கு அக்டோபர்-நவம்பரில் இந்தியாவின் வட பகுதிக்கும் அதற்கு மேலேயிருந்தும் வலசைவரும். மீண்டும் மார்ச்-ஏப்ரலில் வலசைபோகும். சில பறவைகள் ஆண்டு முழுவதும் இங்கேயே தங்கிவிடும். மரங்களினூடே இருந்து இரை தேடும். **உணவு:** பூச்சிகள், பழங்கள் போன்றவை. **வாழிடம்:** வனப்பகுதிகள், மரங்களடர்ந்த பகுதிகளில் காணலாம்.









# காட்டுக்கீச்சான்
## Common Woodshrike
## *Tephrodornis pondicerianus*




***உருவ அளவு:*** *18 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *உடலின் மேல்பகுதி அடர்ந்த சாம்பல் நிறமும், கீழ்ப்பகுதி வெள்ளையும், வெளிறிய சாம்பல் நிறமும் காணப்படும். அலகு கருப்பு. மேல்அலகு முனையில் கொக்கி போல் கீழ்நோக்கி வளைந்திருக்கும். கண்களின் மேல் அடர்த்தியான வெள்ளைப் புருவமும், கண்களை ஒட்டி மையிட்டது போல் கருப்புப் பட்டையும் இருக்கும். இளம் பறவை நிறம் மங்கியும், வெள்ளைத் திட்டுகளையும் கொண்டிருக்கும்.* ***பண்புகள்:*** *தனியாகவோ, சிறு கூட்ட மாகவோ மரங்களில், புதர்களில் கத்திக்கொண்டே இரை தேடும். பொதுவாக மற்ற பூச்சிகளை உண்ணும் பறவைகளுடன் குழுவாகச் சேர்ந்து மரத்துக்கு மரம் தாவிப் பூச்சிகளைப் பிடித்து உண்ணும். பொதுவாகத் தரையிலிருந்து சுமார் 6 மீ. உயரத்துக்குள்ளேயே கவை போன்ற மரக்கிளையில் கிண்ண வடிவில் சிறு குச்சிகளையும், சிலந்தி வலைகளையும் கொண்டு கூடு கட்டும்.* ***உணவு:*** *எல்லா வகையான பூச்சிகளையும் உண்ணும்.* ***வாழிடம்:*** *புதர்க்காடுகள், இலையுதிர் காடுகள், மரங்களடர்ந்த கிராமப்புறங்களிலும் காணலாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.*





# மாம்பழச்சிட்டு
## Common Iora
## *Aegithina tiphia*






ஆண் இனப்பெருக்க கால தோற்றம்

***உருவ அளவு:*** 14 செ.மீ. ***அங்க அடையாளம்: ஆண்:*** பச்சையும் மஞ்சளும் கலந்த நிறத்தில் இருக்கும். இறக்கைகளில் வெள்ளைப் பட்டைகள் இருக்கும். இந்நிலையில் இது பெண் பறவையை ஒத்திருக்கும். ஆனால், வால் கறுப்பு நிறம். முதிர்ந்த இனப்பெருக்கக் காலத்தில் ஆணின் தலை, பிடரி யாவும் கறுப்பாகவும், இறக்கைகளிலும் கறுப்பு நிறம் சற்றுக் கூடுதலாகவும் இருக்கும். **பெண்:** பச்சையும் மஞ்சளும் கலந்த நிறத்தில் இருக்கும். இறக்கைகளில் வெள்ளைப் பட்டைகள் இருக்கும். வால் இளம்பச்சை கலந்த மஞ்சள் நிறத்தில் இருக்கும். ***பண்புகள்:*** மரங்கள், புதர்களுக்குள் இருந்து கொண்டு பூச்சிகளைப் பிடித்து உண்ணும். பொதுவாக ஜோடியாகவே திரியும். சீழ்க்கை ஒலியைப் போல அவ்வப்போது குரலெழுப்பும். ***உணவு:*** பூச்சிகளே முக்கிய உணவு. ***வாழிடம்:*** மரங்கள் நிறைந்த தோட்டங்கள், வனப் பகுதிகள் போன்ற இடங்களில் காணப்படும்.







# வெண்வால் மாம்பழச்சிட்டு
## Marshall's Iora
## *Aegithina nigrolutea*







***உருவ அளவு:*** 14 செ.மீ. ***அங்க அடையாளம்:*** மாம்பழச்சிட்டுப் போலவே இருக்கும். ஆனால் ஆண், பெண் இரண்டுக்குமே வாலில் கருப்பு, வெள்ளை நிறங்கள் காணப்படும். இறக்கைகளில் வெள்ளைத் திட்டுகள் அவற்றைவிட சற்று அதிகமாகவே இருக்கும். ***ஆண்:*** இளம் பருவத்தில் உடல் பச்சையும் மஞ்சளும் கலந்த நிறத்தில் இருக்கும். இறக் கைகளில் வெள்ளைப் பட்டைகள் இருக்கும். இந்நிலையில் இது பெண் பறவையை ஒத்திருக்கும். முதிர்ந்த இனப்பெருக்கக் காலத்தில் ஆணின் தலை கறுப்பாக இருக்கும். ஆனால் மாம்பழச்சிட்டுக்கு இருப்பது போல் பிடரியில் கருப்பு நிறம் இன்றி மஞ்சள் நிறமாக இருக்கும். முது கிலும் மஞ்சள் சிறகுகள் இருப்பதைக் காணலாம். ***பெண்:*** பச்சையும் மஞ்சளும் கலந்த நிறத்தில் இருக்கும். இறக்கைகளில் வெள்ளைத் திட்டுகள் இருக்கும். ***பண்புகள்:*** மாம்பழச்சிட்டின் பண்பை ஒத்திருக் கும், அவை வாழுமிடங்களிலும் இவை இருக்கும். ஆகவே இவற்றை சற்று கவனமாகப் பார்த்து அடையாளம் காண வேண்டும். ***உணவு:*** பூச்சிகளே முக்கிய உணவு. ***வாழிடம்:*** வறண்ட சமவெளிப்பகுதி களில், புதர்க்காடுகளில், தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.








# கரிச்சான்
## Black Drongo
## *Dicrurus macrocercus*






***உருவ அளவு: 28*** செ.மீ. ***அங்க அடையாளம்:*** பிளவுபட்ட வாலைக் கொண்ட கருப்பு நிறப் பறவை. அலகு தொடங்கும் இடத்தில் வெள்ளைப் புள்ளி இருக்கும். இளம் பறவையின் வயிற்றுப் பகுதி வெள்ளைத் திட்டுகளுடன் காணப்படும். உருவத்தில் இதை ஒத்த தோற்றமுடைய வலசைவரும் சாம்பல் கரிச்சனுக்கு அலகின் அருகே வெள்ளைப் புள்ளி இருக்காது, கண்கள் சிவப்பாக இருக்கும். ***பண்புகள்:*** பிற பறவைகளைப் போலவே குரலெழுப்பக் கூடியது. மிகவும் தைரிய சாலி. இதைவிட உருவில் பெரிய பறவைகளையும் விரட்டியடிக்கும். இரவு நேரங்களில் தெரு விளக்குகளின் அருகில் அமர்ந்து அங்கு வரும் பூச்சிகளைப் பிடிக்கும். பெரும்பாலும் மின்கம்பிகளிலும், கால்நடைகள்மீதும் கரிச்சான்கள் உட்கார்ந்திருப்பதைக் காணலாம். கால்நடைகள் மேய்ந்துகொண்டிருக்கும் போது மண்ணிலிருந்தும், தாவரங்களில் இருந்தும் வெளிவரும் பூச்சிபுழுக்களை இவை பறந்தும், தாவியும் பிடித்து உண்ணும். ***உணவு:*** பெரும்பாலும் பூச்சிகளே முக்கிய உணவு. ***வாழிடம்:*** திறந்த வெளிகள், புதர்க்காடுகள், ஊர்ப்புறங்கள் போன்ற இடங்களில் காணப்படும். இதை இரட்டைவால் குருவி என்றும் அழைப்பார்கள்.







# வேதிவால் குருவி
## Indian Paradise-Flycatcher
*Terpsiphone paradisi*


ஆண்


ஆண்


பெண்

**உருவ அளவு:** 20 செ.மீ. **அங்க அடையாளம்: ஆண்:** தோற்றத்தின் அடிப்படையில் இரண்டு வகைகள் உண்டு. உடலும் வால் இறகுகளும் வெள்ளை நிறத்திலும், தலை கருப்பு நிறத்திலும் இருக்கும். மற்றொன்று செம்பழுப்பு நிறத்தில் மேல்உடலையும், வால் இறகுகளையும் உடையது. உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை. **பெண்:** உடலின் மேல்பகுதி செம்பழுப்பு நிறத்திலும், தலை கறுப்பாகவும், தொண்டை, மார்பு வெளிர் சாம்பல் நிறத்திலும், வயிறு, வாலின் அடிப்பகுதி வெள்ளை நிறத்திலும் இருக்கும். ஆணுக்கு உள்ளது போல் இவற்றுக்கு நீண்ட வால் இறகுகள் இருக்காது. **பண்புகள்:** ஆண் பறவை நீண்ட வாலிறகு உடையது. அது பறக்கும் போது நீண்ட வால் அசைந்தாடிச் செல்வது காண்போரை எளிதில் கவரும். மரத்தில் உள்ள கவை போன்ற கிளையில் கிண்ண வடிவில் கூடு கட்டும். இவற்றில் செம்பழுப்பு தோற்ற வகை தென்னிந்தியாவில் ஆண்டு முழுவதும் தென்படும். ஆனால், வெள்ளை தோற்ற வகை வட இந்தியாவிலிருந்து அக்டோபர்-நவம்பரில் வலசைவந்து ஏப்ரல்-மே மாதங்களில் வாசலைபோகும் என அறியப்படுகிறது. **உணவு:** பூச்சிகள், வண்ணத்துப்பூச்சிகள், அந்துப் பூச்சிகள், சிலந்திகள் போன்றவை. **வாழிடம்:** அடர்ந்த காடு கள், திறந்த வெளிக் காடுகள், தோட்டங்கள் போன்ற மரங்கள் அடர்ந்த பகுதிகளில் காணப்படும்.


ஆண்


இளம் பறவை



# பழுப்புக் கீச்சான்
## Brown Shrike
## *Lanius cristatus*





**உருவ அளவு:** 18-19 செ.மீ. **அங்க அடையளம்:** உடலின் மேல்பகுதி, உச்சந்தலை, வால் ஆகியவை பழுப்பு நிறம். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை நிறம். கண்ணின் மேல் மெல்லிய வெள்ளைப் புருவமும், அலகிலிருந்து கண்ணின் பின்பகுதிவரை கண்ணாடி போட்டது போல் கருப்பு நிறப் பட்டையும் இருக்கும். இளம் பறவைகளின் மார்பில் நெளிநெளியான பழுப்பு நிற வரிகள் இருக்கும். பருத்த அலகும், அதின் மேல்நுனி கீழ்நோக்கி கொக்கிப் போல வளைந்திருக்கும். **பண்புகள்:** பூமியின் வடபகுதியில் இருந்து தென்னிந்தியாவுக்கு அக்டோபர்-நவம்பரில் வலசைவந்து மீண்டும் ஏப்ரல்-மே மாதங்களில் வந்த இடத்துக்கே வலசைபோகும். இரையைப் பிடித்து முட்கள் உள்ள கிளைகளில் குத்திவைத்து பிய்த்து உண்ணும். **உணவு:** பொதுவாகப் பூச்சிகள், சிறு பாலூட்டிகள், பல்லிகள், தவளைகள், சிறு பறவைகள் போன்றவை. **வாழிடம்:** வறண்ட புதர்க்காடுகள், மரங்களடர்ந்த காடுகளின் ஓரங்கள், புல்வெளிகள், ஊர்ப்புறங்கள் போன்ற இடங்களில் காணப்படும்.









# சின்னக் கீச்சான்
## Bay-backed Shrike
## *Lanius vittatus*






***உருவ அளவு:*** *17 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *உச்சந்தலையும் பிடரியும் சாம்பல் நிறம், முதுகு அரக்கு நிறத்தில் இருக்கும். கீழ்முதுகு வெள்ளை நிறம். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை நிறம். இறக்கைகள் மடக்கிவைக்கப்பட்ட நிலையில், கறுப்பாகக் காணப்படும், ஆனால், பறக்கும் போது முதன்மைச் சிறகுகளில் உள்ள வெள்ளைத் திட்டு தெளிவாகத் தெரியும். முகத்தில் கண்ணாடி போட்டது போல நெற்றியிலும், கண்ணின் பின்பகுதியிலும் கருப்பு நிறப் பட்டை காணப்படும். உடலின் பக்கவாட்டில் வெளிறிய செம்பழுப்பு நிறம் இருக்கும். இளம் பறவைகளின் நிறம் மங்கலாகவும், வெள்ளைத் திட்டுகளுடனும் காணப்படும்.* ***பண்புகள்:*** *புதர்களின், சிறு மரங்களின் உச்சியிலும், வேலி, மின்கம்பங்களிலும் அமர்ந்திருப்பதைக் காணலாம். கரகரத்தக் குரலில் ஒலியெழுப்பும். இனப்பெருக்கக் காலங்களில் ஆண் பறவை மற்ற பறவைகளைப் போலவே குரலெழுப்பும்.* ***உணவு:*** *பெரும்பாலும் பூச்சிகள், பல்லிகள் முதலியவை.* ***வாழிடம்:*** *ஆங்காங்கே மரம், செடிகொடிகள் உள்ள வறண்ட திறந்தவெளிகளிலும், புல்வெளிகளிலும், புதர்க்காடுகளிலும் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.*





# வால் காக்கை
# Rufous Treepie
# *Dendrocitta vagabunda*





**உருவ அளவு :** 46-50 செ.மீ. **அங்க அடையாளம்:** தலை, முழுவதும் கறுப்பாகவும், முதுகு, வயிறு ஆகியவை பாக்கு நிறத்திலும் இருக்கும். இறக்கைகளில் கருப்பு, வெள்ளை நிறப் பட்டைகள் காணப்படும். வால் வெள்ளை அல்லது வெளிர் சாம்பல் நிறத்திலும், நுனி கருப்பு நிறத்திலும் இருக்கும். **பண்புகள்:** பொதுவாக மரத்தின் உச்சியில் அமர்ந்திருப்பதைக் காணலாம். அலைபோல மேல்நோக்கிப் பறந்து பின்னர் கீழிறங்கி இறக்கையைப் படபடவென அடித்துப் பறந்து செல்லும். கரகரத்தக் குரலில் கத்தும். சில நேரங்களில் மற்ற பறவை களோடு சேர்ந்து இரை தேடும். **உணவு:** இது ஒரு அனைத்துண்ணி. பழங்கள், பூச்சிகள், தவளைகள், சிறிய பறவைகள், இறந்த விலங்குகள் ஆகியவை. **வாழிடம்:** புதர்க்காடுகள், இலையுதிர் காடுகள், மரங்கள் அடர்ந்த ஊர்ப்புறங்கள், தோட்டங்களிலும் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# காகம்
## House Crow
## *Corvus splendens*





பறவையை உண்ணும் காகம்

**உருவ அளவு:** 40 செ.மீ. **அங்க அடையாளம்:** பின்கழுத்தும் வயிறும் சாம்பல் நிறத்திலும் மற்றப் பகுதிகள் கறுப்பாகவும் இருக்கும். (அண்டங் காக்கை உடல் முழுவதும் கறுப்பாகவும் பெரிய அலகுடனும் இருக்கும்.) **பண்புகள்:** கூட்டம்கூட்டமாகக் காணப்படும். மனிதர்களை அண்டி வாழ்வதால் மனிதர்கள் வசிக்கும் இடங்களில் காணப்படும். புத்திக் கூர்மையுடையது. மரக்குச்சிகளோடு சிறுசிறு இரும்புக் கம்பிகளையும் வைத்து கூடு கட்டும். குயில் (Asian koel) காகத்தின் கூட்டில்தான் முட்டையிடும். குயிலின் குஞ்சுகளைக் காகம்தான் இரை ஊட்டி வளர்க் கும். **உணவு:** அனைத்துண்ணி. சிறு பறவைகளையும், மற்ற பறவைகளின் முட்டைகளையும் கூட உண்ணும். குப்பைகளில் உண்ணக்கூடியவற்றை யும், செத்துக்கிடக்கும் எலிகளையும் தின்று சுற்றுப்புறத்தைத் தூய்மை யாக வைத்திருக்க உதவும். **வாழிடம்:** மனிதர்களை அண்டி வாழ்வ தால் மனிதர்கள் வாழும் இடங்களிலும் விவசாய நிலங்களிலும் காணப் படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.



இளம் பறவை





# அண்டங்காக்கை
# Large-billed Crow
# *Corvus macrorhynchos*





பெருச்சாளியை உண்ணும் அண்டங்காக்கை

***உருவ அளவு:*** 41 செ.மீ. ***அங்க அடையாளம்:*** அளவில் காகத்தைவிடப் பெரியது. உடல் முழுவதும் பளபளக்கும் கருமை நிறமுடையது. நீண்ட தடித்த அலகை உடையது. **பண்புகள்:** இது ஒரு சிறந்த துப்புர வாளர். இறந்த விலங்குகளைத் தின்று சுற்றுப்புறத்தைத் தூய்மையாக வைத்திருக்க உதவும். பிற பறவைகளின் கூடுகளிலிருந்து முட்டை களையும் குஞ்சுகளையும்கூட உண்ணும். தனியாகவோ, சிறு கூட்ட மாகவோ பறந்து திரியும். காகங்களுடன் சேர்ந்து இரை தேடும். இதன் கூட்டிலும் குயில் வந்து முட்டையிடும். அதன் குஞ்சுகளை அண்டங்காக்கை இரையூட்டி வளர்க்கும். **உணவு:** இது ஒரு அனைத் துண்ணி. இறந்த விலங்குகள், பூச்சிகள், ஊர்வன, பிற பறவைகளின் குஞ்சுகள் முதலியவை. **வாழிடம்:** அடர்ந்த காடுகளிலும், ஊர்ப்புறங் களிலும், மரங்கள் நிறைந்த நகரப் பகுதிகளிலும் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.








# தெற்கத்தி புதர்பாடி
## Jerdon's Bushlark
## *Mirafra affinis*





**உருவ அளவு:** 14 செ.மீ. **அங்க அடையாளம்:** உடலின் மேல்பகுதி அடர் பழுப்பு நிறத் திட்டுகளையும், கீழ்ப்பகுதி வெளிறிய பழுப்பு நிறத்திலும், மார்பில் புள்ளிகளையும் கொண்டிருக்கும். தலையில் அடர் பழுப்புப் புள்ளிகளும், கண்களுக்கு மேல் மெல்லிய வெள்ளைப் புருவமும் அது கண்களுக்குப் பின்னாலும் நீண்டு பின் கீழிறங்கி கன்னத்தைச் சுற்றிக்கொண்டு அலகு ஆரம்பிக்கும் இடத்துக்கு வந்து முடியும். இதனுள் இருக்கும் காதோரத் தூவிகள் பழுப்பு கலந்த மஞ்சள் நிறமாக இருக்கும். இறக்கையை மடக்கிவைத்திருக்கும் நிலையில் பக்கவாட்டில் செங்கல் சிவப்பு நிறம் இருப்பது தெரியும். குட்டையான கால்களும், பின்விரலில் நீண்ட நகமும் இருக்கும். **பண்புகள்:** புதர்களின் உச்சி, பாறை, மின்கம்பிகளில் அமர்ந்திருக்கும். ஆண் பறவைகள்,பெண் பறவைகளைக் கவர்வதற்காக உயரப் பறந்து தொடர்ந்து குரலெழுப்பிக்கொண்டே பாராசூட் போல இறக்கை களைக் குவித்துக்கொண்டு கீழிறங்கும். புதர்கள், புற்கள் அடர்ந்த பகுதியில் தரையில் உள்ள சிறு குழிகளில் கிண்ண வடிவ கூடு கட்டும். **உணவு:** புற்களின் விதைகள், சிறு பூச்சிகள் ஆகியவை. **வாழிடம்:** திறந்தவெளிப் புதர்க்காடுகள், புல்வெளிகளில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# வானம்பாடி
# Oriental Skylark
## *Alauda gulgula*




**உருவ அளவு:** 16 செ.மீ. **அங்க அடையாளம்:** தலையில் உள்ள இறகுகள் மேலே சிலிர்த்துக்கொண்டு சிறிய கொண்டை போலத் தோன்றும். உடலின் மேலே உள்ள இறகுகள் கரும்பழுப்பு நிறமாகவும் அவற்றின் விளிம்புகள் இளம் பழுப்பாகவும் இருக்கும். இதனால் மேல்உடல் முழுவதும் கருப்புப் புள்ளிகளும், திட்டுகளும் இருப்பதைப் போல தோற்றமளிக்கும். கழுத்து வெளிரியும் மார்பில் சிறிய கோடுகளும் இருக்கும். கூர்மையான அலகைக் கொண்டிருக்கும். **பண்புகள்:** வானில் உயரப் பறந்துகொண்டே இடைவிடாது பாடிக்கொண்டே இருக்கும். தரையில் அமர்ந்திருக்கும்போதுகூட மண் நிறத்தில் இருப்பதால் இவற்றைப் பெரும்பாலும் பார்க்க முடியாது. இவை பாடுவதை வைத்தே இருக்கும் இடத்தை அறிய முடியும். தரையில் உள்ள சிறு குழிகளில் புற்களை வைத்து கிண்ண வடிவில் கூடமைக்கும். **உணவு:** புற்களின், சிறு செடிகளின் விதைகள், சிறு பூச்சிகள் போன்றவை. **வாழிடம்:** வெட்ட வெளிகள், பரந்த புல்வெளிகள், விளைநிலங்கள், கடற்கரையோர மணல் திட்டுகள், சில நேரங்களில் மலையுச்சிப் பகுதிகள், பரந்த புல்வெளிகள் ஆகிய இடங்களில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# தையல்சிட்டு
## Common Tailorbird
## *Orthotomus sutorius*





***உருவ அளவு:*** 13 செ.மீ. ***அங்க அடையாளம்:*** கூர்மையான அலகும், தலை செம்பழுப்பு நிறமும், உடலின் மேல்பகுதி முழுவதும் பச்சையும் மஞ்சளும் கலந்த நிறமும். வயிற்றுப் பகுதி வெள்ளை நிறமும் காணப்படும். வாலை உயர்த்தியபடியே இருக்கும். இனப்பெருக்கக் காலத்தில் ஆண் பறவையின் வால் நீளமாக இருக்கும். தலையை உயர்த்தும் போது கழுத்தின் இருபுறமும் உள்ள கருப்புத் திட்டு தெரியும். இளம் பறவைகளுக்குத் தலை பச்சை நிறமாக இருக்கும். ***பண்புகள்:*** துருதுருவென செடிகளிலும், மரங்களிலும் தாவிக்கொண்டிருக்கும். சில நேரங்களில் உரக்கக் கத்திக்கொண்டிருப்பதைக் கேட்கலாம். பெரிய இலைகளை மடக்கி அவற்றின் விளிம்புகளை நார், நூல் போன்றவற்றால் தைத்துக் கூடு கட்டும். ***உணவு:*** சிறு புழுக்கள், பூச்சிகள், பூச்சிகளின் முட்டைகள், மலர்களில் உள்ள தேன் போன்றவற்றை உண்ணும். ***வாழிடம்:*** ஊர்ப்புறங்கள், தோட்டங்கள், வயல்வெளிகள், காடுகளின் ஓரங்களிலும் காணலாம். ஆண்டு முழுவதும் காணலாம்.








# சாம்பல் கதிர்க்குருவி
## Ashy Prinia
## *Prinia socialis*




இளம் பறவை



***உருவ அளவு:*** *13 செ.மீ.* ***அங்க அடையாளம்:*** *தலையும் முதுகும் அடர் சாம்பல் நிறம். இறக்கைகளும் வாலும் பழுப்பு நிறம். அலகு கருப்பு நிறம். கண்கள் சிவப்பு நிறம். உடலின் கீழ்ப்பகுதி லேசான ஆரஞ்சு நிறம். வாலின் மேலே இருக்கும் இறகு நீளமாகவும், அதற்குக் கீழே உள்ள இறகுகள் யாவும் ஒன்றுக்கு ஒன்று படிப்படியாக நீளம் குறைந்தும் காணப்படும். இதனால் வாலின் அடிப்பகுதியில் கருப்பு நிறத் திட்டுகள் இருப்பது போலத் தெரியும். சிறிய வெள்ளைப் புருவம் இருக்கும். இனப்பெருக்கக் காலத்தில் புருவம் இருக்காது. இளம் பறவையின் அலகு மஞ்சள் நிறத்தில் இருக்கும்.* ***பண்புகள்:*** *சிறிய புதர்ச்செடிகளில், நீர்நிலைகளின் ஓரங்களில் வளர்ந்திருக்கும் தாவரங்களிலும் உயரமான புற்களிலும், கோரைகளிலும் தாவித்தாவி வாலைச் சுழற்றிக்கொண்டே செல்லும். புனல் வடிவில் குச்சிகளைக் வைத்து கூடு கட்டும்.* ***உணவு:*** *பெரும்பாலும் பூச்சிகளை உண்ணும்.* ***வாழிடம்:*** *புதர்க்காடுகள், வயல்வெளிகள், ஓரளவுக்குத் தாவரங்கள் நிறைந்த குடியிருப்புப் பகுதிகள், கோரைபுற்கள் நிறைந்த நீர்நிலை களின் ஓரங்களில் தென்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.*







# விசிறிவால் கதிர்சிட்டு
## Zitting Cisticola
## *Cisticola juncidis*





***உருவ அளவு:*** 10 செ.மீ. ***அங்க அடையாளம்:*** சிறிய பறவை. உடலின் மேலே உள்ள இறகுகள் கரும்பழுப்பு நிறமாகவும் அவற்றின் விளிம்புகள் இளம் பழுப்பாகவும் இருக்கும். இதனால் மேல்உடல் முழுவதும் கருப்புப் புள்ளிகளும், திட்டுகளும் இருப்பதைப் போல தோற்றமளிக்கும். கண்களுக்கு மேலே மெல்லிய வெள்ளைப் புருவம் இருக்கும். உச்சந்தலையில் வரிவரியாக இருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளையாகவும், உடலின் பக்கவாட்டில் செம்பழுப்பு நிறமும் இருக்கும். வால் கரும்பழுப்பாகவும் வாலின் நுனிப்பகுதி வெள்ளையாகவும் இருக்கும். இவற்றை விரிக்கும் போது விசிறி போலத் தோற்றமளிக்கும். **பண்புகள்:** உயரப் பறந்து ஜிட்..ஜிட்..ஜிட்.. எனக் கத்திக்கொண்டே இருக்கும். பொதுவாக ஆண் பறவை இனப்பெருக்கக் காலங்களிலும், தமது கூட்டுக்கு அருகிலேயும் இப்படி அடிக்கடிச் செய்யும். பல நேரங்களில் கண்ணில் படாது. இவற்றின் குரல் மட்டுமே கேட்கும். ***உணவு:*** வெட்டுக்கிளிகள், சிறு பூச்சிகள், புழுக்கள், தட்டான்கள், சிலந்திகள், சில நேரங்களில் புற்களின் விதைகள் போன்றவை. ***வாழிடம்:*** விவசாய நிலங்கள், தரிசு நிலங்கள், வெட்டவெளிகள், புல்வெளிகள் ஆகிய இடங்களில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# வேலி கதிர்க்குருவி
## Blyth's Reed Warbler
## *Acrocephalus dumetorum*




***உருவ அளவு:*** 13 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடலின் மேல்பகுதி பச்சையும் பழுப்பும் கலந்த நிறத்தில் இருக்கும். உடலின் கீழ்ப்பகுதியும் இதே நிறத்தில் ஆனால் வெளுப்பாகக் காணப்படும். மேல்அலகு கறுப்பாகவும் கீழ்அலகு வெளிர் பழுப்பு நிறத்திலும் இருக்கும். கண்களின் மேல் மெல்லிய வெள்ளைப் புருவம் இருக்கும். ஆனால், இது கண்களைத் தாண்டி இருக்காது. வால் வட்ட வடிவில் பிளவு படாமல் இருக்கும். வாலின் அடிச் சிறகுகள் வாலின் பெரும் பகுதிவரை இருக்கும். **பண்புகள்:** ஒரே இடத்தில் இருக்காமல் புதர்களின் உள்ளே இருந்துகொண்டு தத்தித்தத்திச் சென்று தொடர்ந்து இரை தேடும். இவை பூமியின் வட பகுதிகளில் இருந்து செப்டம்பர்-அக்டோபரில் தென்னிந்தியாவுக்கு வலசைவரும். ஏப்ரல்-மே மாதங்களில் திரும்பி இங்கிருந்து வலசைபோகும். **உணவு:** பூச்சிகள், புழுக்கள், வண்டுகள் போன்றவை. **வாழிடம்:** இலையுதிர் காடுகள், திறந்தவெளிப் புதர்க் காடுகள், சற்றே மரங்களடர்ந்த மனிதர்கள் வாழும் பகுதிகளிலும் காணப்படும்.




# தகைவிலான்
## Barn Swallow
## *Hirundo rustica*





***உருவ அளவு:*** 18 செ.மீ. ***அங்க அடையாளம்:*** நெற்றியும், தொண்டையும் செம்பழுப்பு நிறம். உடலின் மேல்பகுதி பளபளப்பான கருநீல நிறத்தில் இருக்கும். கழுத்தில் இதே நிறத்தில் வளையம் இருக்கும். வயிறு வெள்ளை நிறம். வால் 'V' போல பிளவுபட்டிருக்கும். வால் இறகின் மையத் தண்டு கம்பிபோல் நீண்டிருக்கும். இது ஆண் பறவைகளுக்கு நீளமாக இருக்கும். இளம் பறவைகளின் நிறங்கள் வெளுத்தும், குட்டையான வால் சிறகுகளுடனும் இருக்கும். **பண்புகள்:** தரைக்கு அதிகம் வராமல் பறந்தபடியே பூச்சிகளைப் பிடித்து உண்ணும். சில நேரங்களில் மின்கம்பிகளில் வரிசையாக அமர்ந்திருப்பதைக் காணலாம். நீர்ப்பரப்பின் மேல் பறந்துகொண்டு வாயைப் பிளந்து அலகால் நீரை அள்ளிப் பருகும். இது தென்னிந்தியாவுக்கு ஆகஸ்டு-செப்டம்பரில் இமயமலைப் பகுதிகளில் இருந்து வலசைவரும். ஏப்ரல்-மே மாதங்களில் அவை வடக்கு நோக்கி வலசைபோகும். **உணவு:** பறக்கும் பூச்சிகள் அனைத்தையும் வானில் பறந்தபடியே பிடித்து உண்ணும். **வாழிடம்:** வெட்டவெளிகளிலும், வயற்புறங்களிலும், நீர்நிலைகளுக்கு அருகிலும் பறந்து திரியும்.







# செம்முதுகுத் தகைவிலான்
## Red-rumped Swallow
*Cecropis daurica*





**உருவ அளவு:** *16-17* செ.மீ. **அங்க அடையாளம்:** தலையின் பக்கங்களிலும், கீழ்முதுகும் சிவப்பு நிறம். இறக்கைகளின் மேல்பகுதி பளபளப்பான நீல நிறத்திலும் இறக்கைகளின் அடிப்பகுதி பழுப்பு நிறத்திலும் இருக்கும். உடலின் பெரும்பகுதி வெள்ளையாகவும் அவற்றில் மெல்லிய வரிகளும் இருக்கும். ஊசிபோன்ற நீண்ட பிளவு பட்ட வாலுடனும் இருக்கும். **பண்புகள்:** பெரும்பாலும் வானத்தில் பறந்து திரியும் சிறிய பறவை. சில வேளைகளில் வலசைவரும் தகைவிலான்களுடனும் சேர்ந்து பறந்துகொண்டிருக்கும். மின்கம்பிகளிலும் அமர்ந்துகொண்டிருக்கும். கூடமைக்கும் காலங்களில் இவை தரையில் தேங்கியிருக்கும் நீரின் கரையோரத்தில் சேற்றை தமது அலகால் எடுத்துச் சென்று கட்டடங்களின் மூலையில், பாறை இடுக்குகளில் சேர்த்து வைத்து ஒரு குடுவை போன்ற கூட்டைக் கட்டும். கூட்டில் வைப்பதற்காக உதிர்ந்த சிறகுகளையும் சேகரிக்கும். **உணவு:** பறக்கும் பூச்சிகள், பறக்கும் எறும்புகள், கறையான்கள் யாவற்றையும் பறந்துகொண்டே பிடித்து உண்ணும். **வாழிடம்:** வெட்டவெளிகளிலும், வயற்புறங்களிலும், மலைப் பகுதிகளிலும். கடற்கரைப் பகுதிகளிலும் காணலாம். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# சின்னான்
## Red-vented Bulbul
## *Pycnonotus cafer*





**உருவ அளவு:** 20 செ.மீ. **அங்க அடையாளம்:** தலையில் சிறிய கொண்டையுடன் கறுப்பாக இருக்கும். கீழ்முதுகும், வால் நுனியும் வெள்ளையாக இருக்கும். வாலின் அடிப்பகுதி குங்குமச் சிவப்பாக இருக்கும். ஆனால், இளம் பறவைக்குத் தலை பழுப்பு நிறமாகவும், வாலின் அடிப்பகுதியில் சிவப்பு நிறம் மட்டுமே இருக்கும். நுனியில் வெள்ளை நிறம் இருக்காது. **பண்புகள்:** ஜோடியாகவோ சிறு கூட்ட மாகவோ தென்படும். கிண்ண வடிவத்தில் கூடு கட்டும். **உணவு:** பொதுவாகப் பழங்களை விரும்பி உண்ணும். ஆனால், குஞ்சுகள் நன்றாக வளர பூச்சிகளைப் பிடித்து ஊட்டும். **வாழிடம்:** திறந்தவெளி புதர்க்காடுகள், இலையுதிர் காடுகள், மரங்கள் அடர்ந்த மனிதர்கள் வசிக்கும் பகுதிகள் போன்ற இடங்களில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# தவிட்டுக்குருவி
# Yellow-billed Babbler
## *Argya affinis*




**உருவ அளவு:** 23 செ.மீ. **அங்க அடையாளம்:** தலை வெள்ளை நிறம், அலகும் காலும் மஞ்சள் நிறம். உடல் முழுவதும் தவிட்டு நிறம். வாலும் இறக்கைகளும் முடியும் இடம் அடர் சாம்பல் நிறம். கண்கள் வெளிர் ஊதா நிறத்திலும், கண்மணி கறுப்பாகவும் இருக்கும். **பண்புகள்:** இவற்றை ஊர்ப்புறங்களிலும், வீடுகளுக்கு அருகிலும் கூட்டமாக (பொதுவாக 6-8 பறவைகள்) சுற்றித் திரிவதைக் காணலாம். இவை கத்திக்கொண்டே தரையில் தத்தித்தத்தியும், சிறகை அடிக்காமல் காற்றில் சிறிது தூரத்துக்குப் பறந்தும் இரை தேடும். கூட்டத்தில் உள்ள ஓரிரண்டு பறவைகள் ஏதேனும் ஆபத்து வருகிறதா என பார்த்துக்கொண்டே காவலாளியைப் போலச் செயல்படும். **உணவு:** வண்டுகள், வெட்டுக்கிளிகள், புழுக்கள், சிலந்திகள், தவளைகள், சிறு பல்லிகள், சிறு பழங்கள், தானியங்கள் முதலியவை. **வாழிடம்:** புதர்க்காடுகள், தோட்டங்கள், மனிதர்கள் வாழும் பகுதிகளில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.




# பாலை சிலம்பன்
## Common Babbler
## *Argya caudata*




***உருவ அளவு:*** 23 செ.மீ. ***அங்க அடையாளம்:*** பழுப்பு நிற உடலின் மேல்பகுதியிலும், உச்சந்தலையிலும் கரும்பழுப்பு வரிகள் இருக்கும். தொண்டை வெள்ளையாக இருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை யாகவும், பக்கவாட்டில் வெளிறிய செம்பழுப்பு நிறமாகவும் இருக் கும். நீண்ட வாலில் மெல்லிய வரிகள் இருக்கும். ***பண்புகள்:*** பெரும் பாலும் சிறு கூட்டமாகத் தென்படும். தரையிலும், புதர்களின் உள்ளே இருந்து குரல் எழுப்பிக்கொண்டே இரை தேடும். சுடலைக் குயிலும், அக்கா குயிலும் இதன் கூட்டில் முட்டையிட்டு சென்றுவிடும். அவற்றின் குஞ்சுகளை இவை இரை ஊட்டி வளர்க்கும். ***உணவு:*** பலவகையான பூச்சிகள், தானியங்கள் சிறு பழங்கள் போன்றவை. ***வாழிடம்:*** அடர்ந்த காட்டுப் பகுதிகளில் இருக்காது. வறண்ட புதர்க் காடுகள், புல்வெளிகள்,





# சூரமாறி
# Rosy Starling
# *Pastor roseus*






**உருவ அளவு:** 21 செ.மீ. **அங்க அடையாளம்:** மைனாவைப் போல இருக்கும் ஆனால், உடலில் ரோஜா நிறத்தைக் கொண்டிருக்கும். தலையும், கழுத்தும், மார்பும் கறுப்பாக இருக்கும். இறக்கைகளும், வாலின் அடிச் சிறகுகளும் கருப்பு நிறத்தில் இருக்கும். முதுகு, உடலின் கீழ்ப்பகுதி ரோஜா நிறம். இந்த இளஞ்சிவப்பு நிறம் முதிர்ந்த இனப்பெருக்கக் காலங்களில் பளிச்சென்றும் இருக்கும். இளம் பறவைகளின் உடல் இளம்பழுப்பு நிறத்திலும் இறக்கைகளில் கருப்புத் திட்டுகளும் இருக்கும். **பண்புகள்:** கூட்டம்கூட்டமாகப் பறந்து திரியும். நூற்றுக் கணக்கான பறவைகள் வானில் ஒன்று சேர்ந்து பறந்து, சட்டென திசைமாறிப் பறக்கும். இது மேகங்களைப் போல நொடிக்கொரு முறை வெவ்வேறு வடிவங்களை உருவாக்கும். இதை ஆங்கிலத்தில் *Murmuration* என்பர் செப்டம்பர்-அக்டோபரில் பூமியின் வடபகுதியில் இருந்து தென்னிந்தியாவுக்கு வலசைவரும். மார்ச்-ஏப்ரல் மாதங்களில் மீண்டும் அங்கேயே வலசைபோகும். **உணவு:** பூச்சிகள், பழங்கள், மலர்களின் தேன் போன்றவை. **வாழிடம்:** மரங்கள் நிறைந்த பகுதிகள், புல்வெளிகள், விவசாய நிலங்கள் முதலான பகுதிகளில் காணப்படும்.







# கருந்தலை மைனா
# Black-headed Starling
# *Sturnia pagodarum*





இளம் பறவை

**உருவ அளவு:** 21 செ.மீ. **அங்க அடையாளம்:** பார்ப்பதற்கு மைனா வைப் போல் இருக்கும். தலையும், பிடரியும் கருப்பு நிறம். உடல் வெளிரிய செம்பழுப்பு நிறமாக இருக்கும். உடலின் மேல்பகுதியும், இறக்கைகளும், வாலும், கருஞ்சாம்பல் நிறம். வாலின் நுனி வெள்ளை யாக இருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெளிரிய செம்பழுப்பு நிற மாகவும், அதில் வெள்ளைக் கோடுகளும் இருக்கும். மஞ்சள் நிற அலகின் பின்பாதி நீல நிறத்தில் இருக்கும். இளம் பறவைகள் சாம்பலும் பழுப்பும் கலந்த நிறத்தில் இருக்கும். **பண்புகள்:** பொது வாகச் சிறு கூட்டமாகப் பறந்து திரிந்து இரை தேடும். தரையில் மைனாக்களுடன் சேர்ந்து இரை தேடுவதைக் காணலாம் கால்நடை களைப் பின் தொடர்ந்து சென்று அவை மேயும் போது வெளி வரும் பூச்சிகளைப் பிடித்து உண்ணும். மரப் பொந்துகளிலும், சுவரின் இடுக்குகளிலும் கூடமைக்கும். இனப்பெருக்கக் காலங்களில் ஆண் பறவை கொண்டையைச் சிலுப்பிக்கொண்டு பாடிக்கொண்டிருக்கும். **உணவு:** பூச்சிகள், புழுக்கள், பழங்கள் போன்றவை. **வாழிடம்:** மரங்கள் அடர்ந்த பகுதிகள், முட்புதர்க்காடுகள், வயல்வெளிகளில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# மைனா
## Common Myna
## *Acridotheres tristis*







**உருவ அளவு:** 25 செ.மீ. **அங்க அடையாளம்:** உடல் காப்பிக்கொட்டை நிறத்திலும் தலை கறுப்பாகவும் இருக்கும். பறக்கும் போது இறக்கை களில் உள்ள வெள்ளைத் திட்டுகள் தெளிவாகத் தெரியும். கண்களைச் சுற்றி சிறகுத் தூவிகள் இல்லாத மஞ்சள் தோல் இருக்கும். வாலின் அடிப்பகுதி வெள்ளை நிறம். **பண்புகள்:** பெரும்பாலும் தரையில் நடந்தும், தத்தித்தத்தியும் இரை தேடும். பிற பறவைகளைப்போல ஒலி எழுப்பும். பலவகையான பறவைகளுடன் சேர்ந்து மாலை நேரத் தில் மரத்தில் அடையும். கால்நடைகளைத் தொடர்ந்து சென்று அவை நடந்து செல்லும் போது தரையிலிருந்து வெளிவரும் பூச்சிகளைப் பிடித்து உண்ணும். மரப் பொந்து, பாறை இடுக்குகள், கட்டடத்தில் இருக்கும் ஓட்டைகள் போன்றவற்றில் மைனாக்கள் கூடு கட்டும். **உணவு:** பூச்சிகள், பழங்கள், பூவிலுள்ள தேன் ஆகியவை. **வாழிடம்:** புதர்க்காடுகள், வயல்வெளிகள், மனிதர்கள் வாழும் பகுதிகளில் இவற் றைப் பொதுவாகக் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.







# வரிமுகப் பூங்குருவி
## Orange-headed Thrush
## *Geokichla citrina*






**உருவ அளவு:** 21 செ.மீ. **அங்க அடையாளம்:** இரண்டு உள்ளினங்கள் (Subspecies) உள்ளன. *Geokichla citrina citrina* - தலை, கழுத்து, உடலின் கீழ்ப்பகுதி ஆகியவை ஆரஞ்சு நிறத்திலும், இறக்கைகள், முதுகு ஆகியவை நீலம் கலந்த சாம்பல் நிறத்திலும் இருக்கும். இவை இமய மலைப் பகுதிகளில் இருந்து அக்டோபர்-நவம்பரில் தென்னிந்தியாவுக்கு வலசைவந்து மார்ச்-ஏப்ரலில் மீண்டும் வந்த இடத்துக்கே வலசைபோகும். *Orange-headed Thrush (White-throated) Geokichla citrina cyanota*–இவை தென்னிந்தியாவில் ஆண்டு முழுவதும் தென்படும். இவற்றின் தலையில் கருப்பு வெள்ளை வரிகள் இருக்கும். தலை, கழுத்து, உடலின் கீழ்ப்பகுதி ஆகியவை இளம் ஆரஞ்சு நிறத்திலும், இறக்கைகள், முதுகு ஆகியவை நீலம் கலந்த சாம்பல் நிறத்திலும் இருக்கும். **ஆண்:** முதுகின் மேல்பகுதி (mantle) இறக்கைகளின் நிறத்தை (நீலம் கலந்த சாம்பல் நிறம்) ஒத்திருக்கும். **பெண்:** முதுகின் மேல்பகுதி கரும்பச்சை கலந்த பழுப்பு நிறத்தில் இருக்கும். **பண்புகள்:** மரங்கள், புதர்கள் மண்டியப் பகுதிகளில் தரையில் தத்தித் தத்தி இரை தேடும். இதன் குரலொலி இனிமையான பல சுரங்களைக் கொண்டிருக்கும். **உணவு:** புழு, பூச்சிகள், சிறிய பழங்கள் ஆகியவை. **வாழிடம்:** பல வகையான வனப் பகுதிகளில் உள்ள நீரோடைகளின் அருகில் காணப்படும்.








# கருஞ்சிட்டு
## Indian Robin
## *Copsychus fulicatus*







***உருவ அளவு:*** 19 செ.மீ. ***அங்க அடையாளம்: ஆண்:*** உடல் முழுவதும் கறுப்பாகவும் வாலின் அடிப்பகுதி செம்பழுப்பு நிறமாகவும், தோள் பட்டையில் வெள்ளைத் திட்டும் இருக்கும். **பெண்:** உடல் பழுப்பும் சாம்பலும் கலந்த நிறமாக இருக்கும். வாலின் அடிப்பகுதி செம்பழுப்பு நிறமாக இருக்கும். **பண்புகள்:** பொதுவாக ஜோடியாகத் தரையில் தத்தித்தத்தி செல்லும். தரையில் இருக்கும் சிறிய பாறைகளின் மேல் அமர்ந்திருக்கும். அவ்வப்போது வாலை மேல்நோக்கி உயர்த்தியபடி இருக்கும். அப்போது வாலின் அடியில் உள்ள செம்பழுப்பு நிறம் தெளிவாகத் தெரியும். **உணவு:** கறையான்கள், எறும்புகள், வண்டுகள், வெட்டுக்கிளிகள், தேனீக்கள், வெட்டுக்கிளிகள் பூச்சிகளின் முட்டைகள் போன்றவற்றை உண்ணும். **வாழிடம்:** திறந்த வெளிகளிலும், புதர்க்காடுகளிலும் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.









# குண்டுகரிச்சான்
## Oriental Magpie-Robin
## *Copsychus saularis*





**உருவ அளவு:** 20 செ.மீ. **அங்க அடையாளம்:** தலை, உடலின் மேல் பகுதி, மார்பு முழுவதும் கருநீல நிறம். வயிறு வெள்ளை நிறம். இறக்கைகளில் வெள்ளைக் கோடு இருக்கும். நீண்ட கரிய வாலின் வெளி இறகுகள் வெள்ளையாக இருக்கும். வாலின் அடிப்பகுதியும் வெள்ளையாக இருக்கும். பெண் குண்டுகரிச்சானின் உடல் கருநீல நிறத்துக்குப் பதிலாக சாம்பல் நிறத்தில் இருக்கும். இளம் பறவைகளின் உடல் நிறம் மங்கியும், மார்புப் பகுதியில் சிறகுகள் செதில்செதிலாகவும் இருக்கும். **பண்புகள்:** மரத்தின் உச்சிக் கிளையிலும், மின்கம்பத்தின் மீதும் அமர்ந்து தொடர்ந்து பாடும். அவ்வப்போது வாலை விறைப்பாகத் தூக்கிவைத்துக்கொள்ளும். தரையில் தத்தித்தத்தி செல்லும். இனப்பெருக்கக் காலங்களில் ஆண் பறவை அதிகாலையிலும், மாலையிலும் இடைவிடாமல் பாடிக்கொண்டே இருக்கும். **உணவு:** பூச்சிகள், வண்டுகள், தட்டான்கள், மின்மினிப் பூச்சிகள், கறையான்கள், ஈசல்கள், மண்புழுக்கள், மரவட்டைகள், சிறு பல்லிகள் போன்றவை. **வாழிடம்:** புதர்க்காடுகள், இலையுதிர் காடுகள், மரங்கள் அடர்ந்த மனிதர்கள் வாழும் பகுதிகளில் காணப்படும். வறண்ட நிலப்பகுதிகளில் பொதுவாக இருக்காது. ஆண்டு முழுவதும் காணப்படும்.





# செவ்வலகுப் பூஞ்சிட்டு
## Pale-billed Flowerpecker
## *Dicaeum erythrorhynchos*




**உருவ அளவு:** 8 செ.மீ. **அங்க அடையாளம்:** சின்னஞ்சிறிய பறவை. உடலின் மேல்பகுதி கரும்பச்சையும் பழுப்பும் கலந்த நிறத்திலும் கீழ்ப்பகுதி வெளிறிய பழுப்பு நிறத்திலும் இருக்கும். தடித்தக் கூரான அலகு சற்றே வளைந்திருக்கும். **பண்புகள்:** இந்திய துணைக்கண்டத் தில் மட்டும் காணப்படும் உள்ளூர் பறவை. அலங்காரத்துக்காக சாலை யோரங்களிலும், பூங்காக்களிலும் வளர்க்கப்படும் அயல் மரமான (exotic tree) சிங்கபூர் செர்ரி - Singapore Cherry மரத்தின் பழங்களை விருப்பி உண்ணும். எனவே இம்மரங்கள் இருக்குமிடங்களில் நிச்சய மாக இப்பறவைகள் பறந்து திரிவதைக் காணலாம். இந்தப் பழம் இப்பறவையின் வாய்கொள்ளாத அளவுக்கு இருந்தாலும் தனது அலகால் அதைக் கவ்வியும் அழுத்தியும் அதிலிருக்கும் இனிப்பான சாறைக் குடிக்கும். மரங்களின் மேல் ஒட்டுண்ணியாக வளரும் புல் லுருவி செடிகளின் *(Loranthus sp.)* பழங்களை முழுவதும் உண்டு வேறு ஒரு கிளைக்கோ அல்லது மரத்திற்கோ சென்று அங்கு எச்ச மிடும். இத்தாவரத்தின் விதை பரவலில் இப்பறவை பெரும்பங்கு வகிக்கிறது. **உணவு:** பழங்கள், தேன், சிறு பூச்சிகள் போன்றவை. **வாழிடம்:** அத்தி, புல்லுருவி நிறைந்த காடுகள், விவசாய நிலங்களில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





# ஊர்த் தேன்சிட்டு
## Purple-rumped Sunbird
### *Leptocoma zeylonica*







**உருவ அளவு:** 10 செ.மீ. **அங்க அடையாளம்: ஆண்:** பளபளக்கும் கருஞ்சிவப்பு, பச்சை, நீலம் ஆகிய நிறங்களிலும், மார்பும் வயிறும் மஞ்சள் நிறத்திலும் இருக்கும். கண்கள் சிவப்பு நிறம். **பெண்:** உடலின் மேல்பகுதி வெளிர் பழுப்பு நிறமும், கீழ்ப்பகுதி மஞ்சள் நிறமும் கொண்டது. தொண்டை சாம்பல் நிறம். இறக்கைகள் செம்பழுப்பு நிறம். **பண்புகள்:** மிகவும் சுறுசுறுப்பான பறவை. தனியாகவோ அல் லது இணையுடனோ காணலாம். நம்மூரில் தென்படும் தேன்சிட்டு வகைப் பறவைகளை சிலர் அமெரிக்காவில் காணப்படும் ஹம்மிங் பறவை (Hummingbird) என தவறாக எண்ணுகின்றனர் ஆனால் இவை அந்த இனத்தைச் சேர்ந்த பறவைகள் அல்ல. **உணவு:** பூச்சிகள், சிலந்திகள், தேன், சிறு பழங்கள் போன்றவை. **வாழிடம்:** திறந்தவெளிக்காடுகள், விவசாய நிலங்கள், தோட்டங்கள். ஆண்டு முழுவதும் காணப்படும்.

ஆண் இளம் பறவை







# ஊதா தேன்சிட்டு
## Purple Sunbird
## *Cinnyris asiaticus*








ஆண் இனப்பெருக்க கால தோற்றம்

***உருவ அளவு:*** 10 செ.மீ. ***அங்க அடையாளம்:*** ***ஆண்:*** உடல், தலை, கழுத்து ஆகியவைப் பளபளப்பான கருநீல நிறத்தையும், வயிறு, வாலின் அடிப்பகுதி கருப்பு நிறத்தையும் கொண்டது. சிறிய வளைந்த அலகை உடையது. இனப்பெருக்கக் காலத்தில் ஆண் பளபளக்கும் நீல நிறத்துடனும் தோள் பட்டையில் மஞ்சள் இறகுகள் சிலிர்ப்பிக் கொண்டும் இருக்கும். இறகு உதிரும் பருவத்தில் ஆண் பறவை வெளிர் பழுப்பாக, பளபளப்பின்றி மங்கிய நிறத்தில் இருக்கும். தொண்டை யிலிருந்து உடலின் கீழ்ப்பகுதிவரை அடர் ஊதா நிறத்தில் இருக்கும். ***பெண்:*** உடலின் மேல்பகுதி இளம் பச்சையாகவும், தொண்டை, மார்பு மஞ்சளாகவும் இருக்கும். வெள்ளை நிறப் புருவம் இருக்கும். ***பண்புகள்:*** பூக்களில் உள்ள தேன்தான் இப்பறவைக்கு முக்கிய உணவு. தனியாகவோ ஜோடியாகவோ மலர் விட்டு மலர் தாவி தேன் குடிக்கும். ***உணவு:*** சிறு பூச்சிகள், சிலந்திகள், தேன், சிறு பழங்கள் போன்றவை. ***வாழிடம்:*** திறந்தவெளிக்காடுகள், தோட்டங்கள். ஆண்டு முழுவதும் காணப்படும்.

சிறகுதிரும் பருவம் ஆண்







# தூக்கணாங்குருவி
## Baya Weaver
## *Ploceus philippinus*

***உருவ அளவு:*** 15 செ.மீ. ***அங்க அடையாளம்:*** இனப்பெருக்கம் இல்லாத காலங்களில் ஆண், பெண் இரண்டுமே ஒரே நிறத்தில் தோற்றமளிக்கும். தூரத்தில் இருந்து பார்க்கும் போது கிட்டத்தட்ட பெண் சிட்டுக்குருவியைப் போலவே இருக்கும். ஆனால், கூம்பு போன்ற அலகு இளஞ்சிவப்பு அல்லது பழுப்பு நிறத்தில் இருக்கும்.

***ஆண்:*** இனப்பெருக்கக் காலத்தில் ஆண் தூக்கணாங்குருவியின் தலையிலும் மார்பிலும், முதுகிலும் இறகுகள் மஞ்சள் நிறத்தில் இருக்கும். அலகு கருப்பு நிறமாக மாறும். மற்ற காலங்களில் தலை பழுப்பாகவும், மஞ்சளும், வெள்ளையும் கலந்த நீண்ட புருவமும் இருக்கும். தொண்டை வெள்ளையாகவும், உடலின் மேல்பகுதியில் அடர் பழுப்புத் திட்டுகளும், கோடுகளும் இருக்கும். ***பெண்:*** உடல் பழுப்பு நிறம். அதில் அடர் பழுப்புத் திட்டுகளும், கோடுகளும் இருக்கும். லேசான பழுப்பு நிறப் புருவம் இருக்கும்.

***பண்புகள்:*** பெண் தூக்கணாங்குருவிகளைக் கவர்வதற்காக, ஆண் குருவிகள் நார்களையும், புற்களையும் கொண்டு மிக நேர்த்தியாகக் கூடு கட்டும். இந்தக் கூடு நீண்ட குழல் வடிவத்திலும் நடுவே கொஞ் சம் உப்பியும் இருக்கும். எதிரிகளிடமிருந்து தப்பிக்க மரக்கிளையில் இருந்து தொங்கும் விதத்தில், ஆண் மட்டுமே கூடு கட்டும் பணியில் ஈடுபடும். அவை கட்டிய கூடுகளைப் பெட்டைக் குருவிகள் வந்து சோதனையிட்டு தமக்குப் பிடித்தமான கூட்டினைக் கட்டிய ஆண் குருவியுடன் இணைசேர்ந்து அக்கூட்டினுள் முட்டையிட்டு குஞ்சு பொரிக்கும். கூட்டை நீர்நிலைகளின் மேல் கட்டும். இவை பொது வாகக் கூட்டம்கூட்டமாகப் பறந்து திரியும்.

***உணவு:*** தானியங்கள் மட்டுமல்லாமல் பூச்சிகளையும் உண்ணும்.

***வாழிடம்:*** சமவெளிப் பகுதிகளில், புல்வெளிகளில், வயல்வெளிகளில் காணப்படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.

# வெண்தொண்டைச்சில்லை
## Indian Silverbill
## *Euodice malabarica*





***உருவ அளவு:*** 11-11.5 செ.மீ. ***அங்க அடையாளம்:*** உடலின் மேல்பகுதி வெளிறிய பழுப்பு நிறத்திலும் அல்லது மண் நிறத்திலும் இருக்கும். உடலின் கீழ்ப்பகுதி வெள்ளை நிறத்திலும், கீழ்முதுகு வெள்ளையாக வும், வால் கறுப்பாகவும் இருக்கும். தானியங்களைக் கடித்து, உடைத்து உண்பதற்கு ஏதுவான கூம்பு போன்ற அலகு கருஞ்சாம்பல் நிறத்தில் இருக்கும். ***பண்புகள்:*** பொதுவாக ஜோடியாகவோ அல்லது கூட்டமாகவோ இருக்கும். தரையிலும் இரை தேடும். ஆள் அரவம் கேட்டால் சட்டெனப் பறந்து சென்று அருகில் உள்ள வேலியிலோ, புதரிலோ கூட்டமாகச் சென்று அமரும். புற்களைக் கொண்டு பந்து போன்ற கூடு கட்டும். சில நேரங்களில் தூக்கணாங்குருவியின் பழைய கூட்டிலும் முட்டையிட்டு குஞ்சு பொரிக்கும். ***உணவு:*** புற் களின் விதைகள், தானியங்கள் பூச்சிகள் போன்றவை. ***வாழிடம்:*** பொதுவாக மழை அதிகம் பெய்யும், அல்லது ஈரப்பதம் மிகுந்த பகுதிகளில் இருக்காது. வறண்ட நிலப்பகுதிகளில் உள்ள புல் வெளிகள், புதர்க்காடுகள் ஊர்ப்புறங்கள், வயல்வெளிகளில் தென் படும். ஆண்டு முழுவதும் காணப்படும்.





